பதினெண் கீழ்க்கணக்கினுள் ஒன்றாகிய

# ஆசாரக்கோவை.

---

## தற்சிறப்புப்பாயிரம்.

ஆரெயின் மூன்று மழித்தா னடியேத்தி
யாரிடத்துத் தானறிந்த மாத்திரையா னாசாரம்
யாரு மறிய வறனாய மற்றவற்றை
யாசாரக் கோவை யெனத்தொகுத்தான் றீராத்
திருவாயி லாய திறல்வண் கயத்தூர்ப்*
பெருவாயின் முள்ளியென் பான்.

## நூல்.

நன்றி யறிதல் பொறையுடைமை யின்சொலோ
டின்னாத வெவ்வுயிர்க்குஞ் செய்யாமை கல்வியோ
டொப்புர வாற்ற வறித லறிவுடைமை
நல்லினத் தாரோடு நட்டல் லிவையெட்டுஞ்
சொல்லிய வாசார வித்து. (க)

பிறப்பு நெடுவாழ்க்கை செல்வம் வனப்பு
நிலக்கிழமை மீக்கூற்றங் கல்விநோ யின்மை
யிலக்கணத்தா லிவ்வெட்டு மெய்துப வென்று
மொழுக்கம் பிழையா தவர். (உ)

தக்கிணை வேள்வி தவங்கல்வி யிந்நான்கு
முப்பா லொழுக்கினாற் காத்துய்க்க வுய்யாக்கா
லெப்பாலு மாகா கெடும். (ங)

வைகறை யாமந் துயிலெழுந்து தான்செய்யு
நல்லறமு மொண்பொருளுஞ் சிந்தித்து வாய்வதிற்
றந்தையுந் தாயுந் தொழூதெழுக வென்பதே
முந்தையோர் கண்ட முறை. (ச)

---

* 'வெண்கயத்தூர்' என்றும் பாடம்.

எச்சிலார் தீண்டார் பசுப்பார்ப்பார் தீத்தேவ
ருச்சந் தலையோ டிவையென்ப யாவருந்
திட்பத்தாற் றீண்டாப் பொருள். (ரு)

எச்சிலார் நோக்கார் புலைதிங்க ளுய்நாயி
றத்தக வீழ்மீனோ டிவ்வைந்துந் தெற்றென
நன்கறிவார் நாளும் விரைந்து. (சா)

நாளந்தி கோறின்று கண்கழீஇத் தெய்வத்தைத்
தானறியு மாற்றாற் றொழுதெழுக வல்கந்தி
நின்று தொழுதல் பழி. (எ)

உடுத்தலா னீராடா ரொன்றுடுத் துண்ணா
ருடுத்தாடை நீருட் பிழியார் விழுத்தக்கா
ரொன்றுடுத் தென்று மவைபுகா ரென்பதே
முந்தையோர் கண்ட முறை. (அ)

நீரு ணிழற்புரிந்து நோக்கார் நிலமிராக்
கீறா ரிராமரமுஞ் சேரா ரிடரெனினு
நீர்த்தொடா தெண்ணெ யுரையா ருரைத்தபி
னீர்த்தொடார் நோக்கார் புலை. (கூ)

நீராடும் போழ்தி னெறிப்பட்டா ரெஞ்ஞான்று
நீந்தா ருமியார் திளையார் விளையாடார்
காய்ந்த தெனினுந் தலையொழிந் தாடாரே
யாய்ந்த வறிவி னவர். (க0)

ஐம்பூதம் பார்ப்பார் பசுத்திங்க ளுயிறு
தம்பூத மென்னு திகழ்வானேற் றன்மெய்க்க
ணைம்பூத மன்றே கெடும். (கக)

அரச னுவாத்தியான் றாய்தந்தை தம்மு
னிகரில் குரவ ரிவரிவரைத்
தேவரைப் போலத் தொழுதெழுக வென்பதே
யாவருங் கண்ட நெறி. (கஉ)

குரவ ருரையிகந்து செய்யார் விரதங்
குறையுடையார் தீர மறவார் நிறையுவா
மெல்கோலுந் தின்னார் மரங்குறையா ரென்பதே
நல்லறி வாளர் துணிவு. (கங)

நீராடிக் கால்கழுவி வாய்பூசி மண்டலஞ்செய்
துண்டாரே யுண்டா ரெனப்படுவா ரல்லாதா
ருண்டார்போல் வாய்பூசிச் செல்வ ரதுவெடுத்துக்
கொண்டா ரரக்கர் குறித்து. (கச)

காலினீர் நீங்காமை யுண்டிடுக பள்ளியு
மீரம் புலராமை யேறற்க வென்பதே
பேரறி வாளர் துணிவு. (கரு)

உண்ணுங்கா லோக்குந் திசைகிழக்குக் கண்ணமர்ந்து
தூங்கான் றுளங்காமை நன்கிரீஇ யாண்டும்
பிறிதியாது நோக்கா னுரையான் றொழுதுகொண்
டுண்க வுகாஅமை நன்கு. (கசு)

விருந்தினர் மூத்தோர் பசுசிறை பிள்ளை
யிவர்க்கூண் கொடுத்தல்லா லுண்ணாரே யென்று
மொழுக்கம் பிழையா தவர். (கஎ)

ஒழிந்த திசையும் வழிமுறையா னல்ல
முகட்டு வழியூண் புகழ்ந்தா ரிகழ்ந்தார்
முகட்டு வழிகட்டிற் பாடு. (கஅ)

கிடந்துண்ணார் நின்றுண்ணார் வெள்ளிடையு முண்ணார்
சிறந்து மிகவுண்ணார் கட்டின்மே லுண்ணா
ரிறந்தொன்றுந் தின்னற்க நின்று. (ககூ)

மூன்றுவ்வார் முன்னெழார் மிக்கூறு ரூணின்க
ணென்பெறினு மாற்ற வலமிரார் தம்மிற்
பெரியார் திரவிருந்தக் கால். (உ0)

கைப்பன வெல்லாங் கடைதலை தித்திப்ப
மெச்சும் வகையா லொழிந்த விடையாகத்
துய்க்க முறைவகையா லூண். (உக)

முதியவரைப் பக்கத்து வையார் விதிமுறையா
லுண்பவற் றெல்லாஞ் சிறிய கடைப்பிடித்
தன்பிற் றிரியாமை யாசார நீங்காமை
பண்பினா னீக்கல் கலம். (உஉ)

இழியாமை நன்குமிழ்ந் தெச்சி லறவா
யடியோடு நன்கு துடைத்து வடி வுடைத்தா
முக்காற் குடித்துத் துடைத்து முகத்துறுப்
பொத்த வகையால் விரலுறுத்தி வாய்பூசன்
மிக்கவர் கண்ட நெறி. (உங)

இருகையாற் றண்ணீர் பருகா ரொருகையாற்
கொள்ளார் கொடாஅர் குரவர்க் கிருகை
சொறியா ருடம்பு மடுத்து. (உச)

அந்திப் பொழுது கிடவார் நடவாரே
யுண்ணார் வெகுளார் விளக்கிகழார் முன்னந்தி
யல்குண் டடங்கல் வழி. (உரு)

கிடக்குங்காற் கைகூப்பித் தெய்வந் தொழுது
வடக்கொடு கோணந் தலைசெய்யார் மீக்கோ
ளுடற்கொடுத்துச் சேர்தல் வழி. (உசா)

இருதேவர் பார்ப்பா ரிடைபோகார் தும்மினு
மிக்கார் வழுத்திற் றொழுதெழுக வொப்பார்க்
குடன்செல்ல லுள்ள முவந்து. (உஎ)

புற்பைங்கூ ழாப்பி சுடலை வழிதீர்த்தந்
தேவ குலநிழ லானிலை வெண்பலியென்
றீரைந்தின் கண்ணு முமிழ்வோ டிருபுலனுஞ்
சோரா ருணர்வுடை யார். (உஅ)

பகற்றெற்கு நோக்கா ரிராவடக்கு நோக்கார்
பகற்பெய்யார் தீயினு ணீர். (௨௯)

நடைவரவு நீரகத்து நின்றுவாய் பூசார்
வழிநிலை நீருள்ளும் பூசார் மனத்தால்
வரைந்துகொண் டல்லது பூசார் கலத்தினாற்
பெய்பூச்சுச் சீரா தெனின். (௩௰)

பிறர்மனை கட்களவு சூது கொலையோ
டறனறிந்தா ரிவ்வைந்து நோக்கார்-திறனிலரென்
றெள்ளப் படுவதூஉ மன்றி நிரயத்துச்
செல்வழி யுய்த்திடு தலால். (௩௧)

பொய்குறளை வெளவ லழுக்கா றிவைநான்கு
மையந்தீர் காட்சியார் சிந்தியார் சிந்திப்பி
னையம் புகுவித் தருநிரயத் துய்த்திடுந்
தெய்வமுஞ் செற்று விடும். (௩௨)

தமக்கென் றுலையேற்றார் தம்பொருட்டுக் கொள்ளா
ரடுங்கலை யெச்சிற் படாஅர் மனைப்பலி
யூட்டின்மை கண்டுண்க வூண். (௩௩)

உயர்ந்ததின் மேலிரா ருள்ளழிவு செய்யா
ரிறந்தின்னா செய்தக் கடைத்துங் குரவ
ரிளங்கிளைக ளெண்ணு மிடத்து. (௩௪)

கண்ணெச்சில் கண்ணூட்டார் காலொடு காலுறையார்
புண்ணிய மாய தலையோ டுறுப்புறுத்த
நுண்ணிய நூலறிவி னார். (௩௫)

நாழி மணைமே லிரியார் மணைகவிழார்
கோடி கடையுள் விரியார் கடைத்தலை
யோராது கட்டிற் படாஅ ரறியாதார்
தந்தலைக்க ணில்லா விடல். (௩௬)

துடைப்பந் துகட்காடு புல்லிதழ்ச் செத்தல்
கருங்கலங் கட்டில் கிழிந்ததனோ டை[illegible]
பரப்பற்க பந்த ரகத்து. (௩௭)

காட்டுக் களைந்து கலங்கழீஇ யில்லத்தை
யாப்பினீ ரெங்குந் தெளித்துச் சிறுகாலை
நீர்ச்சால் கரக நிறைய மலரணிந்
தில்லம் பொலிய வடுப்பினுட் டீப்பெய்க
நல்ல துறல்வேண்டு வார். (௩௮)

அட்டமியு மேனை யுவாவும் பதினான்கு
மப்பூமி காப்பார்க் குறுகண்ணு மிக்க
நிலத்துளக்கு விண்ணதிர்ப்பு வாலாமை பார்ப்பா
ரிலங்குநூ லோதாத நாள். (௩௯)

கல்லியாணந் தேவர் பிதிர்விழா வேள்வியென்
றைவகை நாளு மிகழா தறஞ்செய்க
பெய்க விருந்திற்குங் கூழ். (௪0)

உடைநடை சொற்சோர்வு வைதலிந் நான்கு
நிலைமைக்குங் கல்விக்கு மாண்மைக்குந் தத்தங்
குடிமைக்குந் தக்க செயல். (௪௧)

பழியா ரிழியார் பலருள் ளுறங்கா
ரிசையாத நேர்ந்து கரவா ரிசையின்றி
யில்லாரை யெள்ளி யிகந்துரையார் தள்ளியுந்
தாங்கருங் கேள்வி யவர். (௪௨)

மின்னொளியும் வீழ்மீனும் வேசையர்கள் கோலமுந்
தம்மொளி வேண்டுவார் நோக்கார் பகற்கிழவோன்
முன்னொளியும் பின்னொளியு மற்று. (௪௩)

படிறும் பயனிலவும் பட்டி யுரையும்
வசையும் புறனு முரையாரே யென்று
மசையாத வுள்ளத் தவர். ([illegible])

தெறியொடு கல்லேறு வீளை விளியே
விகிர்தங் கதங்கரத்தல் கைபுடை தோன்ற
வுறுப்புச் செகுத்தலோ டின்னவை யெல்லாம்
பயிற்றார் நெறிப்பட் டவர். (சரு)

முறுவ லினிதுரை கானீர் மணைபாய்
கிடக்கையோ டிவ்வைந்து மென்ப தலைச்சென்றார்க்
கூணொடு செய்யுஞ் சிறப்பு. (சசா)

கூறுத்த பகைமுனையுங் கள்ளாட்டுக் கண்ணு
நிறுத்த மனமில்லார் சேரி யகத்துங்
குணநோக்கிக் கொண்டவர் கோள்விட் டொழியு
நிகரி லறிவினார் வேண்டார் பலர்தொகு
நீர்க்கரையு நீடு நிலை. (சஎ)

முளிபுல்லுங் கானமுஞ் சேரார்தீக் கூட்டார்
துளிவீழக் கால்பரப்பி யோடார் தெளிவிலாக்
கானந் தமிய ரியங்கார் துளியஃகி
நல்குர வாற்றப் பெருகினுஞ் செய்யாரே
தொல்வரவிற் றீர்ந்த தொழில். (சஅ)

பார்ப்பனயுந் தேவ குலனுஞ் சுடுகாடு
மூரில் வழியெழுந்த வொற்றை முதுமரனுந்
தாமே தமியர் புகாஅர் பகல்வளரார்
நோயின்மை வேண்டு பவர். (சகூ)

எழுச்சிக்கட் பிறகூவார் தும்மார் வழுக்கியு
மெங்குற்றுச் சேறிரோ வென்னாரே முன்புக்
கெதிர்முகமா நின்று முறையா ரிகுசார்வுங்
கொள்வர் குரவர் வலம். (ருo)

உடம்புநன் றென்றுரையா ரூதார் விளக்கு
மடுப்பினுட் டீநந்தக் கொள்ளா ரதனைப்
படக்காயார் தம்மேற் குறித்து. (ருக)

யாதொன்று மேரூர் செருப்பு வெயின்மறையா
ரான்றவிந்த மூத்த விழுமியார் தம்மோடுங்
கோராறு செல்லு மிடத்து. (ருஉ)

வான்முறை யான்வந்த நான்மறை யாளனை
மேன்முறைப் பாற்றங் குரவனைப் போலொழுக
னூன்முறை யாளர் துணிவு. (ருங)

கால்வாய்த் தொழுவு சமய மெழுந்திருப்
பாசார மென்ப குரவர்க் கிவையிவை
சாரத்தாற் சொல்லிய மூன்று. (ருச)

துறந்தாரைப் பேணலு நாணலுந் தாங் கற்ற
மறந்துங் குரவர்முற் சொல்லாமை மூன்றுந்
திறங்கண்டார் கண்ட நெறி. (ருரு)

பார்ப்பார் தவரே சுமந்தார் பிணிபட்டார்
மூத்தா ரிளையார் பசுப்பெண்டி ரென்றிவர்கட்
காற்ற வழிவிலங்கி னாரே பிறப்பினுட்
போற்றி யெனப்படு வார். (ருசா)

ஈன்றாண் மகடன் னுடன்பிறந்தா ளாயினுஞ்
சான்றோர் தமித்தா வுறையற்க வைம்புலனுந்
தாங்கற் கரிதாக லான். (ருஎ)

கடைவிலக்கிற் காயார் கழிகிழமை செய்யார்
கொடையளிக்கட் பொச்சாவார் கோலநேர் செய்யா
ரிடையறுத்துப் போகிப் பிறனொருவற் சேரார்
கடைபோக வாழ்துமென் பார். (ருஅ)

தமக்குற்ற கட்டுரையுந் தம்மிற் பெரியா
ருரைத்ததற் குற்ற வுரையுமஃ தன்றிப்
பிறர்க்குற்ற கட்டுரையுஞ் சொல்லற்க சொல்லின்
வடுக்குற்ற மாகி விடும். (ருகூ)

பெரியா ருவப்பன தாமுவவா ரில்லஞ்
சிறியாரைக் கொண்டு புகாஅ—ரறிவறியாப்
பிள்ளையே யாயினு மிழித்துரையார் தம்மோ
டளவளா வில்லா விடத்து. (சு௦)

முனியார் துனியார் முகத்தெதிர் நில்லார்
தனிமை யிடத்துக்கட் டங்கருமஞ் சொல்லா
ரினியவை யாமறிது மென்னார் கசிவின்று
காக்கைவெள் ளென்னு மெனின். (சுக)

உமிவு முயர்ந்துழி யேறலும் பாக்கும்
வகையி லுரையும் வளர்ச்சியு மைந்தும்
புணரார் பெரியா ரகத்து. (சுஉ)

இறைவர்முற் செல்வமுங் கல்வியுந் தேசுங்
குணனுங் குலமுடையார் கூறார் பகைவர்போற்
பாரித்துப் பல்காற் பயின்று. (சுங)

பெரியார் மனையகத்துந் தேவ குலத்தும்
வணங்கார் குரவரையுங் கண்டாற் கணங்கொடு
நேர்பெரியார் செல்லு மிடத்து. (சுச)

நகையொடு கொட்டாவி காறிப்புத் தும்ம
லிவையும் பெரியார்முற் செய்யாரே செய்யி
னசையாது நிற்கும் பழி. (சுரு)

நின்றக்கா னிற்க வடக்கத்தா லென்று
மிருந்தக்கா லேவாமை யேகார் பெருந்தக்கார்
சொல்லிற் செவிகொடுத்துக் கேட்டீக மீட்டும்
வினவற்க சொல்லொழிந்தக் கால். (சுசு)

உடுக்கை யிகவார் செவிசொறண்டார் கைமே
லெடுத்துரையார் பெண்டிர்மே னோக்கார் செவிச்சொல்லுங்
கொள்ளார் பெரியா ரகத்து. (சுஎ)

விரைந்துரையார் மேன்மே லுரையார்பொய் யாய
பரந்துரையார் பாரித் துரையா—ரொருங்கெனைத்துஞ்
சில்லெழுத்தி னாலே பொருளடங்கக் காலத்தாற்
சொல்லுக செவ்வி யறிந்து. (சுஅ)

தம்மேனி நோக்கார் தலையுளரார் கைந்நொடியார்
எம்மேனி யாயினு நோக்கார் தலைமகன்
றன்மேனி யல்லாற் பிற. (சுகூ)

பிறரொடு மந்திரங் கொள்ளா ரிறைவனைச்
சாரார் செவியோரார் சாரிற் பிறிதொன்று
தேர்வார்போ னிற்க திரிந்து. (எ0)

துன்பத்துட் டுன்புற்று வாழ்தலு மின்பத்
தின்ப வகையா னொழுகலு—மன்பிற்
செறப்பட்டா ரில்லம் புகாமையிம் மூன்றுந்
திறப்பட்டார் கண்ணே யுள. (எக)

தெறுவந்துந் தங்குரவர் பேருரையா ரில்லத்
துறுமி நெடிது மிராஅர் பெரியாரை
யென்று முறைகொண்டு கூறார் புலையரையு
நன்கறிவார் கூறார் முறை. (எ௨)

புழைக்கடைப்பு காரரசன் கோட்டி யுரிமை
யிவற்றுக்கட் செவ்வியார் நோக்காரோ யவ்வத்
தொழிற்குரிய ரல்லா தவர். (எ௩)

வண்ண மகளி ரிடத்தொடு தம்மிட
மொள்ளிய மென்பா ரிடங்கொள்ளார் தெள்ளி
மிகக்கிழமை யுண்டெனினும் வேண்டாவே பெண்டிர்க்
குவப்பன வேறாய் விடும். (எ௪)

நிரல்படச் செல்லார் நிழன்மிதித்து நில்லா
ருண்டிடை யாய்ந்துரையா ரூர்முனிவ செய்யா
ரரசர் படையளவுஞ் சொல்லாரே யென்றுங்
கடைபோக வாழ்துமென் பார். (எ௫)

அளையுறை பாம்பு மரசு நெருப்பு
முழையுறை சீயமு மென்றிவை நான்கு
மிளைய வெளிய பயின்றனவென் றெண்ணி
யிகழி னிழுக்கந் தரும். (எசு)

அறத்தொடு கல்யாணமாள்வினை கூரை
இறப்பப் பெருகியக் கண்ணுந்—திறப்பட்டார்
மன்னரின் மேம்படச் செய்யற்க செய்பவேல்
மன்னிய செல்வங் கெடும். (எஎ)

உண்டது கேளார் குரவரை மிக்காரைக்
கண்டுழிக்கண் டாமந் திரியார் புலையரையு
முண்டது கேளார் விடல். (எஅ)

கிடந்தாரைக் கால்கழுவார் பூப்பெய்யார் சாந்த
மறந்தானு மெஞ்ஞான்றும் பூசார் கிடந்தார்—
ணில்லாரங் கட்டின் மிசை. (எகூ)

[illegible]தவிப் பயனுளையா ருண்டி பழியா
ரறத்தொடு தானோற்ற நோன்பு வியவார் [illegible]
திறத்துளி வாழ்துமென் பார். (அ0)

எய்தாத வேண்டா ரிரங்கா ரிழந்ததற்குக்
கைவாரா வந்த விடுக்கண் மனமழுங்கார்
மெய்யாய காட்சி யவர். (அக)

தலைக்கிட்ட பூமோவார் மோந்தபூ சூடார்
பசுக்கொடுப்பிற் பார்ப்பார்கைக் கொள்ளா ரென்றும்
புலைக்கெச்சி னீட்டார் விடல். (அஉ)

மோட்டுடைப் போர்வையோ டேக்கழுத்தந் தாளசைப்புக்
காட்டுளே யாறும் பழித்தார் மரந்தம்மின்
மூத்த வுளவாக லான். (அங)

நிலையினைக்த நற்கருமஞ் செய்யுங்கா லென்றும்
புலையர்வாய் நாட்கேட்டுச் செய்யார்—தொலைவில்லா
வந்தணர்வாய் நாட்கேட்டுச் செய்க வவர்வாய்ச்சொ
லென்றும் பிழைப்ப தில. (அச)

# ஆசாரக்கோவை.



**சங்கம்**—மதுரையிலே பாண்டியராசாக்களால் ஏற்படுத்தப்பட்ட சங்கங்கள் மூன்று. அவை தலைச்சங்கம் - இடைச்சங்கம் - கடைச்சங்கம் எனப் பெயர் பெறும்.

**கடைச்சங்கம்**—கடைச்சங்கமிருந்து தமிழ் ஆராய்ச்சி செய்தவர்கள் நக்கீரர் முதலிய நாற்பத்தொன்பதின்மர் என்ப. அவரை உள்ளிட்டு நானூற்றுநாற்பத்தொன்பதின்மர் பாடினார்என்ப. அவர்களால் பாடப்பட்டன கூத்தும்-வரியும்-பேரிசையும்-சிற்றிசையும்-பத்துப்பாட்டும் - எட்டுத்தொகையும் - பதினெண்கீழ்க்கணக்கும் என்ற இவை முதலானவைகளாம்.

**பதினெண்கீழ்க்கணக்கு**—கீழ்க்கணக்காவன அடிவரையறையில் சிறுமையைஉடையன என்பதாம். இன்னின்னபாட்டு இத்தனை இத்தனை அடிகள் வரையில் பாடப்பெறும் என்று பேரிலக்கணங்களில் வரையறை செய்யப்பட்டிருக்கின்றது. அவ்வரையறையில் சிறுமை உடையனவற்றைக் (கணக்கில் கீழ்ப்பட்டன) கீழ்க்கணக்கென வழங்கலாயிற்று: அக்கீழ்க்கணக்குத்தாம்.—

நாலடி நான்மணி நானாற்ப தைந்திணைமுப்
பால்கடுகங் கோவை பழமொழி-மாமூல
மின்னிலைசொல் காஞ்சியுட னேலாதி யென்பவே
கைந்நிலைய வாங்கீழ்க் கணக்கு.

என்ற பழம்பாடலிற் கூறப்பட்டனவாம். அவை **பதினெண்கீழ்க்கணக்கு** எனவழங்கப்பெறுகின்றன. ஆயினும் இவைகளில் ஒன்று இன்னதென இப்பொழுது துணிந்து சொல்லக்கூடவில்லை. இப்பொழுது கிடைக்கின்றவைகளாய் அரியபுலவர்களால் அங்கீகரிக்கப்பட்டிருப்பன அடியிற்கண்ட பதினேழுமாம். அவையாவன:—

| | |
|---|---|
| நாலடியார் | ஐந்திணையைம்பது |
| நான்மணிக்கடிகை | ஐந்திணையெழுபது |
| இன்னாநாற்பது | திணைமொழியைம்பது |
| இனியாநாற்பது | திணைமாலைநூற்றைம்பது |
| கார்நாற்பது | முப்பால்(திருக்குறள்) |
| களவழிநாற்பது | திரிகடுகம் |

ஆசாரக்கோவை.

| | |
|---|---|
| பழமொழி. | முதுமொழிக்காஞ்சி. |
| சிறுபஞ்சமூலம். | ஏலாதி. |

**ஆசாரக்கோவை**—பதினெண்கீழ்க்கணக்கில் ஒன்றான இந்நூல் **பெருவாயின்முள்ளியார்** என்பவரால் இயற்றப்பட்டு கடைச்சங்கத்தில் அரங்கேற்றப்பட்டு அச்சங்கப்புலவரால் அங்கீகரிக்கப்பட்டது. இவர் சைவர் என்பதும் இந்நூலுக்கு ஆதாரம் ஆரிடம் என்பதும் இந்நூலின்தற்சிறப்புப்பாயிரத்தால் அறியப்படும். (ஆரிடம்-இருடிகள் சொல்லியநூல்கள் அவை இதிகாசம்-புராணம்-ஸ்மிருதிஎன்பனவாம்). இந்நூலிற்கூறப்பட்ட ஆசாரங்கள் மனு-பராசர ஸ்மிருதிகளை வெகுவாய்ப்பின்பற்றாமல் சுக்கிரபகவானால் அருளிச்செய்ய

ப்பட்ட சுக்கிரஸ்மிருதியை அநுசரித்திருப்பதாகச் சில வடநூற்புலவரால் அறியப் படுகின்றது. மன்னரைச்சேர்ந்தொழுகலைப்பற்றிக் கூறிய விடத்தில் ஸ்ரீமகாபாரதத்தில் பஞ்சபாண்டவர் வனவாசமுடித்தபின் விராடராசனிடம் அஞ்ஞாதவாசம் பண்ணப்போகுமுன்னே அவர்களுக்குத் தௌமியமுனிவரால் உபதேசிக்கப்பட்டவிஷயங்களை அநுசரித்திருப்பதாகக்காணப்படுகின்றது. இந்நூலிற்கூறப்பட்டவைகளில் சிற்சில ஆசாரங்கள் இப்போது வழக்கத்தில் இல்லாமையால் அவைகள் வழக்கிழந்தனபோலும்.

**சிறப்பு**—இந்நூலினின்றும் சிலபாடல்கள் சீவகசிந்தாமணி-பத்துப்பாட்டு முதலிய இலக்கிய உரைகளிலும் நன்னூல்முதலிய இலக்கண உரைகளிலும் மேற்கோள்களாகக் காட்டப்பட்டிருக்கின்றன. இதனால் இதன் சிறப்பு விளங்கும்.

**வழிநூல்**—இருடிகள்வாக்கியங்களைத்தமிழில்பெயர்த்ததாமாதலின் இந்நூல் மொழிபெயர்ப்பின்பாற்பட்ட வழிநூலாகும். இலக்கணவிளக்க ஆசிரியர் வழிநூற்சூத்திரவுரையில் மொழிபெயர்ப்புநூலுக்கு ஆசாரக்கோவையை உதாரணமாகக்காட்டியிருக்கின்றனர். நூல்கள் பொருள்-இடம்-காலம்-தொழில்-உறுப்பு-எல்லை-செய்தோன்-செய்வித்தோன்-பெயராலே பெயர்பெறுதலால், ஆசாரக்கோவையைப் பொருள்பற்றிவந்த பெயரென்பர்.

**இதில்கூறப்பட்டவிஷயங்கள்**—இந்நூலில், உண்ணல்-உடுத்தல்-உறங்கல்-மலசலங்கழித்தல்-நீராடுதல்-வாய்பூசுதல்முதலிய நித்தியகடன்களைக்கழிக்குமாறும், ஐங்குரவர்பால் ஒழுகுமாறும், இல்லொழுக்கினைச்செவ்வனே நடத்துமாறும், பொதுமகளிர் - சூது - கள் - சிற்றினம்முதலியன நீக்குமாறும், மன்னரைச் சேர்ந்தொழுகுமாறும், இல்வாழ்க்கை சித்திபெற்றுச் சிறப்பெய்துமாறும் பத்தழகுடனே பண்புறக்கூறப்பட் டிருக்கின்றன.

**இலக்கண அமைதி**.—ஆசாரம் என்பது ஒழுக்கம் என்று பொருள்படுகின்ற வடமொழிப்பெயர். கோவை என்பது (கோ - பகுதி, வை - தொழிற்பெயர்விகுதி) அது ஆகுபெயராய் மாலையை உணர்த்தும். அது உவமையாகுபெயராய் நூலை உணர்த்தும். இது இருமடியாகுபெயர். மணியைக்கோத்த மாலை மணிமாலை என்பதுபோல ஆசாரங்களைக்கோத்த கோவை ஆசாரக்கோவை என இரண்டாம்வேற்றுமை உருபும்பயனும் உடன்றொக்க தொகைநிலைத்தொடர்மொழியாகக் கொள்ளலாம். ஆசாரங்களது கோவை எனச் செய்யுட் டற்கிழமைப்பொருளில் வந்த ஆறும்வேற்றுமைத் தொகைநிலைத்தொடர்மொழி எனக் கொள்வதும் பொருந்தும். ஆசாரங்களின் கோவையான நூல் என ஆறும்வேற்றுமைத் தொகைக்களத்துப்பிறந்த அன்மொழித்தொகைப்பெயர் என்னலாகாதோ எனின், அன்மொழித்தொகைச்சொல் இருமொழியுந் தொக்க தொகையாற்றலால் பிறிது பொருளுணர்த்திவரும்; இஃது அங்ஙனம் பிறிதுபொருளுணர்த்தாமல் வருதலால் இதனை அன்மொழித்தொகைப்பெயர் என்னலாகாதென்க. கோவை என்பதே நியதியாக நூலை உணர்த்துமாகலின் ஆசாரக்கோவை என்பதனை அடையடுத்த பின்மொழியாகுபெயரெனக்கூறலும் ஒன்று. ஆசாரம்+கோவை. 'மவ்வீறொற்றொழிந்து' (ந-சூ-219). என்றபடி மகரங்கெட்டு (ஆசார+கோவை), 'இயல்பினும் விதியினும் நின்ற உயிர்முன் கசதப மிகும்' (ந-சூ-165). என்றபடி வலிமிக்கது (ஆசாரக்கோவை). ஆசாரம் என்பது வடமொழியாதலின் 'இடையுரிவடசொலினியம்பிய கொளாதவும்' (ந - சூ - 239). என்ற சூத்திரத்தில் அமைத்துக்கொள்வதுமாம்.

**உரை** - இந்நூலுக்குப் பழைய உரை ஒன்று வழங்குகின்றது. அது நச்சினார்க்கினியர் உரை எனத் துணிந்து சொல்வதற்கான ஆதாரம் இல்லை.

There is a great mass of noble writing ready to hand in Tamil and Telugu folk literature, especially in the former...To raise these books in books in public estimation, to exhibit the true products of the Dravidian mind, would be a task worthy of the ripest scholar and the most enlightened government. I would especially draw attention to the *Eighteen Books* that are said to have received the sanction of the Madura college, and are among the oldest specimens of Dravidian literature".—Charles E. Gover, member of the Royal Asiatic Society.

## தற்சிறப்புப்பாயிரம்.

" தெய்வவணக்கமும் செயப்படுபொருளும்
எய்தவுரைப்பது தற்சிறப்பாகும்"

என்பதிலக்கணம். கடவுள் வணக்கமும் செய்யப்பட்ட நூலின்பொருளும் அமையும்படி நூலின்முகத்துப் பாடிவைக்கப்பட்ட பாடல் தற்சிறப்புப்பாயிரம். பதினெண்கீழ்க்கணக்குக்காரரும் சம்பந்தர் சடகோபர் முதலாயினோரும் தத்தம் நூற்குத் தாமே பாயிரங் கூறினரென்றார் பிரயோக விவேகமென்னும் இலக்கண நூலாசிரியர். இதன்படி இந்நூலின் தற்சிறப்புப்பாயிரம் பெருவாயின் முள்ளியார் உரைத்ததாகின்றது. "ஆரெயில் மூன்று மழித்தானடியேத்தி" என்றதில் தெய்வவணக்கமும், "ஆரிடத்து...ஆசாரம்...தொகுத்தான்" என்றதில் செயப்படுபொருளுங் கூறியவாறு காண்க. (ஆசிரியர் பேர் முள்ளி).

(வசனக்கிரமம்) தீராத் திருவாயிலாய திறல் வண்கயத்தூர்ப் பெருவாயின்முள்ளி என்பான், ஆரிடத்துத் தானறிந்த மாத்திரையான் ஆசாரம் யாரும் அறிய அறனாய அவற்றை, ஆர் எயில் மூன்றும் அழித்தான் அடியை ஏத்தி, ஆசாரக்கோவை எனத் தொகுத்தான். மற்று-அசை.

(பதவுரை) தீரா-நீங்காத,திரு-இலக்குமிக்கு,வாயிலாய-வாயிலாகிய,திறல்-வலிமையை உடைய, வண்-வளப்பம்பொருந்திய, கயத்தூர்-கயத்தூரைச் சேர்ந்த, பெருவாயில்-பெருவாயில்மகனாகிய, முள்ளி என்பான்-முள்ளி என்னும் பெயரை உடையான்;

ஆரிடத்து - இருடிகள்சொல்லிய நூல்களில், தான் அறிந்த மாத்திரையான்-தான் அறிந்த அளவாக, ஆசாரம்-சதாசாரங்களை,யாரும்-எல்லாரும், அறிய-அறியும் பொருட்டாக, அறனாய அவற்றை-அறத்தின்பாற்பட்ட அவ்வாசாரங்களை;

ஆர்-(பகைவரால் அழித்தற்கு) அருமையான, எயில்மூன்றும்-மும்மதிலையும் (அதாவது திரிபுரத்தை), அழித்தான்-(தமது நகையினாலே) அழித்தவரான சிவபெருமானுடைய, அடி-திருவடிகளை, எத்தி-துதித்து;

ஆசாரக்கோவை-ஆசாரக்கோவை, என-எனச்செய்து, தொகுத்தான்-திரட்டினான்.

(கருத்து) இலக்குமிவிலாசம் பொருந்திய வண்கயத்தூர்ப் பெருவாயின் முள்ளி என்பவர், சிவபெருமானுடைய திருவடிகளை வணங்கி, இருடிகள் நூலில்சொல்லப்பட்ட சதாசாரங்களைத்திரட்டி ஆசாரக்கோவை என்னும் இந்நூலை அருளிச்செய்தார்.

In order that others might have a knowledge of the prescribed rites, as far as he understood them from the works of Rishis, Peruvayil

Mulli of the fertile Kayathur supposed to be the abode of Lakshmi, compiled those prescribed rites into a work named Acharakkovai, having made obeisance to the God who destroyed the three indestructible fortification.

### ஆரெயில்மூன்றும் அழித்ததகதை:—

தாரகாசூரன் என்பவனுக்கு மூன்றுபுத்திரர்கள் உண்டு. அம்மூவரும் தவம்பண்ணிப் பசும்பொன் வெண்பொன் கரும்பொன்களால் மதில்கள்வைக் கப்பட்ட மூன்று நகரங்களைப்பெற்றனர். இவர்கள் பல அசுரர்களுடனே தாம் நினைத்த இடங்களுக்கு அந்நகரங்களோடு பறந்துசென்று பல இடங்க ளைப் பாழ்படுத்திவருகையில், தேவர்முதலானவர்கள் சிவபெருமானிடத்தில் முறையிட்டுக்கொண்டனர். சிவபெருமான் மகாமேருவை வில்லாகவும், ஆதி சேஷனை நாணாகவும் விஷ்ணுவை அம்பாகவும் பிரமனைச் சாரதியாகவும் அ மைத்துக்கொண்டுபோய் புன்னகைசெய்து அசுரர்களை மேற்கூறப்பட்ட மூ ன்றுபட்டணங்களுடனே எரித்துவிட்டனர். (வைணவர்களில் விஷ்ணு அறு புரமழித்ததாக ஒரு ஐதிஹ்யமுண்டு).

ஆக்கியோன் பெயரே வழியே யெல்லை
நூற்பெயர் யாப்பே நுதலிய பொருளே
கேட்போர் பயனொ டாயெண் பொருளும்
வாய்ப்பக் காட்டல் பாயிரத் தியல்பே.

என்னும் சிறப்புப்பாயிரப் பொதுவிதியை ஒட்டிப்பார்க்கையில்,

ஆக்கியோன்பெயர்————பெருவாயின்முள்ளியார்
வழி————————ஆரிடத்தின்வழி
எல்லை——————தமிழ்நாட்டெல்லை)
நூற்பெயர்——————ஆசாரக்கோவை
யாப்பு————————(சிறுநூல்கள் கற்றபின் இதுகற்கலாம்)
நுதலியபொருள்————ஆசாரம்
கேட்போர்——————(வடநூல் அறியாத) தமிழர்
பயன்————————(நற்பேறுபெறுதல்)
என்பன பெறப்படும்.

காலங் களனே காரண மென்றிம்
மூவகை யேற்றி மொழிநரு முளரே

என்றதையும் பார்க்கு மிடத்தில்,

காலம்————————கடைச்சங்கத்தார்காலம்
களம்————————(யாதொரு) பாண்டியனவைக்களம்
காரணம்———————ஆசாரங்களை யாருமறிவது
என்பனவும் அறியப்படுதல் காண்க.

ஆரெயில்-அருமை+எயில். "ஈறுபோதல்" என்பதனால் மையும், "இனை யவும்" என்பதனால் உகரமும் கெட்டு, "ஆதிநீடல்" என்பதனால் முதல்நீண் டது (ந - சூ - 136). மூன்று-வரையறைப்பண்புப்பெயர். உம்-முற்றும்மை. அழித்தான்-ஆண்பால் இறந்தகால வினையாலணையும் பெயர். அடி - சினைப் பெயர். ஏத்தி-இறந்தகாலவினையெச்சம்; ஏத்து-பகுதி, உகரக்கேடு சந்தி, இ- வினையெச்சவிகுதி. இவ்விகுதியே இறந்தகாலத்தையும் காட்டிநின்றது. ஆரி டம்-(S· ஆர்ஷம் ரிஷிசம்பந்தமானது)இருடிகள் நூல்-தத்திதாந்தநாமபதம்.

மாத்திரை-(S மாத்ர-அளவு)-பண்புபற்றியபெயர். யார்-யா என்னும் வினாவடியாகப்பிறந்த பொதுப்பெயர்: இங்கே பலர்பாலில்வந்தது. உம்-முற்று. அறியதாரியப்பொருளில் வந்த செயவென் வாய்பாட்டு வினையெச்சம் எதிர்காலம். அறி - ப, ய் - ச, அ - வி. அறன் (அறம்) - மகரத்துக்கு னகரம்போலி: (பெரியோரால் வரை அறுக்கப்பட்டது அறம்). ஆய - இறந்தகால பெயரெச்சம்: ஆ - ப, ய் - இறந்தகால இ, அ - பெயரெச்சவிகுதி. அவற்றை என்றது ஆசாரங்களை. அ-ப, அற்று-சா, வ-ச. தீரா - ஈறுகெட்ட எதிர்மறைப்பெயரெச்சம். ஈறுகெடாவிட்டால் தீராத எனவரும்: தீர்-ப. திரு - இதனைத்தமிழ்மொழி என்பர் சிலர். ஸ்ரீ என்னும் வடமொழித்தற்பவம் என்பர் சிலர். திறல் - வண்-என்பன பண்புப்பெயர்கள்.

'யாருமறிவதறனாக மற்றவற்றை' என்றும் பாடம்.

## நூல்.

> பஞ்சிதன் சொல்லாப் பனுவ லிழையாகச்
> செஞ்சொற் புலவனே சேயிழையா—எஞ்சாத
> கையேவா யாகக் கதிரே மதியாக
> மையிலா நூன்முடியு மாறு.

என்றபடி, தன்சொற்கள் பஞ்சாகவும் செய்யுள் இழையாகவும் புலவன் நூற்கின்றபெண்ணாகவும் வாயே கையாகவும் அறிவு கதிராகவும் கல்விநூலானது முடியுமாறு அறிக. நூல் என்பது உவமையாகுபெயர்.

### ஆசாரங்கட்குக் காரணம்.

1. (வ-ம்) நன்றியறிதலும் பொறையுடைமையும் இன்சொல்லும் எவ்வுயிர்க்கும் இன்னாதசெய்யாமையும்......(என்ற) இவை எட்டும்சொல்லிய ஆசார வித்து.

(ப-ரை) நன்றி அறிதல் - தனக்குப்பிறர்செய்த நன்றி அறிதலும், பொறை உடைமை-பொறுமை உடைத்தாயிருப்பதும், இன்சொலோடு-எவரிடத்தும் இனியவார்த்தைபேசுதலும், எவ்வுயிர்க்கும் - எந்தப்பிராணிக்கும், இன்னாத செய்யாமை-கெடுதிசெய்யாமையும், கல்வியோடு - கல்வியுடைமையும், ஒப்புரவு-உலகநடையை, ஆற்ற அறிதல்-மிகஅறிதலும், அறிவுடைமை-அறிவு உடைமையும், நல் இனத்தாரோடு-நல்ல இனத்தாருடனே, நட்டல் - சினேகம்செய்தலும், இவை எட்டும் - என்ற இவ்வெட்டுவகையும்; சொல்லிய - நல்லாரால் சொல்லப்பட்ட, ஆசாரம் - ஆசாரங்களுக்கு, வித்து - காரணம்.

(க-து) சதாசாரங்களுச்குக் காரணமாவன:—செய்நன்றி அறிதல், பொறுமை, இனிய வார்த்தை, எந்த உயிருக்கும் தீங்கு செய்யாமை, கல்வி, உலக நடையை அறிதல், அறிவுடைமை, நல்லசினேகம் என்னும் எட்டுமாம்.

Gratitude, patience, kind words, not to inflict suffering on any creature, learning, thorough knowledge of established customs and duties, possession of wisdom, and befriending good company: these eight are the seeds of rites prescribed by the good.

நன்றி - பண்புப்பெயர். இதில் றி - பண்புப்பெயர் விகுதி. பொறை - (பொறு - ப, ஐ - தொழிற்பெயர் விகுதி) தொழிற்பெயர். ஓடு (1, 2 - வது) எண்ணிடைச்சொல். இன்னாத-என்பதில் இன்னு-பகுதி, த் - எழுத்துப்பேறு, அ - பலவின்பால் விகுதி. பண்படியாகப்பிறந்த பலவின்படர்க்கைப்பெயர்.

எகரவினைவைப் பின்பற்றிவரும் பெயர்களைச்சேர்ந்த உம்மை முற்றுப்பொருளது: எவ்வுயிர்க்கும் என்பது எல்லா உயிர்க்கும் எனப்பொருள் கொள்வது அறிக. செய்யாமை-எதிர்மறைத்தொழிற்பெயர். (உடன்பாட்டில் செய்தல் எனவரும்). இது இறந்தகாலத்தில் செய்திலாமை என்றும், நிகழ்காலத்தில் செய்கின்றிலாமை என்றும், எதிர்காலத்தில் செய்கிலாமை என்றும் வரும். உடன்பாட்டிலும் செய்தமை - செய்கின்றமை என இரண்டுகாலத்தில்வரும். கல்வி - தொழிலாகுபெயர். ஒப்புரவு - ஒப்பு - எல்லாராலும் ஒப்புக்கொள்ளப்பட்டது, அங்கீகரிக்கப்பட்டது. உலகத்தில் ஒத்தது. உரவு - ஞானம், அறிவு. எல்லாராலும் ஒப்புக்கொள்ளப்பட்டவைவற்றின் ஞானம். எல்லார்க்கும் சம்மதமானதை அறிந்த அறிவு. இது உலகநடை எனப்பொருள் பெறுவதாயிற்று. இது குறளில் 'உலகத்தோடொட்ட வொழுகல்' எனவருகின்றது இறுதியாக இச்சொல் கடமை - கடப்பாடு என்றும் பொருள் கொள்வதாயிற்று. ஆற்ற-உரிச்சொல். நட்டல்-தொழிற்பெயர் (நள் - பகுதி, தல் - விகுதி, ள் - த் - ட் - ட ஆனது சந்தி).வித்து (S. வித்.)

ஒழுக்கம் பிழையாதவ ரெய்தும் விழுப்பம்.

2. (வ - கி) என்றும் ஒழுக்கம் பிழையாதவர், பிறப்பு.....நோயின்மை (என்னும்) இவ்வெட்டையும் இலக்கணத்தால் எய்துப.

(ப - ரை) என்றும் - எப்போதும், ஒழுக்கம் - ஆசாரம், பிழையாதவர் - தப்பாதவர்கள், பிறப்பு - நற்குடிப்பிறப்பு, நெடுவாழ்க்கை - நீடிய ஆயுள், செல்வம்-செல்வம், வனப்பு-அழகுடைமை, நிலக்கிழமை-நிலத்துக்கு உரிமை, மீக்கூற்றம்-சொற்செலவு, கல்வி-கல்வி, நோயின்மை-நோயில்லாமை, இஎட்டும் - என்று சொல்லப்பட்ட இவ்வெட்டினையும், இலக்கணத்தால் - அதற்குரிய இலக்ஷணத்துடனே, எய்துப - நிரம்பப்பெறுவர்.

(க - து) சதாசாரம் தப்பாதவர்கள், நல்லகுடிப்பிறப்பு - தீர்க்காயுசு-ஐசுவரியம் - அழகு - காணியாட்சி - சொற்செலவு - கல்வி - சுகம் என்னும் எட்டையும் நல்லபடியே அடைவார்கள்.

Noble birth, long life, wealth, comeliness, inherited land, influence over others, learning, health; these eight are obtained with their inherent characteristics by those who do not deviate from prescribed rites.

செல்வம் - தொழிலாகுபெயர். கைக்குக்கைசெல்வது. ஒரு பொருளுக்குமாறுவதான (செல்வதான) பொறுப்புடையது. இந்தக்காசுசெல்லுமா, இது செல்லாத காசு என்னும் வழக்கினுலும் உணரப்படும். இதுவே Political Economy என்னும் அர்த்தசாஸ்திரத்தில் கூறப்பட்ட கருத்தாகும். (ஒருகாட்டில் ஒருவன் ஆயிரம் வராகன் வைத்திருப்பினும் அது அவனுக்கு அங்கே செல்வமாக மாட்டாது. அங்கே பண்டமாற்றும் பொறுப்பு அதற்கில்லாமையால். பணமே செல்வம் என்பதும் இல்லை. எதுஎது பண்டமாற்றலிற்செல்லுமோ அதுஅது எல்லாம் செல்வமெனப்படும்). வனப்பு - பண்புப்பெயர். நிலக்கிழமை - நிலத்தினதுகிழமை, நிலத்துக்குக்கிழமை எனவிரியும். கிழமை-பண்புப்பெயர்.

மீக்கூற்றம்—மீ என்பது மேல் - உயர்ச்சி என்பதாம்; கூற்றம் - சொல் (கூறு-என்பதனடியாகப்பிறந்த தொழிற்பெயர்)—மேலான சொல். அதாவது எல்லாரும் ஏற்றுக்கொள்ளத்தக்கசொல், செல்லத்தக்க சொல். இங்கேகூற்றத்தினது உயர்வு என சொன்னிலை மாற்றிச் சொற்செலவுஎனப் பொருள்கொள்ளப்பட்டிருக்கிறது. இது சாதாரணமாய் மேலாய சொல்லாற்பிறந்தது எனப்

புகழை உணர்த்தும். எனவே செல்வாக்கு என்றதாம். இதில் க் மிகுவதற்கு விதி—"பவ்வீறீ மீ முன்னரல் வழி, இயல்பாம் - வலிமேலி மிகலுமாமீக்கே" (ந—சூ—178). இலக்கணத்தால்-ஆல் என்பது உடன் என்னும் பொருளில் வந்தது. இலக்கணம் (S. லக்ஷணம்). என்று என்பது எ என்னும் வினைவடியாகப்பிறந்த காலப்பெயர். ஒழுக்கம்-(ஒழுகு-பகுதி) தொழிலாகுபெயர். பிழையாதவர்-எதிர்மறைப் பலர்பாற்குறிப்பு வினையாலணையும்பெயர். இதில் த் - எழுத்துப்பேறு.

## தக்கிணை முதலிய நான்கைத் தவறாது நடத்தல்.

3 (வ-ம்) தக்கிணை...............கெடும்.

(ப-ரை) தக்கிணை - குரவர்க்குத் தக்ஷிணை கொடுத்தலும், வேள்வி - யாகம்பண்ணுதலும், தவம் - தவஞ்செய்தலும், கல்வி - கல்வியும், இ நான்கும் - என இந்நான்கினையும், முப்பால் ஒழுக்கினால் - மூன்று வகைப்பட்ட விதியாலே, காத்து - பாதுகாத்து, உய்க்க - நடாத்துக; உய்யாக்கால் - அப்படி நடத்தாவிட்டால், எப்பாலும் - எவ்வுலகத்தின்கண்ணும், ஆகா - (இந்நான்கும் தனக்குப்) பயனாகாவாய், கெடும் - கெடும்.

(க-து) பெரியோருக்கு தக்ஷிணைகொடுத்தலும், யாகம் செய்தலும், தவஞ்செய்தலும், கல்வியும் ஆகிய இவைகளை சாஸ்திரவிதி தப்பாமல் நடத்தவேண்டும். அப்படி நடத்தாவிட்டால் இவைகளால் உண்டாகும் பயன் இல்லாமற் போகும்.

Religious presents, sacrifices, penance, and learning: these four should be ordained in accordance with the laws of the smiritis. Otherwise these four would become fruitless in any world.

தக்கிணை - S. தக்ஷிணை. வேள்வி - (வேள் - விருப்பம்). விரும்பினவற்றை அடைவது யாகஞ் செய்தலால் ஆதலின் யாகத்துக்கு வேள்வி எனப் பெயராயிற்று. தவம் - S. தபம். முப்பாலொழுக்கு - அறநூல் விதி-பொருணூல் விதி - இன்பநூல் விதி. காத்து - கா-ப, த்-ச, த்-இ, உ-வி. உய்க்க - வியங்கோள். உய்யாக்கால் - எதிர்மறை வினையெச்சம். எப்பாலும் - என்பதற்கு எந்தப் பகுதியும் எந்தநன்மையும் அதாவது முப்பாலினால் உண்டாகும் எந்தநன்மையும் எனவும் பொருள் கொள்ளலாம். ஆகா - ஈறுகெட்ட எதிர்மறை வினையெச்சம். ஈறுகெடாவிட்டால் ஆகாமல், ஆகாது என வரும்.

## வைகறையெழுந்து தந்தைதாய்த் தொழுதல்.

4. (வ-ம்) வைகறை......முறை.

(ப-ரை) வைகறை - விடியற்காலமாகிய, யாமம் - பின் யாமத்திலே, துயில் எழுந்து - விழித்துக்கொண்டு; தான் செய்யும் - தான் (பின்னாளில்) செய்யத்தகும், நல் அறமும் - நல்ல தருமகாரியங்களையும், ஒண் பொருளும் - ஒள்ளிய பொருளுக்கு வருவாயான காரியங்களையும், சிந்தித்து - ஆராய்ந்து சிந்தித்து; வாய்வு அதில் - (பின்பு) இரவு புலரும்போது, தந்தையும் - தந்தையையும், தாயும் - தாயையும், தொழுது - தொழுதபின்பு, எழுக - ஒரு காரியத்தைச் செய்யத்தொடங்குக: என்பது எ - என்று சொல்லப்பட்ட ஒழுக்கமே, முந்தையோர் - அறிவுடைய பழையார், கண்ட - சொல்லிய, முறை - முறைமை.

(க-து) விடியற்காலத்திலே விழித்துக்கொண்டு, மறுநாள் செய்யத்தக்க தருமகாரியங்களையும் திரவியம் சம்பாதிப்பதற்கு வேண்டிய காரியங்களையும்

ஆராய்ந்து யோசித்துக்கொண்டு, பின்பு பொழுதுவிடிந்த உடனே தந்தைதாயரைத்தொழுதுகொண்டே எழுந்து, அதற்கப்புறம் ஒரு காரியத்தைச்செய்ய ஆரம்பிக்க வேண்டும்.

Awake at day break; ponder over your duties and resources for the next day; and then get up adoring your father and mother. This is what has been ordained by the sages of old.

**வைகறையாமம்** - சிறுபொழுது ஆறினொன்று. அவையாவன:—மாலை, யாமம், வைகறை, காலை, நண்பகல், எற்பாடு. வைகறை is the four hours before sunrise. The morning watch from 2 in the morning till day-break. This word is also used as வைகுறு. "மாலையும் இடையாமமும் கழியுந்துணையு மகங்குல் வைகுறுதலை வைகுறு என்ருர். அங்குல் வைகிய இறுதியாதலை நோக்கி வைகறையெனவும் பாடம் ஓதுப" - இலக்கண விளக்கம். பெரும்பொழுதாறும் சிறுபொழுதில் யாமம் தவிர மற்ற ஐந்தும் தமிழ்ப்பெயரே பெயராக வழங்குதல் சந்தேகமின்மையால், சிறுபொழுதில் ஒன்ருன **யாமம்** என்பதும் தமிழ்மொழியேயாக இருக்கலாம் என்பது சிறந்த வித்துவான்களுடைய கோட்பாடு. இதனை ஜாமம் என்றும் வடமொழி என்பர் சிலர். **வாய்வதில்** (வாய் - பொருந்தல்) பொருந்தின சமயத்தில் அதாவது இரவு புலரும் போது. தந்தை - தாய் - முறைப்பெயர்கள் (தா - பகுதி) தன்னைத்தந்தவன்- தந்தவள் என்பது பொருள். **எழுக** - வியங்கோள். எ - தேற்றம். அசையுமாம். முந்தையோர் (முந்தை - முந்து-ப, ஐ-சாரி). முந்து-முற்படு, முற்பட இருந்தவர் - முற்காலத்திருந்தவர், பழையார்.

"வைகறைத்துயிலெழு"—ஆத்திசூடி.

## எச்சிலுடனே தீண்டலாகாதவை.

5. (வ-ம்) பசு - பார்ப்பார் - தீ-தேவர் - உச்சந்தலையோடு இவை(களை) எச்சிலார் (யாவரும்) தீண்டார் என்ப. யாவரும் திட்பத்தால் தீண்டாப்பொருள் (இவை).

(ப-ரை) பசு - பசு, பார்ப்பார் - பிராமணர், தீ - அக்கினி, தேவர் - தேவதைகள். உச்சந்தலை - உச்சந்தலை, இவை - என்னும் இவற்றை, எச்சிலார்-எச்சிலையுடையராய், யாவரும்-யாவரும், தீண்டார் - தீண்டார், என்ப- என்று சொல்லுவர். யாவரும்-எல்லாரும், திட்பத்தால் - உறுதிப்பாட்டால், தீண்டாப்பொருள் - தீண்டப்படாத பொருளுங், இவை - இவைகளாம்.

(க-று) எச்சிலுடனே தீண்டப்படாதவைகள் பசு, பார்ப்பார், நெருப்பு, தேவதைகள், உச்சந்தலை என்பவைகளாம். ஆகையால் எச்சிலை உடையவர்களாய் யாவரும் இவைகளைத்தீண்டார்.

They say that persons while unclean should not touch the cow, the brahmins, the fire, the deities, and the crown of the head. Those who are unclean will, therefore, not touch these.

"அழலை யந்தணைப் பசுவினைமிச்சி லடைந்துளோர் தீண்டிட லாகா".—காசிகாண்டம்.

**எச்சிலார்** என்பதற்குக் கீழ்மக்கள் என்ஹெரு பொருளுமுண்டு. எச்சில் (எஞ்சு-பகுதி=மிகுந்திரு. இல்-பகுதிப்பொருள் விகுதி. ஞ் - ச் ஆனது வலித்தல் விகாரம்) மிகுந்திருப்பது-refuse. இது வழக்கில் மிகுந்திருக்கும் அசுசியானவைகளைக் குறிப்பதாயிற்று. **தீண்டார்**-எதிர்மறைப் பலர்பால் வினைமுற்று.

தீண்டு-ப, உகரக்கேடு-ச, ஆ-எதிர்மறை இடைநிலை, ஆர் வி. எதிர்மறை ஆகாரம்தொகுத்தல். உடன்பாட்டில் தீண்டுவரெனவரும். பசு-என்பது முதலில்ஆத்மா அல்லது சீவன் என்ற பொருளுடையதாய்ப் பின்பு சீவனுள்ள யாதொரு பிராணி அல்லது மிருகம் என்றபொருள் பெற்று அப்புறம் மிருகங்களில் யாகத்துக்குரியதான சிறந்த ஆவினை (cow) உணர்த்துவதாயிற்று. பார்ப்பார்-இது பிராமணர்க்குத் தமிழ் நாட்டில் உண்டான தமிழ்ப்பெயர். வைதிககாரியங்களையும் இராஜகாரியங்களையும் பார்ப்பதுபற்றி இப்பெயர் பிறந்தது போலும். மற்றவர்கள் பார்க்கலாகாத வேதத்தைப்பார்ப்பவர்களாதலின் பார்ப்பார் எனப்பட்டனரென்பதும் பொருந்தும். பார்ப்பான் - ஆண்பால். பார்ப்பாத்தி-பார்ப்பனத்தி - பெண்பால். தேவர் - (S. Deva). உச்சந்தலை - தலையின் உச்சத்தை உச்சந்தலையென்றது போலி. உச்சம் என்பது சோதி சாஸ்திரத்தில் தலைக்கு நேரிடம் zenith, meridian என்னும் பொருளுடையது. இதனை உச்சவேளை, சூரியன் உச்சமாக இருக்கிறது என்னும் வழக்கினாலும் அறியலாம். பின்பு உயர்வான இடம் - உயர்வு என்னும் பொருளுடையதாயிற்று. ஒடு - எண்ணிடைச்சொல். யாவர் - யா + வ் + அர். நியமம்-நிச்சயம் ஆல்-உடன் என்னும் பொருளில் வந்தது. தீண்டா-தீண்டப்படாத. பொருள் இவை பொருள்கள் எனப் பன்மையால் முடியத்தக்கது பொருள் என ஒருமையால் முடிந்ததுவழுவமைதி. பார்ப்பார், தேவர் என்பன வந்திருக்கவும் இவை என அஃறிணைச்சுட்டாற் சுட்டினது மற்றப் பசு - தீ - உச்சந்தலை என்பன அஃறிணையாய் அவ்விரண்டு சொல்லினும் அதிகரித்து வந்ததனாலென்க. "திணைபால் பொருள் பலவிரவின சிறப்பினும் மிகவினும் இழிபினுமொரு முடிபினவே" (ந - சூ - 378).

### எச்சிலுடனே காணலாகாதவை,

6. (வ-ஙி) புலை - திங்கள் - நாய் - நாயிறு - அத்தக வீழ்மீனோடு இவ்வைந்தும் எச்சிலார் விரைந்து தெற்றென நாளும் நோக்கார் நன்கறிவார்.

(ப-ரை) புலை - புலையன், திங்கள் - சந்திரன், நாய் - நாய், நாயிறு-சூரியன், அத்தக - அவ்விதமாக, வீழ் மீன்-எரி நக்ஷத்திரம், இவ்வைந்தும்-என்ற ஐந்தினையும்; எச்சிலார் - எச்சிலையுடையராய், விரைந்து - அவசரப்பட்டு, தெற்றென - தெளிய, நாளும்-தினந்தோறும், நோக்கார் - கண்ணால் நோக்கார், நன்கு அறிவார் - நன்கறிந்தவர்.

(க-து) புலையன் - சந்திரன் - நாய் - சூரியன் - எரிநக்ஷத்திரம் என்னும் ஐந்தையும் எச்சிலையுடையார் கண்ணால் காணார்.

Those who know well would never hasten to see, while unclean, these five: the low caste man, the moon, the dog, the sun and accordingly the meteor.

புலை - இழிவுபற்றி உயர்திணை விகுதி யின்றியே வழங்குவதுண்டு. (புலை - புல் - அற்பம். அற்பமானது) புலையன் - அற்பன் - கேவலமானவன் - நீச்சன், மிகத்தாழ்ந்த சாதியான். திங்கள் - (மதி - மதுவை யுடையது என்றதுபோல) திம் + கள் = இனிமையானமது, இனிமையான மதுவை உடையது எனக்காரணங் கற்பிக்கின்றனர். திகிரி என்பதன் மரூஉ என இடர்ப்படுவாருமுளர். புதனும் சனியும் தவிர மற்ற ஞாயிறு, திங்கள், செவ்வாய், வியாழம், வெள்ளி என்பன தமிழ்ப்பெயர்கள். நாயிறு - ஞாயிறு ஞகரத்துக்கு நகரம் போலியாக வந்தது. நாய் - இம்மிருகம் இருக்கும்போதும் நடக்கும்போதும் நாக்கைத்தொங்க விட்டிருத்தலின், மற்றவைகளைக்

காட்டிலும் இதனிடத்தில் நா (நாக்கு) சிறந்து தோன்றும் உறுப்பாதல் பற்றி ய் - பகுதிப்பொருள் விகுதியாய் இதற்கு நாய் எனப்பெயர் வந்ததாக ஒரு காரணம் கற்பிக்கலாகும். அத்தக - அது (or அவை) தக என்பது அத்தக எனச் சிதைந்தது. அத்தகுதியுடைய எனக்குறிப்புப் பெயரெச்சமாகவுங் கொள்ளலாம். வீழ்மீன் (வீழ் - விழுகின்ற, மீன் - நக்ஷத்திரம்) எரிந்து விழுகின்ற நக்ஷத்திரம். எரிநக்ஷத்திரம். விண்வீழ் கொள்ளியை முன்னோர் ஒரு நக்ஷத்திரம் எரிந்து விழுவதாக நினைத்தமையால் அது வீழ்மீன் எனப்பெயர் பெற்றது. தேற்றேனா - இடைச்சொல். நன்று - வினையுரிச்சொல். நாளும் என்பதில் உம் முற்றுப்பொருள் (எல்லா நாளும்). விரைந்து - விரை-ப, த்-ச, த்-இ, த்-ந் ஆனது மெலித்தல், உ-வினையெச்ச விகுதி.

### காலைமாலைக் கடவுள்வணக்கம்.

7. (வ-ம்) நாளந்தி......பழி.

(ப-ரை) நாளந்தி - சிறுகாலையின் கண்ணே, கோல் தின்று - ஒரு கோலாலே பல் துடைத்து, கண் - கண்களை, கழீஇ - கழுவி, தெய்வத்தை - தான் வணங்கும் தெய்வத்தை, தான் அறியும் ஆற்றால் - தான் அறியும் நெறியால், தொழுது - தொழுதபின்பே, எழுக - ஒருகருமத்தைச் செய்யத் தொடங்குக. அல்கு அந்தி - மாலைப்பொழுதின்கண், நின்றுதொழுதல் - (தான் வணங்கும் தெய்வத்தை) நின்று தொழுவது, பழி - குற்றமாம் (உட்கார்ந்து தொழுக).

(க-து) அதிகாலையில் தந்தசுத்தி செய்துகொண்டு, தான் அறிந்தபடி தன் வழிபடுகடவுளை வணக்கஞ்செய்துவிட்டு, அதன்பின்பே ஒரு காரியத்தை ஆரம்பிக்கவேண்டும். மாலைக்காலத்தில் நின்றுகொண்டு தெய்வவணக்கம் செய்வது குற்றமாம்: ஆதலால் உட்கார்ந்து கொண்டு அது செய்க.

Early in the morning clean your teeth with a brush, wash your eyes, worship God in the usual manner known to you, and then proceed to a work. To worship God in the evening in a standing posture is wrong.

அந்தி (அந்தி - கூடுதல், பொருந்துதல்) பகலும் இரவும் கூடுகின்றவேளை. இது மாலைக்காலம்; இங்கே பொதுவாகப் பகலும் இரவுங் கூடுகின்றவேளையைக் (twilight) குறிக்கின்றது. நாளந்தி-morning twilight. அல்கந்தி-evening twilight. (அல்கு - அல்கு - குறைதல். இரவு. வெளிச்சங்குறைந்திருப்பது). கோறின்று - ஆல் - வேல் முதலியவற்றின் சிறுகோலின் நுனியை மென்று குச்சாக்கிப் பல் விளக்குவது வழக்கமாதலால், இங்ஙனம் பல் விளக்குவதைக் கோல்தின்று எனக்காரியத்தைக் காரணமாக உபசரித்தார். கழீஇ- இறந்தகாலவினையெச்சம்: சொல்லிசையளபெடை. பெயர்ச்சொல் வினையெச்சச்சொல்லின் இசையை நிறைத்தற்பொருட்டு அளபெடுப்பது சொல்லிசை யளபெடையாம். உ-ம். "உரனசைஇ உள்ளந்துணையாக" என்றவிடத்தில் விருப்பம் எனப்பொருள்படும் நசைஎன்னும் பெயர்ச்சொல் விரும்பிஎன வினையெச்சப்பொருள்படும் பொருட்டு வினையெச்சச்சொல்லாதற்கு நசைஇ என அளபெடுத்தது காண்க. ஈண்டு முதனிலைத் தனிவினைப்பெயராகிய - கழு - என்பது பகுதி, உகரத்தின் திரிபாகிய இகரம் விகுதி, இகரம் ஈகாரமாய் அளபெடுத்தது நீட்டல் விகாரம், உகரக்கேடு சந்தி. (இன்னிசையளபெடை என்பதும் ஒன்று உண்டு. குற்றெழுத்துநெட்டெழுத்தாக நீண்டு இன்னிசை நிறைத்தற்பொருட்டாக அளபெடுப்பது இன்னிசை யளபெடையாம்.

'தானறியுமாற்றால்' என்பது அவரவர் சமயமரபை அநுசரித்து என்பதாம். **நின்று**-நில்-பகு - ற் ஆனது - சா, ற் - இ, உ - வி, ற் - ன் ஆனது மெலித்தல். **பழி** - முதனிலைத்தொழிலாகுபெயர்.

சில அநாசாரம்.

8. (வ-ம்) உடுத்தலால்.......முறை.

(ப-ரை) உடுத்துஅலால்-ஒன்றனை உடுத்தல்லது, நீராடார்-நீராடுதல் செய்யார்; ஒன்று உடுத்து - (இரண்டு உடுத்தன்றி) ஒன்று உடுத்து, உண்ணார் - உண்ணுதல் செய்யார்; உடுத்த ஆடையை - உடுத்திருந்த ஆடையை, நீருள் பிழியார்-தோய்த்து நீரின்கண் பிழியார்; விழுத்தக்கார்-பெருந்தகுதியுடையார், ஒன்று உடுத்து - ஓராடை உடுத்து, என்றும் - எப்போதும், அவை - சபையின்கண், புகார் - செல்லார்: என்பதே - என்றுசொல்லப்படுவதே, முந்தையோர் - பழையார், கண்டமுறை - கண்டமுறைமை.

(க-து) ஆடையின்றி ஸ்நாநஞ்செய்தலும், இரண்டன்றி ஓராடைமாத்திரம் உடுத்துக்கொண்டு உண்ணுதலும், ஒருவர்தாம் உடுத்திருந்த ஆடையைத்தோய்த்து தண்ணீரிலே பிழிதலும், ஓராடை உடுத்துக்கொண்டு சபையில் போதலும் கூடாது.

They would never bathe without a cloth on; never dine wearing but one garment; never squeeze out (moisture from) a garment, which has been worn by them, in water; the noble would never enter into an assembly wearing only one garment: this is what has been observed by the sages of old.

அல்லால் என்பது, ல் - இடைக்குறையாய், அலால் என நின்றது. உடுத்து என்ற குறிப்பால் ஒன்று என்பது ஒருவஸ்திரத்தைக் குறிக்கின்றது. உடுத்து (உடு - ப). உண்ணார் (உண்பர் - உடன்பாடு). உடுத்தாடை - உடுத்த + ஆடை; உடுத்த என்பதின் ஈற்றகரம் கடைக்குறையாய், உடுத்த + ஆடைஎன நின்றவிடத்து நின்ற மெய்மேல் வந்த உயிரேறி உடுத்தாடை எனப்புணர்ந்தது. விழுத்தக்கார்=விழுமம் + தக்கார் என்பது விழுத்தக்கார் என்றாயிற்று. விழுமம்=பெருமை - சீர்மை. பெருமையின்தகுதி யுடையவர். விழுமம் என்பது சீர்மையைக் குறிப்பதுமன்றி இடும்பை - துன்பம் என்னும் பொருளிலும்வரும் உ—ம் "தங்கண் விழுமந் துடைத்தவர்நட்பு" இப்பொருளில் விழு =நிலையினின்றும் விழுதல் எனப்பொருள் கொள்க. அப்பொருளில் விழுமு பகுதி என உணர்க. புகார் (புகுவார் - உடன்பாடு).

" ...தன்னிழல் புனலுள், சால்புறநோக்கல் துகில்புனையாது தண்புனல் படிதல் ......மனத்திடை நினைப்பினுந் தீதாம் " — காசிகாண்டம்.

9. (வ-ம்) நீருள்நிழல்....நீர்தொடாராகிப் புலையைநோக்கார்.

(ப-ரை) நீருள்-நீரின்கண், நிழல்-தமதுநிழலை, புரிந்துநோக்கார-விரும்பிப்பாரார். நிலம்-நிலத்தை, இரா-உட்கார்ந்துகொண்டு, கீறார்-கீறார். இரா - இரவில், மரமும்-யாதொருமரத்தின்கண்ணும், சேரார்-நெருங்கார். இடர்எனினும்-நோய்கொண்டு இடர்ப்பட்டாராயினும், நீர்தொடாது - நீரைத்தொடாதே, எண்ணெய் எண்ணெயை, உரையார்-உடம்பின்கண்தேயார். உரைத்தபின் - அவ்வெண்ணெயைத்தேய்த்தபின்பு, நீர்தொடார்-தம் உடம்பின்மேல் நீரைத் தெளித்துக்கொள்ளாராகி, புலை-புலையனை, நோக்கார்-தமதுகண்ணால் நோக்கார்.

(க-து) தண்ணீரிலே தம்முடைய நிழலைப்பார்த்தலாகாது. சும்மா உட்கா ர்ந்துகொண்டு தரையைக் கீறுதல் கூடாது. இரவில் யாதொரு மரத்தின் அரு கில் போதலாகாது-வியாதியால் துன்பப்பட்டிருந்தாலும் நீரைத் தொடாமல் எண்ணெய்தேய்த்துக்கொள்ளலாகாது. எண்ணெய் தேய்த்துக்கொண்ட பிற கு உடம்பின்மேல் நீரைத் தெளித்துக்கொள்ளாமல் புலையனைப் பார்த்தல் கூடாது.

They would not willingly look at their reflected image in water: would not while sittingdown scratch on ground: never approach any tree in the night time: though ill, would never rub oil on without first touching water: would not see a low cast man without sprinkling water on the body after thus rubbing oil on.

புரிந்து - புரி - பகுதி. இதனடியாக புரிந்தான்-புரிகின்றான்-புரிவான் முத லான வினைவிகற்பங்கள் பிறக்கும். புரிந்தோர் - சிநேகிதர். புரிவு - அன்பு-ஆ சை. இரா - செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம். இரு-பகுதி, உக க்கேடு - சந்தி, ஆ - வினையெச்சவிகுதி. இதுவே ஈறுகெட்ட எதிர்மறை வினையெச்சமாகவும் வரும், முன்னே "எப்பாலுமாகாகெடும்" என்றதில் ஆகா என்பதுபோல. 'இராமரமும்', என்றவிடத்தில் இரா(-இரவு) பெயர்ச்சொல். கீறார் - கீறு - பகுதி. இதனடியாகக் கீற்று, கீறல், கீறுதல், கீறினான், கீற, கீறிய எனபன பிறப்பதறிக. நீர்த்தொடாது - இரண்டாம் வே ற்றுமைத் தொகை யாதலால் "இயல்பின் விகாரமும் &c" என்ற விதிப்படி வலிமிகுந்தது. (ந-கூ-255) எண்ணெய் - எள்+நெய்-எள்ளினின்றும் இறக்க ப்பட்டநெய். இது பொதுவகையாய் விளக்கெண்ணெய்-வேப்பெண்ணெய் - இலுப்பெண்ணெய் எனப்பலவிதமான நெய்களைக்குறிப்பதாயிற்று. இதனை எள்+நெய் எனப்பிரிக்க அறியாதவர் எண்ணையெனத் தப்பிதமாக எழுதுவர். வெண்ணெய் என்பதும் வெள்+நெய் எனப்பிரித்துப் பொருள்கொள்ளத்தக் கதாதலால் அதனை வெண்ணை என்றெழுதுவதும் குற்றமேயாம். உரையார்- உரை (-தேய்) பகுதி. தொடார் என்பது வினைமுற்று; இங்கே வினையெச்ச மாக இருக்கிறது: இப்படி வருகிறவைகளை முற்றெச்சம் என்பர். நோக்கார்- நோக்கு - பகுதி. நோகார் எனவருமிடத்தில் நோ-பகுதி - (அவர் எவரையும் நோகார்).

## நீராடு நீர்மை.

10. (வ-ம்) நெறிப்பட்டார் நீராடும்போழ்தில் எஞ்ஞான்றும் நீந்தார்; உமியார்; இளையார்; விளையாடார்; ஆய்ந்தவறிவினவர் காய்ந்தது எனினும் தலையொழிய ஆடாரே.

(ப-ரை) நெறிப்பட்டார்-ஒருமுறைப்பட்டார், நீராடும்போழ்தில்-நீராடு ம்போது, எஞ்ஞான்றும்-ஒருநாளும், நீந்தார்-நீந்துதல் செய்யார்; உமியார்-நீரி ற்கண் எச்சில் உமியார்; இளையார்-நீரைக்குடைந்துஇளைக்கார்; விளையாடார்- விளையாடுவதும் செய்யார். ஆய்ந்த அறிவினவர்-ஆய்ந்த அறிவினோர், காய்ந்தது எனினும்- எண்ணெய் பெறாதுதலைக்காய்ந்தது எனினும், தலைஒழிந்து - தலை யொழிய, ஆடாரே-நீராடவேமாட்டார்.

(க-து) குளமுதலானவைகளில் குளிக்கும்போது, நீந்துதலும் - தண்ணீ ரிலே எச்சிலை உமிதலும்-தண்ணீரைக்குடைதலும் - தண்ணீரிலே விளையாடுத லும் கூடாது. எப்போதும் தலைநீங்கலாகக் கண்டஸ்நானமாத்திரம் செய்த லாகாது.

Those of good manners would never, while bathing, swim, nor spit, nor scoop out water, nor play. Those of good sense would not, even though their head should be dried up without oil, bathe excepting their heads.

நீராடார்-நீராடும்-நீராடி எனவருகின்றஇடங்களிலெல்லாம் நீராடு(-குளி) என்பது ஒரு சொல்லாகக்கொள்க. போழ்து - காலப்பெயர்-சமயம் என்பது இங்கே பொருள். போழ்=பிளத்தல்-பிரிதல். காலத்தினின்றும் பிரித்துக்கொள்ளப்பட்ட சிறு அளவு போழ்து எனக்காரணங் கற்பிக்கலாம். இது பொழுதென்றும் போதுஎன்றும் மருவிவரும்-நெறிப்பட்டார்.(நெறி-வழி-பட்டார்-பொருந்தினவர், சேர்ந்தவர்) வழிப்பட்டவர், நல்லவழியில்சேர்ந்தவர். ஞான்று - நாள் - காலம். உமியார்- உமி-பகுதி) உமிநீர் (-எச்சில்). எச்சில் உமி. வெற்றிலைப்பாக்கை உமிந்தேன் என வருவனகாண்க. இது உமிழ் எனவும் வழங்கும். திளையார்-திளை-பகுதி. (திளைத்தல்=நெருங்கல், பூரித்தல்) ஒழிந்து-செயவென்வாய்பாடு செய்தெனத்திரிந்து நின்றது. ஆய்ந்த-இறந்தகாலப்பெயரெச்சம்: ஆய் - ப, த் - ச, த் - ந் ஆனது மெலித்தல், த் - இ, அ - வி. அறிவினவர். அறிவு என்னும் பண்படியாகப் பிறந்தபலர்பாற்பெயர். அறிவு + இன் அ + வ் + அர். இதில் இன் & அ-சாரியைகள்.

தன்னுடம்புபோலப்போற்றத்தக்கவை.

11. (வ-ம்) ஐம்பூதம்.....கெடும்

(ப-ரை) ஐம்பூதம்-நிலம்முதலான பஞ்சபூதங்களையும், பார்ப்பார்-பிராமணரையும், பசு - பசுக்களையும், திங்கள்-சந்திரனையும், நாயிறு - சூரியனையும், தன்பூதம்-தன்உடம்புபோல,என்றுது-நினையாமல்,இகழ்வானேல்-ஒருவன் இகழ்வானாயின், தன்-தனது, மெய்க்கண்-உடம்பின்கண் உள்ள,ஐம்பூதம்-ஐந்து பூதத்தையுமுடைய தெய்வங்கள், அன்றே-இகழ்ந்த அப்போதே, கெடும்-கெட்டகன்றுபோம்.

(க-து) பஞ்சபூதம்-பிராமணர்-பசு-சந்திரன்-சூரியன் என்பவைகளைத்தன்னுடம்புபோலப் போற்றாவிட்டால் தன்னுடம்பினிடத்துள்ள ஐந்து பூதத்தையுமுடைய தெய்வங்கள் உடனே நீங்கிவிடும்.

If one should despise the five elements, the brahmins, the cows, the moon, & the sun, without caring far them as for his own body, the deities of the five elements in his body will at once desert him.

ஐம்பூதம் - பிருதிவி (நிலம்), அப்பு (நீர்), தேயு தீ), வாயு (காற்று), ஆகாசம் (விசும்பு). இவை ஸ்தூலபூதம் எனவும்படும். சூக்ஷுமபூதம் என்பன ஐம்பொறிகளின் மூலம்-அவையாவன - இரசம் - உருவம்-கந்தம்-சத்தம்-பரிசம் என்பன. இவை பஞ்சதன்மாத்திரை எனவும் பெறும். தன் பூதம் என்பது எதுகைபற்றித் தம்பூதம் எனவந்தது. ஏல்-எனில் என்பதன் மரூஉ. தன்மெய்க்கண்ஐம்பூதம் - some thing live guardion saints. ஐம்பூதமன்றே கெடும் என்பதில் பூதம் சொல்லால் அஃறிணையாதலின் கெடும் எனச் செய்யுமென் முற்றால் முடிந்தது. பலர்பாலாயின் செய்யுமென்முற்றால் முடிவது குற்றமாகும்: "பல்லோர்படர்க்கைமுன்னிலை தன்மையிற், செல்லாதாகும் செய்யுமென் முற்றே,' (ந-சூ-348).

ஐந்தரவரும் அவரைத் தொழுதலும்.

12. (வ-ம்) அரசன்...தம்முன்...(என) இவர் நிகரில் குரவர். இவரை......நெறி.

(ப-ரை) அரசன்-அரசனும், உவாத்தியான்-உவாத்தியும், தாய்-தாயும், தந்தை-தந்தையும், தம்முன்-தனக்குமூத்தோனும், இவர்-என இவர்கள்; நிகர் இல்-தமக்கு நிகரில்லாத, குரவர்-குரவராவர். இவரை-இவர்களை, தேவரைப் போல - தேவரைத்தொழுவதுபோல, தொழுது எழுக-தொழுதுகொண்டே எழுக, என்பது - என்றுசொல்லப்படுவது, யாவரும் - எல்லாநல்லாரும், கண்ட-உரைத்துச்சொல்லிய, நெறி-நெறியாகும். ஏ-அசை. தேற்றமுமாம்.

(க-து) அரசன் - ஆசிரியன் - தாய்-தகப்பன் - அண்ணன் என்பவர்கள் ஒப்பற்ற குரவர் ஆவர், இவர்களைத் தேவரைப்போலத் தொழுதல் வேண்டும்.

The king, teacher, mother, father, and elder brother: these are the (five) incomparable superiors to be obeyed. Venerate them as gods. This is what has been said by all the good.

அரசன் என்பது தமிழ்மொழி யென்பதும் இராஜன்என்பது வடமொழியென்பதும் சிலவித்துவான்களுடைய கொள்கை. உவாத்தியான் - sons உபாத்தியாயன் (உப-கூட. கூடஇருந்து அத்தியயனம் செய்பவன். அத்தியயனம்-வேதமோதுகை) வேதம்படிக்க ஒத்தாசையாயிருப்பவன். இது பொதுவகையால் பாடஞ்சொல்லிக்கொடுக்கும் ஆசிரியனை உணர்த்துவதாயிற்று. இது உவாத்தி என்றும் வழங்கும். தமிழ்வழக்கில் வாத்தியார் - வாத்திஎனவரும். தம்முன்-தன் + முன் - தனக்குமுன்பிறந்தவன்: அண்ணன். குரவர்-பெரியோர். ஆண்பாலில் குரவன் என்றும் பெண்பாலில் குரத்தி என்றும் வரும். (குறவர் என்பது குன்றவர் என்பதன் மரூஉ). ஐங்குரவராவார்-அரசன்முதலான ஐவரும் எனவறிக. சிலர் தாய்க்குப் பதிலாக குருவைச்சேர்த்து ஐங்குரவர் எனக்காட்டுவர். குரு-மதவிஷயம் போதிப்பவன். இவ்வெண்பாவில் இரண்டாவதடி மூன்று சீராக வருதலின் இதுசவலைவெண்பா எனக்கொள்க.

சில அநாசாரம்.

13. (வ-ம்) குரவர்...குறைவிரதம் உடையார்...துணிவு.

(ப - ரை) குரவர் உரை - முன்பு கூறப்பட்ட குரவர்கள் சொல்லிய சொல்லை, இகந்து - கடந்து, செய்யார் - ஒரு காரியமும் செய்யார்; குறை விரதம் உடையார் - முடியாது கிடந்த குறைவிரதம் உடையார், தீர-பரிஷ்காரமாக, மறவார் - அதனை மறந்தொழுகார்; நிறைஉவா - மதிநிறைந்த உவாவின்கண், மெல்கோலும் தின்னார் - தம் பல்துலைப்பதும் செய்யார்; மரம் குறையார் - அவ்வுவாவின்கண் மரங்களையும் வெட்டார்: என்பது வ - என்று சொல்லப்படுவதே நல்லறிவாளர் - நல்லறிவாளரது, துணிவு - துணிவாம்.

(க - து) ஐங்குரவர் சொல்லிய சொல்லைக்கடந்து ஒரு காரியத்தையும் செய்யலாகாது. முடிவு பெறாத குறைவிரதம் உடையவர்கள் அவ்விரதத்தை அடியோடு மறத்தல் கூடாது. பௌர்ணிமியில் பல்தேய்த்தலாகாது. அப்போது மரங்களை வெட்டுதலும் ஆகாது.

They would never disregard the words of the (said) superiors; would not entirely forget a vow half done; would not brush their teeth on the full moon day, nor would then fell trees down: this is the opinion of the truly wise.

இகந்து-இக-பகுதி. இகத்தல்-கடத்தல். உரை-முதனிலைத் தொழிலாகுபெயர். விரதம் sans வ்ரதம். தீர-(தீர்-ஒழி) ஒழிய, நீங்கலாக, ie, அடியோடே, முற்றும். உவா The full moon;also the conjunction of the sun and moon (அமாவாசை). பௌர்ணிமி அல்லது அமாவாசை. நிறை என்ற அடை

யால் பௌர்ணிமி எனப் பொருள்கொள்க. உவா also means நிறைவு, கடல் யானை. உவாமதி-பூரணசந்திரன். நிறை - வினைத்தொகைவினை. மெல்கோல் என்பதற்கு மெல்லப்பட்டகோல் எனவும் மென்மையாகிய கோல்எனவும்பொருள் கொள்ளலாம்: முன்னது வினைத்தொகை பின்னது பண்புத்தொகை. துணிவு-தொழிலாகுபெயர்-துணி பகுதி. துணிஎன்பது துண்டாக்கு கோலை த்துணித்தான் (-வெட்டினான்) என்ற பொருளிலும் வரும். துணி (-வஸ்திரம்) துணிக்கப்படுதலின்துணியென்றாயிற்று.

"நவமி உவா நந்தையொடு ஞாயிற்றில் பல்விளக்கி னவை யுற்றோர்கள், எவருமெழு குலத்தோடுங்கெடுகுவர் &c"-காசிகாண்டம்.

## போசனக்கிரமம் &c.

14. (வ-ம்) நீராடி...செல்வர் அது அரக்கர் குறித்து எடுத்துக்கொண்டார்.

(ப-ரை) நீராடி-குளித்து, கால்கழுவி-காலைஅலம்பி,வாய்பூசி-வாயைத்துடைத்துக்கொண்டு, மண்டலம்செய்து-உண்ணுமிடத்தை மண்டலஞ்செய்து, உண்டாரே-உண்டவர்களே, உண்டார்எனப்படுவார் - உண்டவராவார். அல்லாதார் - இப்படியொழிய உண்டவர்கள், உண்டார்போல்-உண்டாரைப்போல, வாய்பூசி - வாய் அலம்பி, செல்வர் அது - போவாரது ஊணை, அரக்கர்-இராக்ஷசர், குறித்து எடுத்துக்கொண்டார்-குறித்து எடுத்துக்கொண்டார்.

(க-து) குளித்துக்காலைக்கழுவி வாயைத்துடைத்துக்கொண்டு, உண்ணும் இடத்தை மண்டலஞ்செய்து, அப்புறம் உண்டவர்களே உண்டவர்கள் எனப் படுவர். இப்படிச்செய்யாதவருணவை இராக்ஷசர்கள் எடுத்துக்கொள்வர்.

Those who dine, after bathing, washing their feet and mouth, and performing mandala, are said to have dined in truth. The Rakshasas carry away the food of others who do not observe the above rites but simply go washing their mouth as though they have dined.

உண்ணுமிடத்தை மண்டலஞ்செய்தலாவது-உண்கலத்தைச்சுற்றி வேத விதிப்படி மந்திரஞ்சொல்லி நீரிறைத்தல். "அருமறையானீர் வலஞ்செய்தடிசில்தொட்டு" & "மண்டிலங்கோட்டியுண்கல னதன்மேல் வைத்தினிதயில்க" எனக் காசிகாண்டத்தில் வருவதனாலுமறிக. மண்டலம்-sans - வட்டம். மண்டலாகாரமாக- வட்டமாக. மண்டலம்-தமிழாயின் மண் + தலம் - மண்ணிடம் (opposite-விண்டலம்) எனவறிக. ஏ-பிரிநிலை. அல்லாதார் என்பதில் அல் என்னும் பகுதியே எதிர்மறைகுறித்தலின் இடையில் வருகின்ற ஆகாரம் சாரியை என்க: த்-எழுத்துப்பேறு. "உண்டார்போல் வாய்பூசிச்செல்வர்"என்பதை அந்தமட்டில் முடித்துவிட்டு, (அது-அப்படி அவர் உண்டஉணவை). அதனை அரக்கர் குறித்து எடுத்துக்கொண்டார் எனக் கடைசிபாகத்தை வேறுமுடிபாகவும் பொருள்கூறலாம். பதவுரையில் பழைய உரையை அநுசரித்து உரைகூறப்பட்டது.

அசுரருக்குத் தண்ணீரால் யாதொன்றனைச் சுத்தம்செய்தவிடத்தும் மந்திரஞ்சொல்லி நீரிறைத்தவிடத்தும் அசுரர் அணுகார் என்பது இந்துவேத மதக்கொள்கை. ஆதலால் உண்போரும் தண்ணீரால் தம்மைச் சுத்திசெய்துகொண்டு உண்ணுமிடத்தையும் தண்ணீரால் சுத்திசெய்து உண்ணவேண்டும்: அப்படிச் செய்யாவிட்டால் அசுரர் நெருங்கவும் உண்ணும் உணவைக் கைக்கொள்ளவும் இடமுண்டாகும். அரக்கர் எடுத்துக்கொள்ளும் துணிவுபற்றி "எடுத்துக்கொண்டார்" என இறந்தகாலத்தாற் கூறினர். (விளக்கேற்றுமல்

உண்டால் உண்ணும் உணவைப் பேய்கொள்ளும் என்கிற நம்பிக்கையும் இத் தேயத்தில் உண்டாயிருப்பதறிக.)

15. (ப-ரை) காலின்நீர்-கால்கழுவின ஈரம், நீங்காமை-உலருவதற்குமுன்னே, உண்டிடுக-உண்ணத்தொடங்குக; பள்ளியும்-பாயலின்கண்ணும், ஈரம் புலராமை-கால்கழுவின ஈரம் உலராமல், ஏறற்க-ஏறுதொழிக; என்பதே-என்றுசொல்லப்படுவதே, பேரறிவாளர் - மிக்க அறிவுடையாரது, துணிவு - துணிவாம்.

(க-து) கால் கழுவின ஈரம் உலரும் முன்னரே உண்ணத்தொடங்குக; கால் கழுவின ஈரம் உலர்ந்தபின்னரே படுக்கையின்மீது ஏறுக.

Begin to eat before the moisture of your washed feet dries, away. Do not get upon your bed before the moisture of your washed feet dries away. This is the opinion of the great.

"காலினீர் நீங்காமைஉண்டிடுக" என்றது முன்பாட்டிற் கூறின கருத்தை அநுசரித்ததுபோலும். நீங்காமை - எதிர்மறைவினையெச்சம்: நீங்கு+ஆ+மை: மை-வினையெச்சவிகுதி. உண்டிடுக-ஒருசொல்:உண்டிடு-பகுதி. பள்ளி-பலபொருளொருசொல். இங்கே படுக்குமிடம் என்பதுபொருள். பள்ளிகொள்ள - படுக்க as in பள்ளிகொண்டபெருமாள். பள்ளி also = தூக்கம் as in திருப்பள்ளியெழுச்சி - பள்ளியெழுச்சி முரசம். பள்ளி also = கல்விச்சாலை. as in பள்ளிக்கூடம் பள்ளிச்சணக்கர்="பள்ளிக்கணக்கு புள்ளிக்கு உதவாது" பள்ளி=சிறுஊர் as மதனபள்ளி. பள்ளி = ஆலயம் as அமணப்பள்ளி = gain temple பள்ளி=இடம் as in மடைப்பள்ளி. ஏறற்க எதிர்மறைவியங்கோள்- இதில் அல் எதிர்மறையைக்காட்டுகின்றது.

காலின் ஈரம் புலராமல் படுக்கையின்மீது பொருந்தினால் படுக்கை கெடுமாதலால் "ஈரம்...ஏறற்க" என்றார்போலும்.

16. (ப-ரை) உண்ணுங்கால்-உண்ணும்போது, நோக்கும் திசை-நோக்கப்படும்திசை, கிழக்குக்கண் - கிழக்கினிடமாக, அமர்ந்து - பொருந்தி, தூங்கான்-தூங்காமல், துளங்காமை-அசையாமல், நன்கு இரீஇ - நன்றாக இருந்து, யாண்டும் - எவ்விடத்தும், பிறிது யாதும்-வேறொன்றையும், நோக்கான்-பார்க்காமல், உரையான்-பேசாமல், தொழுதுகொண்டு-(உண்கின்ற உணவினைத்) தொழுதுகொண்டே, உகாமை - சிந்தாமல், நன்கு - செவ்விதாக, உண்க - உண்ணுக.

(க-து) உண்ணும்போது கிழக்குமுகமாகப்பொருந்தி, தூங்காமலும், அசையாமலும், நன்றாக உட்கார்ந்துகொண்டு, வேறொன்றையும் பார்க்காமலும், பேசாமலும், உண்ணும் உணவைத்தொழுதுகொண்டே சிந்தாமல் செவ்விதாக உண்க.

While dining, face the east; sit steadily without sleeping & stirring; do not see nor speak of other things; but eat gracefully, worshipping the food you eat, and without spilling anything down.

கிழக்கு - தமிழ்நாட்டில் கடற்கரைப்பக்கம் தாழ்ச்சியாகவும் அதற்கு நேரெதிரானபக்கம் உயர்வாகவும் இருப்பதனால் அது கீழ்த்திசையென்றும் இது மேல்திசையென்றும் பெயர் பெற்றன. கீழ் என்பதே சிதைந்து கிழக்குஎன்றாயிற்று. கண் - ஏழாம்வேற்றுமையுருபு. தூங்கான்-ஆண்பால் எதிர்மறைமுற்று. இது வினை எச்சமாகி வந்தது முற்றெச்சம். (தூங்காமல்). துளங்காமை-

எதிர்மறைக்குறிப்பு வினையெச்சம். இரீஇ-இருந்து-இறந்தகாலவினையெச்சம். பிறிதியாதும்=பிறிது+யாதும்: இ-குற்றியலிகரம் நோக்கான் & உணாயான்-முற்றெச்சம். உகர அமை-செயற்கையளபெடை: சொல்பிறந்தபின் சீர்தளை வழுவினவிடத்துப் புலவன் பெய்துகொள்ளுதல்செயற்கை யளபெடை என்ப. எதிர்மறைவினையெச்சம். நன்கு-வினையுரிச்சொல்.

17. (ப-ரை) விருந்தினர்-விருந்தினரும், மூத்தோர்-மிகமூத்தோரும், பசு-பசுக்களும், சிறை-பக்ஷிகளும், பிள்ளை-பிள்ளைகளும், இவர்க்கு என்றுசொல்லப்பட்ட இவர்கட்கு, ஊண்-உணவு, கொடுத்துஅல்லால் - கொடுக்காமல், உண்ணூரே - உணணவேமாட்டார்: என்றும்-எப்போதும், ஒழுக்கம்-தம்மொழுக்கம், பிழையாதவர்-தப்பாதவர்.

(க-ரு) விருந்தினர்-முதியோர்-பசுக்கள்-பக்ஷிகள்-பிள்ளைகள் என்ற இவர்களுக்கு உணவுகொடாமல் தாம் முன்னதாக உண்ணலாகாது.

Those who never err from their good ways, never dine before giving food to guests, old persons, cows, birds, and children.

விருந்தினர்-(விருந்து - புதுமை-novelty) புதிதாகவந்தவர். மூத்தோர்-(முதுமை-பகுதி. முதுமை, முதிர்ச்சி). முதுமையடைந்தவர், வயது ஆனவர்: (முதுமை+த்+ஆர்)த்-எழுத்துப்பேறு. பண்படியாகப்பிறந்த பலர்பாற்பெயர். விகுதி ஆகாரம் ஒகாரமாவதை "பெயர்வினையிடத்துனளரயவீற்றயல், ஆவோவாகலும் செய்யுளுளுரித்தே" (ந-சூ-353) என்பதனுலறிக. சிறை(-இறகு) - இறகுடையது: சினையாகு பெயராய்ப் பறவையை உணர்த்திற்று. பிள்ளை-இது ஆண்பிள்ளை - பெண்பிள்ளை எனவருதலால் இருபாலுக்கும் பொதுப்பெயர். சிலபக்ஷிமுதலானவைகளுக்கும் கிளிப்பிள்ளை அணிற்பிள்ளை கீரிப்பிள்ளை தென்னம்பிள்ளை எனவருதல்காண்க. பிள்ளை என்பது - பிள்ளைப்பருவம் என்பதிற்போல-இளமையை உணர்த்தும் குணப்பெயராக வருதலுங்காண்க. ஊண் - முதனிலைதிரிந்த தொழிற்பெயர் (உண்-பகுதி). similerly தீன் (தின்) கோள் (=கோட்பாடு, from கொள்). பேறு (பெறு).

18. (வ-ம்) ஒழிந்த....புகழ்ந்தார். முகட்டுவழி கட்டிற்பாடு இகழ்ந்தார் (நல்லார்).

(ப-ரை) ஒழிந்த திசையும் - (முன் சொன்ன கீழ்த்திசையைநோக்கி இருக்கத்தடைநேரிட்டால்) மற்றத்திசைகளும், வழிமுறையால்-கிரமப்படி, நல்ல-(நோக்கிஉண்ணுதற்கு) நல்லவாம். முகட்டுவழி-வாயிலின்நேர் இருந்து, ஊண்-உண்பதை, புகழ்ந்தார்-நல்லதெனப்புகழ்ந்தார்கள்: முகட்டுவழி-வாயிலின் நேரிலே, கட்டில்பாடு - கட்டிலிட்டுப் படுத்தலை, இகழ்ந்தார் - ஆகாதென்றுபழித்தார்கள் (நல்லார்).

(க-ரு) உண்ணும்போது முன்சொன்ன கிழக்குமுகமாகப் பொருந்தியிருக்கத்தடைநேரிட்டால் மற்றத்திசைகளை நோக்கி உண்ணலாம். வாயிற்படிக்கு நேராக இருந்து உண்ணல் தகுதியாம். வாயிற்படிக்குநேராகக் கட்டிலிட்டுப் படுத்தல் தகுதியன்றாம்.

When you cannot, while dinning, face the east, other directions are equally good. They have approved of partaking food just opposite the door way; but despised taking bed on a cot placed just opposite the door way.

ஒழிந்த-(ஒழி பகுதி). திசை here plural. நல்ல-பலவின்பால் குறிப்பு வினைமுற்று. முகட்டுவழி-முகடு+வழி. "நெடிலோடுயிர்த்தொடர்க்குற்றுகரங்க

ளுள் டறவொற்றிரட்டும் வேற்றுமை மிகவே "(ந-சூ-183). புகழ்ந்தார் (opp) இகழ்ந்தார். பாடு (படு-பகுதி). முன் ஊண் என்பதற்குரைத்தது போலக் கொள்க. பாடு என்பதுவேலை - கஷ்டவேலை என்னும் பொருளில் பாடுபட்டால் பலனுண்டு, "பறையனைப்போலப்பாடுபட்டு பார்ப்பானைப் போலச்சாப்பிடு" எனவருதல் காண்க. பாடு என்பது கோட்பாடு-விதைப்பாடு-எனத்தொழிற்பெயர் விகுதியாகவும் வரும்.

19. (ப-ரை) கிடந்து-படுத்திருந்து, உண்ணார்-உண்ணல் ஆகாது; நின்று-நின்றுகொண்டு, உண்ணார்-உண்ணுதல் ஆகாது; வெள்ளிடையும் - வெளியிடத்தில் இருந்தும், உண்ணார்-உண்ணுதல் ஆகாது; சிறந்துமிக - விரும்பி மிகவும், உண்ணார்-உண்ணல்ஆகாது; கட்டில்மேல்-கட்டிலின்மேல் இருந்துகொண்டு, உண்ணார்-உண்ணலாகாது; இறந்து-நெறியைக்கடந்து,ஒன்றும்-யாதொன்றையும், நின்று-நின்றுகொண்டு, தின்னற்க-தின்னலாகாது.

(க-து) படுத்துக்கொண்டும் நின்றுகொண்டும் வெளியிடத்தில் இருந்துகொண்டும் உண்ணலாகாது. ஆசையுடன் அதிகமாக உண்ணலாகாது. கட்டிலின்மேல் இருந்துகொண்டு உண்ணலாகாது. நெறிதப்பி யாதொன்றையும் நின்றுதின்னலாகாது.

One should not eat lying down, nor standingup, nor in an open place, nor noraciously, nor on cot. Never eat anything in a standing posture setting aside decency.

கிடந்து (கிட-பகுதி) - கிடத்தல் - கிடக்கை-கிடந்தான்-கிடந்த-கிடக்கும் எனவருதல் காண்க. வெள்ளிடை-வெளி + இடை. சிறந்து மிக-too much. கட்டில்-(கட்டு-பகுதி). இறந்து (இற-ப-கட) அளவுகடந்து. தின்னற்க-எதிர் மறைவியங்கோள்.

20. (வ-ம்) தம்மில்...இருந்தக்கால் முன்துவ்வார்; ...ஊணின்கண் ஆற்ற என்பெறினும் வலமிரார்.

(ப-ரை) தம்மில் - தம்மைக்காட்டிலும், பெரியார் - பெரியார், நிரல் - வரிசைப்பட, இருந்தக்கால் - இருந்து உண்ணுமிடத்து, முன்துவ்வார் - அப்பெரியார் உண்பதற்குமுன்னே தாம் உண்ணார்; முன் எழார்-முந்துற எழுந்திரார்; மீக்கூறார்-புகழ்ந்துகூறார்; ஊணின்கண் - உண்ணுமிடத்து, ஆற்ற என் பெறினும்-மிகயாதானும் பெறினும், வலம் இரார்-வலமிருந்து உண்ணற்க.

(க-து) பெரியோர்களுடனே சமபந்தியாக இருந்து உண்ணும்போது அவர்கள் உண்ணுமுன்னே உண்ணலாகாது; அவர்கள் எழுவதற்குமுன்னே எழுதலாகாது; புகழ்ந்து பேசுதலாகாது; அவர்கள் வலப்பக்கத்திலிருந்து உண்ணலாகாது.

When dining along with elders, one should not begin eating beforehand nor getup beforehand, should not enlogise, nor sit on their right hand side whatever may be the advantage derivable thereby.

துவ்வார்-(து-உண்.)து + வ் + வ் + ஆ + ஆர். இப்பகுதியினடியாக துத்தேன்-துப்பேன் - துத்து-துப்பு எனவருதலறிக. 'துப்பார்க்குத்துப்பாய துப்பாக்கி'

"அதிதிகள் துத்தசேடம் அமிழ்தினும் இனியவாகும்"—

"முற்றுத்துத் துத்தினை நாளை மறஞ்செய்து
பிற்றுத்துத் துத்துவர் சான்றவர்"

என வருகின்ற பிரயோகங்களும் காண்க.

**மீக்கூறர்**-மீக்கூறு-பகுதி. முன்னே மீக்கூற்றம் என்பதற்கு உரைத்தவிடத்தைப்பார்க்க. **என்**-வினைப்பெயர்-யாதொரு சிறந்த பொருள் என்பதுபொருள். **ஆற்ற**-வினையுரிச்சொல். தம்மிற்பெரியார்-ஐந்தாம் வேற்றுமை எல்லைப்பொருள். **இருந்தக்கால்** - (இருந்தால் - இருப்பின்) - செயின் என்னும் வாய்பாட்டு வினையெச்சம்; கால்-வினையெச்சவிகுதி. நிரல்-பண்புச்சொல்.

21. (வ-ம்) கைப்பன எல்லாம் கடை (ஆக), தித்திப்ப (எல்லாம்) தலை (ஆக), ஒழிந்த (எல்லாம்) இடையாக, முறைவகையால் மெச்சும் வகையால் ஊண்துய்க்க.

(ப-ரை) கைப்பன எல்லாம் - கசக்கும் கறிகளெல்லாம், கடையா - முடிவின்கண்ணாகவும்; தித்திப்ப எல்லாம் - தித்திக்கும் கறிகளெல்லாம், தலையாக - முதலாகவும்; ஒழிந்த எல்லாம்-கசப்பும் தித்திப்பும் நீங்கலான மற்றச் சுவையுள்ள கறிகளெல்லாம், இடையாக - இடையாகவும்; முறைவகையால்-கிரமப்படியே, மெச்சும் வகையால் - புகழும் வகையால், ஊண்துய்க்க - உண்க.

(க-து) உண்ணும்போது கசக்குங்கறிகளைக் கடைசியாகவும், தித்திக்கும் கறிகளைமுதலாகவும், மற்றச்சுவைகளுள்ள கறிகளை நடுவாகவும் உண்க.

Eat your dinner in a decent manner, all bitter things last, sweet things first, and others between.

**கைப்பன** - கைப்பு (கசப்பு) அறுசுவையிலொன்று. கை (கச) - பகுதி, ப் - ச, பு - பண்புப்பெயர்விகுதி, அன் - சா, அ - பலவின்பால்விகுதி. **தித்திப்ப**-தித்தி-ப, ப்-ச, பு-பண்புப்பெயர் வி, அ-பலவின் பால் வி.**தீ** (ம்)-இனிப்பு-தீங்கனி, தீஞ்சொல், தீஞ்சுவை. தித்தி is a reduplication of **தீ**. தி+தீ-தித்தி. இனியதுணர்த்துங்கால் தீ என்பதைத் தீம் என்றும்,இன்றதுணர்த்துங்கால் அதனைத் தீமை என்றுங்கொண்டறிக. **அறுசுவை**:—கைப்பு - இனிப்பு - புளிப்பு - உவர்ப்பு - துவர்ப்பு - கார்ப்பு. கடை & தலை (opp). **மெச்சும்**-செய்யுமென்னும் வாய்பாட்டுப் பெயரெச்சம்.மெச்சு-ப. **ஒழிந்த** - இறந்தகாலப் பலவின்பால் வினையாலணையும் பெயர். **துய்க்க** - (துய்-உண்) - உண்க: வியங்கோள்.

22. (வ-ம்) முதியவரை....ஆசாரம் நீங்காமையும், (உண்டுவரவோடேகூட உண்டமைந்தால்) (உள்ள) கலங்களைப்பண்பினால் நீக்குக.

(ப-ரை) முதியவரை - (தம்மில்மூத்தார் உண்ணும்பொழுது அம்) மூத்தாரை, பக்கத்து - தம்பக்கத்து, வையார் - வைத்து உண்ணார், விதிமுறையால் - முறைமையான், உண்பவற்றுள் எல்லாம் - உண்ணும் கலங்கள் எல்லாவற்றுள்ளும், சிறிய - சிறியகலங்களை, கடைப்பிடித்து - கடைப்பிடித்துத் தனக்குச்கொண்டு, அன்பில் திரியாமை - காதலில் பிழையாதவகையும், ஆசாரம் நீங்காமை - ஒழுக்கத்தில் நீங்காதவகையும், (உண்டு கிரமத்தோடேகூட உண்டமைந்தால்), கலம் - உள்ளகலங்களை, பண்பினால் - முறைபட, நீக்கல் - நீக்குக.

(க-து) தம்மைப்பார்க்கிலும் முதியார் உண்ணும்போது அவரைத் தமது பக்கத்திலே வைத்து உண்ணலாகாது. உண்கலங்களில் சிறிய கலங்களை அமைத்துக்கொண்டு அன்பும் ஆசாரமும் தவறாமல் உண்க. உண்டபின் உண்கலங்களைக் கிரமமாக நீக்கிவிடுக.

While dinning do not have old persons by your side:— out of dining dishes, take for your use only those that are small, eat without

இகழார் - இகழாது ஏற்றுவார்; (அந்திப்பொழுது) உண்ணார் - மாலைப்பொழுதின்கண் உண்ணாது, அல்கு - இரவின்கண், உண்டு - உணவுகொண்டு, அடங்கல் - (புறம்போகாது ஓரிடத்தின்கண்ணே) அடங்குதல், வழி - நெறி. ஏ- அசை.

(க-து) சாயரக்ஷையில் படுத்துக்கொள்ளலும் - வழிநடத்தலும் - உண்ணுதலும் - ஒருவரைக் கோபித்தலும் ஆகாது. அந்திப்பொழுது விளக்கேற்றி, இரவின்கண் உண்டு, வெளியில்போகாமல் ஓரிடத்திலே பொருந்தியிருக்க வேண்டும்.

One should neither lie down, nor travel, nor eat, nor fret in the evening twilight; should not despise lighting a lamb; should rest at a place in the night after supper.

கிடவார் (உடன்பாடு - கிடப்பர்). கிட + வ் + ஆ + ஆர். இது எதிர்கால மன்று. இதில் வ் - சந்தி. நடவார் என்பதும் அங்ஙனமே. வெகுளார் (உடன்பாடு - வெகுள்வர்). முன்னந்தி - அந்திமுன் எனபது போலியாய் முன்னந்தி என வந்தது, அந்திப்பொழுதின் முன்பாகம் - அந்தியின்முற்பொழுது. அல்கு- முன்னே (7-வது செய்யுள்) அல்கந்தி என்ற விடத்து விளக்கப்பட்டது. அடங்கல் - தொழிற்பெயர். வழி - என்பது உவமையாகுபெயராய் முறைமை என்பது குறித்து நின்றது.

சயனக்கிரமம்.

26. (ப-ரை) கிடக்குங்கால் - படுத்துக்கொள்ளும்பொழுது, தெய்வம் - தெய்வத்தை, கைகூப்பி - கையைக்குவித்து, தொழுது - வணங்கி; வடக்கொடு - வடதிசையின் கண்ணும், கோணம் - கோணதிசையின் கண்ணும், தலைசெய்யார் - தலைவைக்காமல்; மீக்கோள் - மேற்போர்வை ஒன்றினை, உடல்கொடுத்து - உடம்பின்கண் கொடுத்து, சேர்தல் - படுத்துக்கொள்ளல், வழி - நெறி.

(க-து) படுத்துக்கொள்ளும்போது கடவுளைத்தொழுது, வடதிசையாகவும் கோணதிசையாகவும் தலையை வைக்காமல், மேலே ஒரு வஸ்திரத்தைப் போர்த்துக்கொண்டு படுத்துக்கொள்ளவேண்டும்.

It is right while going to bed to fold your hands and worship God, to place your head neither towards the north nor towards any oblique direction, and to put on a mantle and lie down.

கால் - காலம் எதுபது கடைகுறைந்துநின்றது. காலம் வடமொழி. கைகூப்பி-(ஒரு சொல்) கைகூப்பு-பகுதி-விகுதியே காலங்காட்டிநின்றது. கூப்பு-குவி, கூப்புதல் - குவித்தல். இரண்டு கைகளையும் குவித்து (ஒருசேரப்பிடித்து) தொழுது. தெய்வம் - வடமொழி. தொழுது-தொழு-ப, த்-இறந்தகால இ, உ-வினையெச்ச வி. வடக்கு-என்பதற்கும் தெற்கு என்பதற்கும் காரணம் சரியாகத்தோன்றவில்லை. வடுகர் இருக்கும் பக்கம் வடக்கு என்றும், நீர்வளம் நிலவளமுதலியவுடைய அழகாற்சிறந்த பக்கம் - தென்-தெற்கு என்றும், உண்டானதாகக் கூறலாம். இது யுக்திவகையான் உரைத்தது. தென் என்பதற்குத் தமிழில் இசை என்றும் அழகு என்றும் பிறபொருள்களும் உள்ளன. திசையைக் காட்டும் சொற்களில் கு - பகுதிப்பொருள் விகுதியாக வருகின்றது. கிழக்கு-மேற்கு என்பனவற்றிற்கு முறையே குணக்கு-குடக்கு-என்னும் பெயருண்டு. அவ்வத்திசையிலுள்ளதை குணாது, தெனாது, குடாது. வடாது

என்ப. வடாது சென்றான் என்னுமிடத்தில் வடக்குநோக்கி என்பதுபொருள். இங்ஙனமே குணாதுசென்றான்.தெனாது சென்றான்,குடாதுசென்றான்எனவரு வன காண்க. "திசையொடுதிசையும் பிறவுஞ்சேரின், நிலையீற்றுயிர்மெய் கவ் வொற்று நீங்கலும், றகரம் னலவாத் திரிதலு மாம்பிற" என்றதனால் வடமே ற்கு, வடதிசை, வடபால், வடமலை, வடவேங்கடம் எ-ம், தென்கிழக்கு, தென்மேற்கு, தென்குமரி, தென்மலை, தென்வீதி எ - ம், மேல்கடல், மேனா டு, மேல்வீதி, மேற்றிசை எ - ம், குடதிசை, குடகடல், குடநாடு, குடக்கோ ச்சேரன் எ - ம், குணதிசை, குணகடல் எ - ம், கீழ்கரை, கீழ்சார், கீழ்த்திசை எ-ம் வரும் (ந-சூ-186). கோணம் - என்பது இரண்டுதிக்கு கூடுகின்ற மூலை யைக்காட்டும் வடசொல். கோணம் In Sans = angle, as திரிகோணம். தலைசெய்யார் - தலையைப் பொருந்தும் படிசெய்யார் - தலைவையார். 'மெய்வருத்திக் கைசெய்துய்மினோ' 'பெரிய பாரதங்கைசெய்து' என்ற வி டங்களில் வருகின்ற வேறுபிரயோகங்களை அறிக. தலைசெய்யார் என்பதை ஒரு சொல்லாகக்கொள்க ; முற்றெச்சம். மீக்கோள் - மீ - மேலே, கோள்- கொள்ளப்படுவது ; சரீரத்தின்மேல்கொள்ளப்படுவது ; அதாவது மேற்போ ர்வை, துப்பட்டி. இதில் க் மிகுவதற்குவிதி(ந-சூ-178). உடல்கொடுத்து - ஏ ழாம்வேற்றுமைத்தொகை. சேர்தல் என்பது கிடக்கையை அதாவது படுக் கையைச்சேர்தல் எனவறிக. ஒடு - எண்ணிடைச்சொல்.

## வழிகோள்ளுமிடத்து வழவும் வழாமையும்.

27. (வ-ம்) இருதேவரிடையும் பார்ப்பாரிடையும் போகார்.தும்மினும்... தொழுதெழுக. ஒப்பார்க்கு(வழிபோம்போது)உள்ளமுவந்து உடன்செல்லல்.

(ப - ரை) இருதேவர் இடை - இரண்டு தேவர் நடுவும், பார்ப்பார் இடை-பார்ப்பார் பலர்நடுவும், போகார் - ஊடறுத்துப்போகார். தும்மினும் - தும்மினபொழுதும், மிக்கார் - பெரியோர், வழுத்தில்-வாழ்த்தினால், தொழு தெழுக - தொழுதுகொண்டே செல்க. ஒப்பார்க்கு - தம்மோடொப்பார்க்கு (வழிபோம்போது), உள்ளம் - தம்முள்ளம், உவந்து-உவப்படைந்து, உடன் செல்லல் - உடனேநேர்செல்க.

(க - து) ஒரிடத்துக்குப் போகும்போது, இரண்டு தேவர் நடுவிலும்பல பார்ப்பார் நடுவிலும் போகக்கூடாது : எவராகிலும் தும்மின விடத்தும் பெரி யோர்கள் வாழ்த்தினால் தொழுதுகொண்டேசெல்க : வழிபோகும்போது சமானமான சிநேகர்கள் எதிர்ப்பட்டால் உடனே மனக்களிப்புடனே அவர்க ட்கு நேரேசெல்க.

Do not go between two deties nor between many brahmins ; when any body sneezes you may proceed on your business worshipping God if elders should bless you. If you should meet your elders on your way proceed with joy towards them.

போகார் - போ+கு+ஆ+ஆர். இதில் கு-சாரியை. தும்மின் - செயி ன் என்னும் வாய்பாட்டு வினையெச்சம். தும்மு - பகுதி. தும்முதல் - தும் மல் - தும்மினான் - தும்மிய என வருதலறிக. ஒப்பார் - ஒ . பகுதி, ப் - ச, ப் - இ, ஆர் - பலர்பால் விகுதி. ஒத்தல் - ஒப்பு - ஒவ்வுதல் - ஒத்தான்-ஒக்கி றான் - ஒப்பான் என வருதல் காண்க. செல்லல் - அல்லீற்று வியங்கோள். உவந்து - உவ - பகுதி.

## உமிழ்தலும் மலசல மோசனஞ்செய்தலும் ஆகாத இடங்கள்.

28. (ப-ரை) புல் - புல், பைங்கூழ் - விளைநிலம், ஆப்பி-பசுச்சாணம், சுடலை - சுடுகாடு, வழி - பாதை, தீர்த்தம் - நீர்நிலை, தேவகுலம் - தேவர்

கோட்டம், நிழல் - நிழல், ஆன்நிலை - பசு நிற்குமிடம், வெண்பலி - சாம்பல், என்ற - என்றுசொல்லப்பட்ட, ஈரைந்தின்கண்ணும் - பத்திடத்திலும், உமிழ்வோடு - உமிழ்நீரையும், இருபுலனும்-மூத்திரபுரீடங்களையும், சோரார் - விடார், உணர்வு உடையார் - அறிவுடையோர்.

(க-து) புல்முளைத்திருக்கிற இடத்திலும் - பயிர் விளைகின்ற இடத்திலும் - பசுச்சாணத்தின்மேலும் - சுடுகாட்டிலும் - வழியிலும் - தீர்த்தமுள்ள இடத்திலும் - கோயிலிலும் - நிழலுள்ள இடத்திலும் - பசுமந்தை நிற்கின்ற இடத்திலும் - சாம்பலின்மீதும் எச்சில் உமிழ்தலும் மலசலம் விடுத்தலும் ஆகாது.

The wise will neither spit nor ease themselves in pasture lands & corn fields, on cow-dung, in places of cremation and paths, on water, at temples, in shade, cow-herd stand, and on ashes.

பைங்கூழ் = பசுமை + கூழ் = ப + கூழ் = பை + கூழ் = பை+ங் + கூழ் = "பைங்கூழ். ஈறுபோதல் ... அடி அகரம் ஐயாதல் ... இனமிகல்" &c. (இது தானியாகு பெயராய் விளைநிலத்தை உணர்த்திற்று.) ஆப்பி = ஆ + பி (ஆவின் பீ = பசுச்சாணம்). ஆப்பீ என்பது அல்வழியில் வரு மொழிமுதல் வல்லினமாய் வர பீ என்பது பி எனக்குறுகி இயல்பாயிற்று: "ஆமுன்பகரவீ யனைத்தும் வரக்குறுகும், மேலனவல்வழி இயல்பாகும்மே" என்றதனால்அறிக (ந - சூ - 177). சுடலை - சுடு - பகுதி. பிணங்களைச் சுடுகின்ற இடம். தீர்த்தம் Sans, தேவகுலம் (குலம் - மனை - வீடு) தேவர் இருக்கும் வீடு-கோயில். ஆனிலை (ஆன்-பசு, நிலை-நிற்குமிடம்) ஆன்கள் நிற்குமிடம். ஆன் என்பதில் ன் சாரியை. ஈரைந்து = இரண்டு + ஐந்து, இரண்டால் பெருக்கிய ஐந்து என மூன்றும் வேற்றுமைஉருபும் பயனும் உடன் தொக்கதொகை. இரண்டாகிய ஐந்து எனப்பண்புத்தொகையாகவும் கொள்ளலாம். இருபுலன் சோர்தலாவது - மலசல மோசனம் பண்ணுதல்.

### மலமோசனஞ் செய்யுந்திசை.

29. (ப - ரை) (மூத்திர புரீடங்களைச் சோர்பவர்), பகல்-பகலில், தெற்கு நோக்கார் - தெற்கு நோக்கி இரார். இரா - இரவில், வடக்குநோக்கார்- வடக்குநோக்கி இரார். பகல் - பகலில், தீயினுள் - தீயில், நீர் - தண்ணீரை, பெய்யார் - சொரியார்.

(க - து) பகலில் தெற்குமுகமாகவும் இரவில் வடக்குமுகமாகவும் இருந்து மலசலங் கழித்தலாகாது. பகலில் நெருப்பிலே தண்ணீரை உகுத்தலாகாது.

Do not ease yourself facing the South during the day and the North during the night time. Do not pour water on fire during the day,

முன்செய்யுளின் சந்தர்ப்பத்தை நோக்கியும் ஐதிஹ்யத்தை அநுசரித்தும் மூத்திரபுரீடங்களைச் சோர்பவர் என்பது வருவித்துரைக்கப்பட்டது. தீயினுள் - என்பதில் இன் - சாரியை. பெய்யார் - பெய் + ய் + ஆ+ஆர்.

### வாய்பூசுங்கிரமம்.

30. (ப-ரை) நடைவரவு நின்று - நடவா நின்றும், நீரகத்து நின்று - நீரில் நின்றும், வாய்பூசார் - தம்வாய் பூசார்: வழிநிலை நீருள்ளும் - (ஓடுநீர் பெற்றிலராயின்) நிலைநீருள்ளும், பூசார் - அப்பெற்றிபூசார்: மனத்தால் வரைந்துகொண்டல்லது பூசார்-(அந்நீரை அருந்தும்போதும் பூசும்போதும்) மனத்

தால் வரையறுத்துக்கொண்டல்லது பூசார். கலத்திஞல் பெய்பூச்சு -(அதுவுஞ்செய்வது) ஒரு பாத்திரத்தில் முகந்து சிலர் பெய்யப்பூசும் பூச்சு, சேராது எனின் - முடியாதாயின்.

(க-று) ஒரு பாத்திரத்தில் தண்ணீரை மொண்டுகொண்டே வாயலம்ப வேண்டும். தண்ணீரிலே நின்றுகொண்டும் நடந்துகொண்டும் வாயலம்புதலாகாது.

You should not wash your mouth walking or standing in water: nor should you do so in stagnant water. When you can not wash with a vessel of water, you should not wash your mouth in any way without imagining that you cannot help it.

பழைய உரையை அநுசரித்தது மேலெழுதின பதவுரை. நடை வரவு நீரகத்து - நடையாக வருவதாகிய அதாவது ஓடுகின்ற நீரிலே, நின்று - இருந்து, வாய்பூசார் - வாய்பூசார்; வழிநிலை நீருள்ளும் - வழியின் கண் உள்ள நீரில் இருந்தும், பூசார் - வாய்பூசார்....கலத்திஞல் பெய்பூச்சு - கலத்தில் நீர்கொண்டு பெய்துபூசும் பூச்சு &c எனப்பொருளுரைப்பது நேராக இருக்கும். மனத்தால் வரைந்து என்றது - (உங்கள் பாடத்தில் விட்டுவிடப்பட்டு, மற்ற நிறைவான பிரதியில் 34-வதாயுள்ள செய்யுள்)

பத்துத்திசையு மனத்தான் மறைத்த பின்
அந்தரத் தல்லா லுமிழோ டுருபுலனும்
இந்திர தானம் பெறினு மிகழாரே
தந்திரத்து வாழ்து மென்பார்.

அதாவது திசைபத்தையும் மறைத்ததாக மனத்தில் பாவித்து அந்தரத்தில் செய்வதாக நினைத்துக்கொண்டு எச்சில் உமிழ்தலும் மலசலங்கழித்தலும் செய்க என்றபடி. அந்தரத்தில் செய்வதாக மனத்தால் வரையறை செய்து கொண்டு என்று அறிந்துகொள்க.

## நோக்கலாகாதன.

31. (வ-ம்) திறன் இலர் என்று எள்ளப்படுவதூஉ மன்றி நிரயத்துச் செல்வழி உய்த்திடுதலால், அறனறிந்தார் பிறர்மனை - கள் - களவு - சூது - கொலையோடு இவ்வைந்தையும் நோக்கார்.

(ப-ரை) திறன் - உறுதிப்பாடு, இலர் என்று - இல்லாதவரென்று,எள்ளப்படுவதூஉம் அன்றி - பலரால் இகழப்படுவது மன்றியே, நிரயத்து - நரகத்தின் கண், செல்வழி - செல்லும் வழியிலே, உய்த்திடுதலால் - செலுத்துதலாலே, அறன் அறிந்தார் - தரும சூக்ஷமம் உணர்ந்தவர், பிறர்மனை-பிறர்மனையாள், கள் - கள், களவு - களவு, சூது - சூதாட்டம், கொலை - கொலைசெய்தல், இவ்வைந்தும் - என்ற இவ்வைந்தினையும், நோக்கார் - கண்ணாலுங்காணார்.

(க-து) இகழ்ச்சிக்கும் நரகத்திற்கும் காரணமாக இருத்தலால், பிறருடைய மனையாளை விரும்புதல் - கள்குடித்தல் - களவுசெய்தல் - சூதாடுதல் - கொலைசெய்தல் என்னும் இவைகளை கண்ணுற்காணுதலும்; மனதால் நினைத்தலும் ஆகா.

Those who understand virtue would neither covet others' wives, nor would desire toddy, nor pilfer, nor gambling, nor murder; because these acts make them despicable and lead them to hell.

மனை!- இடவாகுபெயராய் மனையாளை உணர்த்திற்று. களவு - கள் - ப
அ - சா, வு-வி. கொலை-கொல்+ஐ. திறன் (திறம்). எள்ளப்படுவது - செய
ப்பாட்டு வினை எதிர்காலத்தொழிற்பெயர். செல்வழி - வினைத்தொகை. உய்
த்திடுதலால் - செயின் என்னும் வாய்பாடு பற்றிவந்த வினையெச்சம். உய் -
பகுதி, த்-ச, த் - எழுத்துப்பேறு, இடு - துணைவினைப்பகுதி, உய்த்திடு-அனை
த்துமொரு பகுதி, து - அல் - சா, ஆல்-வி. "தேவரனையர் கயவரவருந்தா,
மேவன செய் தொழுகலான்"; "அறைபறை யன்னவர் கயவர்தாங் கேட்ட,
மறைபிறர்க் குய்த் துரைக்கலான்"; "அந்தணரென்போ ரறவோர்மற் றெவ்
வுயிர்க்குஞ், செந்தண்மை பூண்டொழுகலான்" என வருகின்ற விடங்களி
லும் இது போன்றல் காண்க. படுவதூஉ - இன்னிசையளபெடை.

பிறர்மனை என்னும் உயர்திணை கள் - களவு - சூதுகொலை என்ற அஃறி
ணைப்பெயர்களோடு கூடிவருதலால் "திணைபால் பொருள்பல விரவினசிறப்
பினும், மிகவினுமிழிபினுமொருமுடிபினவே"(ந-சூ-378) என்கிற விதியின்படி
இவை யென அஃறிணைப்பன்மையாற் சுட்டினார்.

சிந்தித்தலாகாதன.

32. (ப-ரை) பொய் - பொய்யும், குறளை - கோட்சொல்லும், வெளவல்-
பிறர்பொருளை அபகரிக்கவிரும்புதலும், அழுக்காறு - பிறர்செல்வத்தைக்கண்
டுபொறாமையும், இவை நான்கும் - என்ற இவை நான்கினையும், ஐயம் தீர் -
சந்தேகம் நீங்கிய, காட்சியார் - அறிவினை உடையார், சிந்தியார் - நினையார்:
சிந்திப்பின் - நினைப்பாராயின் (அவை), ஐயம் புகுவித்து - பிச்சையெடுக்கும்
படி செய்வித்து, அருநிரயத்து-கொடியநரகத்தினிடத்தும், உய்த்திடும்-புகுவி
க்கும். தெய்வமும் - தெய்வமும், செற்றுவிடும்-(அவர்களைக்) கெடுத்துவிடும்.

(க-து) பொய்வார்த்தை - கோள்சொல்லுதல் - பிறர்பொருளை வெளவ
விரும்புதல் - பிறர்செல்வங் கண்டுபொறாமை என்ற நான்கும் பிச்சை யெடுக்
கும்படி செய்வதோடு நரகத்திற்கும் காரணமாக இருத்தலால் அவைகளைமன
ததிலும் நினைத்தலாகாது.

Those whose mind is free from the doubt of evil would entertain no thought of lying, tale-bearing, plundering and envy. The very thought of these four would send one abegging and make him enter the dreadful hell. God also would ruin him.

குறளை (from குறு). வெளவல் - (வெளவு or வவ்வு - பகுதி). same as
வெஃகல். அழுக்காறு - பண்புப்பெயர். இந்தப் பண்புப்பெயர் தொழிற்பெ
யராங்கால் அழுக்கறல் என நிற்கும். அதிலே நின்று முக்கால வினைமுற்றுக்
கள் அழுக்கற்றான் - அழுக்கறாநின்றான் - அழுக்கறுப்பான் எனவரும். அழுக்
கற்று என்பது 'அழுக்கற்றகன்றாருமில்லை' என்பதில் வினையெச்சமாக வந்தி
ருக்கிறது. "கொடுப்பதழுக்கறுப்பான் சுற்றம்" என்பதில் அழுக்கறுப்பான்
என்பது வினையாலணையும் பெயர். ஆகவே அழுக்கறு பகுதி என்பது பெற
ப்படுகின்றது. பெறவே அழுக்காறுஎன்பது முதனிலை திரிந்த பண்புப்பெயர்
என்பது தெளிவாகும். (அழுக்காறாமை - opp). ஐயம் தீர் என்றது இவற்றை
அநுசரிக்கலாமோ என்ற சந்தேகந்தானுமொழிந்த காட்சி (-அறிவு) இங்கே
சாத்தியத்தைச் சாதனமாக உபசரித்தார். ஐயம் - பலபொரு ளொருசொல்
—சந்தேகம், பிக்ஷை, பிக்ஷையெடுக்கும் பாத்திரம், சிலேட்டுமம். பிச்சை
யெடுத்தல் - ஐயம்புகுதல். சந்தேகங்கொள்ளல்-ஐயுறல். ஐயுறவு - noun. உம்-
இறந்தது தழீஇயது. செற்றுவிடும் - ஒரு சொல் - (செற்று விடு-பகுதி. இதில்

விடு - துணிவைக் காட்டுகிற விகுதி. செற்று என்பதற்கு செறு - என்பது பகுதி. செறுத்தல் - கொல்லல், வெறுத்தல். விடு என்பது சேர்ந்த மாத்திர த்தில் பகுதி இரட்டியது).

## போசனக்கிரமத்தின் ஒழுபு.

33. (ப-ரை) தமக்கென்று - தமக்கென்று, உலை ஏற்றார் - உலை வையார். தம்பொருட்டு - (தெய்வத்தின் பொருட்டன்றித்) தம் காரணத்தால் கொ ன்று, ஊன் கொள்ளார் - மாமிசத்தைக் கொள்ளார். மனை - மனை யுறை தெய் வங்களுக்கு, பலி ஊட்டினமை - பலி ஊட்டின படியை, கண்டு - அறிந்த பின்பு, ஊண் உண்க - தாம் உண்ணக்கடவர். அடுக்களை - சமயலிடத்தை, எச்சில் படார் - எச்சில் படுத்தார்.

(க - து) தமக்கு மாத்திரம் ஆவதாக உலை வைத்தலாகாது. தம்முடைய நிமித்தமாக ஒரு உயிரைக் கொன்று அதன் மாமிசத்தைக் கொள்ளலாகாது. மடைப்பள்ளியை எச்சிற்படுத்த லாகாது. வீட்டுத் தெய்வங்களுக்குத் திருவா ராதனை செய்தபிறகே உணவு செய்தல் வேண்டும்.

Do not make a fire for cooking only for yourself. Do not kill an animal for your sake (except it be for sacrifice.) Do not defile the cook room. Dine only after seeing that the household deities are offered their sacrifice.

**தமக்கு** - தாம் என்பது வேற்றுமை உருபு ஏற்றால் முதல் குறுகி நான் காம் வேற்றுமையில் அகரச்சாரியையும்பெறும். தாம் + கு = தம் + கு = தம் + க் + கு = தமக்கு. தான் - நாம் என்பனவும் இங்ஙனமே. "தான் தாம் நாம்முதல் குறுகும் ... குவ்வி னவ்வரும் நான்காறிரட்டல" (ந - சூ - 247). **உலை** - a fireplace for cooking, a hearth, நெருப்புள்ள அடுப்பு. **பொருட்டு** - நான் காம் வேற்றுமைச் சொல்லுருபு. தம்பொருட்டு - தம் நிமித்தமாக. ஊன் என் பதில் ன் - சாரியை. **அடுக்களை** - (அடு - பாகஞ்செய்தல்) பாகஞ் செய்யுமி டம். எச்சிற் படார் (எச்சிற்படு - பகுதி). பலி - Sans. தெய்வங்களுக்கிடும் உணவு. ஊட்டினமை - இறந்தகாலத் தொழிற்பெயர். நிகழ்-ஊட்டுகின்றமை.

34. (வ-ம்) இளங்கிளைகள் உண்ணுமிடத்துக் குரவர் உயர்ந்ததின்மேல் இரார்; இறந்து இன்னு செய்தக்கடைத்தும் உள்ளழிவு செய்யார்.

(ப - ரை) இளங்கிளைகள் - தமக்கிளைய சுற்றத்தார், உண்ணுமிடத்து - உண்ணும்போது, குரவர் - குரவராயினோர், உயர்ந்ததின்மேல் - உயர்ந்த ஆசனத்தின் மீது, இரார் - உட்காந்திரார்: இறந்து - முறைமை கடந்து, இன்னு - துன்பச் செய்கைகளை, செய்தக்கடைத்தும் - (அவ்விளங்கிளைகள்) செய்தகாலத்தும், உள்ளழிவு - மனம் அழிவனவற்றையும், செய்யார் - செ ய்யார்.

(க-து) சிறுவர்கள் உண்ணும் போது பெரியோர்கள் உயர்வான பீடத்தி ன் மேல் இருக்கலாகாது. சிறுவர்கள் செய்யத்தகாத குற்றம் செய்திருப்பி னும் அவர்கள் உண்ணும்போது அவர்களை மனம் நோகும்படி யாதொன்றும் செய்தலாகாது.

When children dine, seniors should not sit on high seats: even though they should have done some grave evil, seniors should not while they dine do anything painful to their minds.

உயர்ந்தது என்னும் வினையாலணையும் பெயர், இரார் என்னுங் குறிப்பால் ஆசனத்தை உணர்த்திற்று. உள்ளழிவு-உள்ளழிதற்குக் காரணமானதை உள்ளழிவு என்றது உபசார வழக்கு. செய்தக்கடைத்து-செயின் என்னும் வாய்பாட்டு வினை யெச்சம். உம் - எச்சவும்மை. கிளை - தமக்குச் சுற்றத்தார் மரத்துக்குக் கிளை போலுதலால் - உவமை யாகுபெயர்.

செய்வன தவிர்வன.

35. (ப-ரை) நுண்ணிய - நுட்பமான, நூல்-நூலை, அறிவினர் - உணர்வார், கண் எச்சில்-ஒருவன் தன் கண்ணிற்கு மருந்தெழுதிய கோல் கொண்டு அவ்வெச்சில் கழியாமல், கண் ஊட்டார் - தமது கண்ணிற்கு அம்மருந்தை ஊட்டார்: காலொடுகால் - காலோடுகாலை, தேயார் - தேய்த்தலைச்செய்யார்: புண்ணியமாய - புண்ணியமாய பொருள்களை, தலையோடு - தலையின்கண்ணும், உறுப்பு - மற்றை உறுப்பின் கண்ணும், உறுத்த - உறுத்துக.

(க-து) ஒருவர் கண்ணிற்கு மருந்தெழுதிய கோலைச் சுத்திசெய்யாமல் அதனால் தம்முடைய கண்ணிற்கு அம்மருந்தை ஊட்டுதல் ஆகாது. காலோடு காலைத் தேய்த்தலாகாது. புனிதமான பொருள்கள் கிடைப்பின் அவற்றைச் சிரசிலும் கண்முதலிய உறுப்புகளிலும் ஒற்றிக்கொள்க.

Those who know the subtle shastras would not apply medicine to their eyes with a brush with which medicine was applied to another's eyes before washing it: would not rub one foot against another: would touch their heads and other organs with holy things.

கண்ணெச்சில் - பிறரொருவருடைய கண்ணின் எச்சில். கண்ணூட்டார்-தமது கண்ணில் உண்பியார். எச்சில் - இங்கே மருந்துமுதலிய பூசிய எச்சில். காறேயார் - கால் + தேயார் - "னலமுன்றனவும் ... ஆகும் தனக்களாயுங் காலே" (ந-சூ-237) என்பதனால் கால் + றேயார், "குறில் செறியாலள அல்வழிவந்த, தகரந்திரிந்த பிற்கேடும் &c. (ந-சூ-229) என்பதனால் கால் + றேயார் = காறேயார். புண்ணியமாய - புனிதமானவை. ஆய-பலவின்பாட்க்கை இறந்தகால வினையாலணையும்பெயர். (ஆ-ப, ய் இ, அ-வி). கோயில் பிரசாதம் - திருத்துழாய் - திருநீறு - பெரியோரிடத்தில் நின்றும் வந்தபொருள்கள். முதலானவை.உறுப்பு-கண்முதலிய உறுப்பு. உறுத்த-அகரவீற்றுவியங்கோள். நுண்ணிய-நுண் + இன் + அ = நுண் + ண் + இ + ய் + அ. இதில் இன் என்பது இறந்தகால இடைநிலை. அது கடைக்குறையாயிற்று. ண் & ய் - சந்தி. அறிவினர் என்பதில் இன் - சாரியை.

36. (ப-ரை) நாழி - அளக்கும் நாழியை, மணைமேல் - மணையின்மீது, இரியார் - வைக்கார்: மணை-மணையை, கவிழார்-கவிழ்த்துவையார்: கோடி-புது வஸ்திரத்தை, கடையுள் - தலைக்கடையின்கண், விரியார் - விரித்தல்செய்யார்: ஓராது - ஆராயாது, கடைத்தலை - (பலரும் வருவதான) கடைத்தலைக்கண், கட்டில்படார்-கட்டிலைப்போட்டு படுத்தல் செய்யார். அறியாதார்தம்-தம்மை யறியாதாரது, தலைக்கண் - எதிரில், நில்லாவிடல் - நில்லாது விடுக.

(க-து) அளக்கும் படியை மணைமேல் வைத்தலும்,மணையைக் கவிழ்த்து வைத்தலும், புதுவஸ்திரத்தைத் தலைக்கடையில் பிரித்தலும், தலைக்கடையிற் கட்டிலிட்டுப் படுத்தலும் கூடாது. தம்மை அறியாதாருடைய எதிரில் நிற்றலொழிக.

Do not put the corn measure on the stool. Do not put the stool upside down. Do not unfold new cloth in the front hall. Do not unh-

esitatingly lie down on a cat placed in the front hall. Do not stay opposite to any one whom you do not know (or do not stay opposite the front door of any whom you do not know).

நாழி—ஆழாக்கிரண்டுகொண்டது உழக்கு; உழக்கு இரண்டு கொண்டது உரி; உரி இரண்டுகொண்டது நாழி. இவ்வளவினை அளக்குங்கருவியும் நாழியெனப்படும். முகத்தலளவை. இரியார். இரி என்பது இரு என்பதற்கு முன்னாளில் வழங்கிய பிறவினைபோலும். "சங்கம் இரியின்றார் பாண்டியார்" எனவருகின்ற வழக்கும் இதற்கியைந்திருக்கின்றது. கோடி - (புதுமை) புத்தாடை - பலபொருள்ளொருசொல். தெருக்கோடி - தெருமுனை. கோடி ரூபாய் = நூறு லக்ஷம் ரூபாய். கோடாகோடி - அநேககோடி. கடை - வீட்டின் கடைசிபாக மாதலின் கடை எனப்பெயர் பெற்றது. ஓராது-(ஓர் - பகுதி) ஓர்தல் - ஓர்ந்தான் - ஓர்ந்து - ஓர்ந்த எனவருகின்ற பிரயோகங்களைக்காண்க. படார் (படு - பகுதி). படுப்பர் - உடன்பாடு. அறியாதார் - என்பதில் த் எழுத்துப்பேறு. நில்லா - ஈறுகெட்ட எதிர்மறை வினையெச்சம் (நில்லாமல்).

## கலியாணப்பந்தலின்கீழ் பரப்பலாகாதவை.

37. (ப-ரை) துடைப்பம் - துடைப்பமும், துகள்காடு - துகளோடுகூடிய துராலும், புல்லிதழ் - பூவின் புறவிதழும், செத்தல் கருங்கலம் - பழங்கருங்கலங்களும், கட்டில் கிழிந்ததனோடு - கிழிந்த கட்டிலும், ஐந்தும் - என இவ்வைந்தையும், பந்தர் அகத்து-மணப்பந்தலின்கீழ், பரப்பற்க-பரப்பாதொழிக.

(க-து) கல்லியாணப் பந்தலின்கீழ் துடைப்பம்-செத்தை - பூவின்புறவிதழ் - பழைய கரிப்பானை - கிழிந்தகட்டில் என்னும் இவைகளைப் பரப்பலாகாது.

Do not spread under the marriage pandal these five:— broom, dried leaves, external petals of flowers, old smutty pots, and torn cots.

துடைப்பம்-தும்புதூசியைத் துடைப்பதற்கான கருவி. (துடை-பகுதி). துகள்-தூசு. துரால்-செத்தை. புல்லிதழ் (Opp-அகவிதழ்). (புல்லி opp-அல்லி) செத்தல்-சா என்பதனடியாகப்பிறந்த தொழிற்பெயர். பயனற்றது-பழையது என்றிங்கேபொருள்கொள்க. செத்தலாகியகருங்கலம். பரப்பற்க-எதிர்மறை வியங்கோள் - (பரப்பு - பகுதி). பந்தர் என்பதில் லகரத்துக்கு ரகரம்போலி.

## இற்கிழந்தியர் இல்லம் பொலியச்செய்வன.

38. (வ-ம்) நல்லது உறல் வேண்டுவோர் சிறுகாலை காட்டுக்களைந்து கலங்கழீஇ இல்லத்தை எங்கும் ஆப்பிநீர்தெளித்து ... பெய்க.

(ப-ரை) நல்லது-நல்ல செல்வத்தை, உறல்-அடைதலை, வேண்டுவார் - விரும்புகின்றவர்கள், சிறுகாலை - சிறுகாலையே (துயிலெழுந்து). காட்டு - இல்லத்துள்ள செத்தையை, களைந்து-நீக்கி, கலம் கழீஇ - சருங்கலங்களைக்கழுவி, இல்லத்தை - வீட்டில், எங்கும் - எவ்விடத்தும், ஆப்பிநீர் - பசுஞ்சாணங்கரைத்தநீரை, தெளித்து - தெளித்து; நீர்ச்சால் - நீர்ச்சாலையும், கரகம்-குடத்தையும், நிறைய - நிறைவாக, மலரணிந்து - மலராலலங்கரித்து, இல்லம் பொலிய - இல்லத்தும் பொலியும்படி, அடுப்பினுள் - அடுப்பிலே, தீ பெய்க-தீ உண்டாக்குக.

(க-து) நல்லசெல்வத்தை அடையவேண்டுவோர் அதிகாலையில் எழுந்து வீட்டைவிளக்கிப் பாத்திரங்களைக்கழுவி வீடு முழுவதும் சாணநீர்தெளித்து

நீர்ச்சால் கரகங்களை மலரணிந்து அதன்பின்பு அடுப்பினுள் தீயைமூட்டுதல் வேண்டும்.

Those who are anxious of prosperity should get up at day-break, sweep the house, clean the vessels, sprinkle cow-dung water throu ghout the house adorn with flowers waterpots and then make fire in the oven so as to add lustre to the house.

காடு - செத்தை. "நெடிலோடுயிர்த்தொடர் குற்றுகரங்களுள், டறவொற்றிரட்டும் வேற்றுமைமிகவே." என்றதனால் காட்டு என டகரம் இரட்டித்து வந்தது. இரண்டாம் வேற்றுமைத் தொகையாகலின் க் மிகுந்தது. முன் பாட்டில் அல்வழியாதலையின் 'தூகட்காடு புல்லிதழ்' என்பதில் காடு - டகரம் இரட்டியாமல் வந்தது. களைந்து - (களை - பகுதி) - உடுப்புகளைதல் - களைகளைதல். ஆப்பிநீர் என்பதைமுன்னே ஆப்பிசுடலை என்றவிடத்தில் உரைத்ததனால் அறிக. சிறுகாலை - early part of Morning நீர் + சால் = நீர்+ச்+சால் =நீர்ச்சால். "யரழமுன்னர்க் கசதப அல்வழி, இயல்புமிகலுமாகும். வேற்றுமைமிகலும் இனத்தோடுறழ்தலும் வீதிமேல்" (ந-சூ-224).

## வேதாத்தியயனஞ் செய்யலாகாத காலங்கள்.

39. (ப-ரை) அட்டமியும்-அட்டமிநாளும், ஏனை உவாவும்-மற்றஉவாநாளும், பதினான்கும் - பதினான்காநாளும், அப்பூமி காப்பார்க்கு - தாம் உறையும் பூமிகாக்கும் அரசர்க்கு, உறுகண்ணும் - துன்பம் உள்ளநாளும், மிக்கநிலத்துளக்கும் - மிக்க பூமி அதிர்ச்சி உள்ளநாளும், விண் அதிர்ப்பு - விண் அதிர்ப்புள்ள நாளும், வாலாமை - தமக்குத் தூய்மை போதாதநாளும் (என இவை), பார்ப்பார் - பிராமணர், இலங்குநூல் - வேதம், ஓதாத - ஓதாத, நாள் - நாள்களாம்.

(க-து) அஷ்டமி - அமாவாசை - பௌர்ணிமி - சதுர்த்தசி - அரசர்க்காபத்துக்காலம் - பூகம்பம் - இடிமுழக்கம் - உடம்பு அசுசியானநாள் என்னும் இவைகள் வேதாத்தியயனம் பண்ணலாகாத காலங்களாம்.

The following are the times when brahmins do not read their vedas:— half moon day, new moon and full moon days, 14th day, time of danger to the rulers of the earth, earthquake, rumbling of the skies, and times when they are themselves unclean.

அட்டமி Sans; அஷ்டமி (அஷ்டம் - எட்டு, The eighth day of the moon, either Waxingor waning. அமாவாசை - பௌர்ணிமி கழிந்த எட்டாம்நாள். உவா - முன்னருரைக்கப்பட்டிருக்கிறது. பதினான்கு - சதுர்த்தசி. The 14th day of the moon. அ - சிறப்புப்பற்றிவந்த சுட்டு. பூமிகாப்பார் - பூபாலர் - அரசர். துளக்கு (துளங்கு - அசை) அசைத்தல் - அதிர்ச்சி, வாலாமை - சூதகம் தீட்டுமுதலியன. உறுகண் - நிலத்துளக்கு முதலியன நிகழ்கின்றகாலத்தை உறுகண் - நிலத்துளக்கு முதலியனவாக உபசரித்தார் - உபசாரவழக்கு. இலங்கு- ஒளிபொருந்திய - சிரேஷ்டமான: இலங்குநூல் என விசேடித்தமையின் வேதம் எனக்கொள்க.

"உருமுமண்வாரி உற்கைவீழ்ந்திடுநாள் சுழல்வளி உற்றநாள் ஓர்பால்
எரிபடுநாளில் அரையிருட்போதில் பின்னவர் இருந்திடுமிடத்தில்
அரசருற்றிடையூறுற்றுழி அவர்கட் கசுபம்வந்துற்றிடுநாளில்
மருவியபதினான் கிருவாநந்தை அட்டமி ஓதன்மாண்பன்றே"—காசிகாண்டம்.

[நந்தை - பிரதமை - சஷ்டி - ஏகாதசி.]

### தருமஞ்செய்து விருந்திடத்தக்க காலங்கள்.

40. (ப-ரை) கல்லியாணம்-தான் செய்யும் கல்லியாணநாளின் கண்ணும், தேவர் (விழா)-தேவர்க்குச் சிறப்புநாளின் கண்ணும், பிதிர் (விழா)-பிதிர்களுக்குச்சிறப்புச் செய்யும்நாளின்கண்ணும், விழா - விழாநாளின்கண்ணும், வேள்வி-யாகஞ்செய்யும் நாளின் கண்ணும், என்ற ஐவகைநாளும் - என்ற ஐந்துவகைப்பட்ட காலத்தும், இகழாது - இகழாமல், அறம் - கொடை அறம், செய்க-செய்க. விருந்திற்கும் - விருந்தினருக்கும், கூழ்பெய்க - உணவிடுக.

(க-து) கல்லியாண நாளிலும் - தேவர்க்குச் சிறப்பான நாளிலும்-பிதிர்களுக்குச் சிறப்புச்செய்யும் நாளிலும் - திருவிழாநாளிலும் - யாகஞ்செய்யும் நாளிலும்-தானஞ்செய்வதுடனே விருந்தினர்க்குச் சோறிடுக.

Give alms to the poor and entertain your guests without failure on the following five occasions :— marriage, anniversaries of gods, anniversaries of manes, festivals, and yaga sacrifices

கல்லியாணம் - (Sans) கல்யாணம்-சுபம்) - விவாகம். கல்யாணகுணம்-நல்லகுணம். பிதிர் (Sans - பித்ரு) தந்தை வழியினுள்ளார் - Paternal ancestors விழா From விழு - சிறப்பு.

### இன்னதற்குத்தக இன்னது செய்தல்.

41. (ப-ரை) உடை - உடுக்கும் வஸ்திரம், நடை - நடக்கும் ஒழுக்கம், சொற்சோர்வு - சொல் இழுக்குதல், வைதல் - திட்டுதல், இ நான்கும் - என இந்நான்கும், தத்தம் நிலைமைக்கும் - தாம் அரசரால் சிறப்புறப் பெற்றமைக்கும், தத்தம் கல்விக்கும் - தமது கல்விக்கும், தத்தம் ஆண்மைக்கும் - தமது சௌரியத்துக்கும், தத்தம் குடிமைக்கும் - தமது குடிப்பிறப்பிற்கும், தக்க செயல் - தக்கனவாகச்செய்க.

(க-து) உடுக்கும் உடை - நடக்கும் நடை - சொல் இழுக்குதல் - திட்டுதல் என்னும் நான்கையும் தங்கள் தங்களுடைய நிலைமைக்கும் கல்விக்கும் ஆண்மைக்கும் குடிப்பிறப்பிற்கும் தகுந்தபடி செய்க.

Your dress, general behaviour, faltering in speech, reviling others: these four should be in accordance with your position, education, manliness and lineage.

நடை (நட-பகுதி). தத்தம் - தம் + தம். தக்க - தகு பகுதி. பலவின்பால் வினையாலணையும்பெயர். குடிமை - குடிக்குரிய ஒழுக்கம். here குடிப்பிறப்பு. செயல்-வியங்கோள். இச்செய்யுளை நிரனிறையாகப் பொருள்செய்து கொள்வதும் பொருந்தும்.

### தவிர்வன சில.

42. (வ-ம்) தள்ளியும்...கேள்வியவர் (பலருள் பிறரைப்) பழியார்...பலருள் இழியார் உறங்கார்...இகந்துரையார்

(ப-ரை) தள்ளியும் - இறந்தும், தாங்க அரும் - பிறரால் மாறுபடற்கரிய, கேள்வியவர் - கேள்வி உடையவர்; பலருள் - பலர்நடுவில் இருந்து, பழியார் - பிறரைப் பழித்து உரையார்: இழியார் - இழித்து உரையார்: பலருள் - பலர் நடுவில், உறங்கார் - நித்திரை செய்யார்: இசையாத - தமக்குச் செய்யப் பொருந்தாதவற்றை, நேர்ந்து - (பிறர்க்குச்செய்வேனென்று)

உடன்பட்டு, கரவார் - (பின்பு) செய்யாதொழியார்: இசைவு இன்றி - தகுதி யின்றி, இல்லானை - எளியவனை, எள்ளி இகந்து - இகழ்ந்து முறைமை கடந்து, உரையார் - பேசார்.

(க-து) நல்ல கேள்விச்செல்வமுடையவர் பலர் நடுவிலிருந்து பிறனைப் பழித்தும் அழித்தும் பேசார்: பலர் நடுவில் படுத்து நித்திரை செய்யார்: தம் மாலாகாத காரியத்தைச் செய்கிறேனென்று ஒருவருக்கு வாக்கிட்டுப் பின்பு அதனைச்செய்து முடியாமலிரார்: ஏழைகளைத் தகுதி யில்லாமல் இகழ்ந்து அளவுகடந்து பேசார்.

Under any circumstances,those who have heard much would neither revile nor speak ill of others in the midst of many persons: they would not sleep in the midst of many: what they cannot do they would not promise and fail to fulfill; they would not unduly despise and speak ill of poor persons.

இசையாத - எதிர்மறைப் பலவின்பால் வினையாலணையும்பெயர். எள்ளி - (எள் - அவமதி) எள்ளைப்போல அற்பமாய் எண்ணுதல். "எள்ளிப்பிறரை இகழ்ந்துரையார்" என்றது நாலடி. இகந்து - இக - கடத்தல் - அளவு கடந்து. தாங்கரும் - மிக்க.

## உடம்பின் மேனியைக் கெடுப்பன.

43. (வ-ம்) தம்மொளி வேண்டுவார் மின்னொளியும் வீழ்மீனும் வேசையர்கள் கோலமும் நோக்கார். பகற்கிழவோன்...மற்று.

(ப-ரை) தம் ஒளி - தமது விளக்கத்தை, வேண்டுவார் - விரும்புகின்றவர், மின் ஒளியும்-மின்னலின் பிரகாசத்தையும், வீழ்மீனும் - எரிநக்ஷத்திரத்தையும், வேசையர்கள் - பொதுமகளிருடைய, கோலமும் - ஒப்பனை யழகையும், நோக்கார் - விரும்பிப்பாரார்: பகல்கிழவோன் - சூரியனுடைய, முன் ஒளியும்-காலையொளியையும், பின் ஒளியும்-மாலை யொளியையும், அற்று-அத்தன்மையே நோக்கார்.

(க-து) தம்முடைய தேககாந்தி கெடாதிருக்க விரும்புகின்றவர்கள் மின்னல் - எரிநக்ஷத்திரம் - வேசையருடைய அலங்காரம் - காலைவெய்யில் - மாலைவெய்யில் என்னும் இவைகளை உற்றுப்பார்த்தல் கூடாது.

Those who wish to preserve their complexion would not look at lightning, meteors, and embellishments of harlots. They would not in the same manner look at the morning and evening sun.

வேசை - sans வேஸ்ய. பகற்கிழவோன் - (பகல் - பகற்பொழுது: கிழவோன் - உரியவன்) பகற்பொழுதுக்கு உரியவன்=சூரியன். அற்று - அத்தன்மைத்து; குறிப்புமுற்று. அத்தன்மையாகவே கெடுதிவிளைக்கும். ஆதலால் நோக்கார் என்பது இசையெச்சமாகக்கொள்க. மாலைவெய்யில் உடம்பிற்கு நன்மை செய்யும் என—

காலைவெயில் காய்ந்தார்க்குக் காணுப்பிணி யினைத்தும்
பாலை வெயில் போலப் பரவுங்காண் - மாலைவெயில்
காய்ந்தார்க்குறுபிணிமுற்காசறுமில க்கண நூ
லாய்ந்தார்க் குறுவமுச்சொ லாம்.

உரைத்திருப்பவும் இந்நூலில் மாலைவெயிலை ஆகாதென்றது ஒளி நேரா ய்க்கண்ணில் தாக்கும்படி பார்த்தலாகாது என்ற கருத்துபோலும்.

### உரைக்கலாகாத வார்த்தைகளின் வரையறை.

44. (ப-ரை) என்றும்-எப்போதும், அசையாத-தளராத, உள்ளத்தவர்-மனதையுடையவர்; படிறும் - வஞ்சனை வார்த்தையும், பயனிலவும் - பயன் படாதவார்த்தையும், பட்டி உரையும் - வாய்காவாமல் வேண்டினபடி பேசும் வார்த்தையும், வசையும் - பிறரைப்பழியுரைக்கும் வார்த்தையும், புறனும் - காணுதவழிப்பிறரை இகழ்ந்துரைக்கும் உரையும், உரையாரோ - ஆகிய இவை யாதும் சொல்லார்.

(க-து) வஞ்சனைவார்த்தை - பயனில்லாதசொல் - நாவடக்கமின்றி வே ண்டியதைச்சொல்லும் சொல் - பழிச்சொல் - ஒருவரெதிரில் இல்லாதபோது அவரை இகழ்ந்துரைத்தல் என்னும் இவைகளை ஒழித்தல் வேண்டும்.

Those of steady mind would never utter fraudful words, useless words, unguarded words, calumny, and slander.

பயனில என்பதில் இல - இல்லாதன - பலவின்பால் குறிப்பு வினையால ணையும்பெயர்.

### பயிற்றலாகாத பழிச்செயல்கள்.

45. (ப-ரை) தெறியொடு - விசிறி யெறிதலும், கல்லேறு - கல்லெறித லும், வீளை - கனைத்தலும், விளி - தூரப்போகின்றவனை அழைத்தலும், விகர் தம் - ஒருவன் செய்கைசொல் முதலாயினவற்றைத் தானும் அவ்வகை இகழ் ந்து செய்து காட்டலும், கதம் - வேகமுடையனுதலும், கரத்தல் - ஒளித்த லும், கைபுடை - கையோடுகைபுடைத்தலும், தோன்ற-பிறர்க்கு வெளிப்பட, உறுப்புச்செகுத்தலோடு-கண்ணிடுதல்முதலாயினசெய்து தன்னுறுப்பைச்செ குத்தலும், இன்னவை எல்லாம் - இத்தன்மைத்தான எல்லாவற்றையும், பயிற் ருர் - பயின்றுசெய்யார், நெறிப்பட்டவர் - வழிப்பட்டவர்.

(க-து) யாதொன்றை விசிறியெறிதல் - கல்லெறிதல் - கனைத்தல் முதலி யன செய்தல் - தூரப்போகின்றவனை அழைத்தல் - பிறருடைய சொல் செய் கைகளை நடித்துக்காட்டல் - வேகமுடையனுதல் - ஒளித்துக் கொள்ளல்-கை யோடுகையைத்தட்டுதல் - வெளிப்படையாகக் கண்ணிடுதல் மூக்கசைத்தல் முதலியனசெய்து உறுப்பைச்செகுத்தல் என்றிவைபோன்ற யாதொன்றையும் செய்து பழகாமை நல்லொழுக்கமாம்.

Those of good manners would not practise all these:—spattering, pelting stones, whinning, calling one who goes at a distance, mimicry, impetuous motion, hiding, clapping hands, and distorting features apparently to express certain signs (i. e., winking &c).

தெறி-விளி - (தெறித்தல்) முதனிலைத் தொழிற்பெயர்கள். கல்லேறு - ஏறு from எறிதல். விகர்தம் - lit - வேறுபாடு. கைபுடை - முதனிலைத் தொழிற்பெயர். இன்னவை - (இன்ன — இடைச்சொல், வை - பலவின்பால் விகுதி). இடையடியாகப்பிறந்த பலவின்பாற் பெயர். பயிற்ருர் - பயிற்று is causative of பயில். பயிற்று + ஆ + ஆர்.

### விருந்தினர்க்குச்செய்யும் உபசாரம்.

46. (ப-ரை) முறுவல் இனிதுரை - முறுவலோடு கூடிய இனிய வார்த் தையும், கால்நீர் - கால்கழுவநீரும், மணை - இருக்கமணையும், பாய் - கிடக்

சப்பாயும், கிடக்கையோடு-கிடக்கும் இடமும். இவ்வைந்தும்-என இவ்வைந்தும், என்ப - என்று சொல்லுப. தலைச்சென்றார்க்கு - தம்மிடத்து வந்தவர்க்கு, ஊணொடு - உணவளித்தலுடனே, செய்யும் - செய்யத்தகுவனவான, சிறப்பு-சிறப்புக்கள்.

(க-து) தம்மை நாடிவருகின்ற விருந்தினர்க்குச் சோறிடுதலுடனே செய்யத்தக்க சிறப்புகளாவன:—இனிய முகத்துடனே இன்சொல் சொல்லல் - கால்கழுவ நீர்தரல் - இருக்கமணைகொடுத்தல்-படுக்கப் பாய் கொடுத்தல்-படுக்க இடங்காட்டுதல் என்பனவாம்.

Uttering sweet words with a smile, offering water to wash the feet, giving a stool to sit down, spreading a mat to lie down, showing a place to rest: these five are the marks of attention to be shown to your guest, besides giving him food.

விருந்தினனாக ஒருவன்வந் தெதிரின் வியத்தல்நன்
மொழியினி துரைத்தல்,
திருந்துறநோக்கல், வருகென உரைத்தல், எழுதல், முன்
மகிழ்வன செப்பல்,
பொருந்துமற் றவன்றன் அருகுற இருத்தல்,
போமெனில் பின்செல்வதாதல்,
பரிந்துநன் முகமன் வழங்கல், இவ் வொன்பான்
ஒழுக்கமும் வழிபடுபண்பே

தவிசுதாள் விளக்கப் புனல், தமக் கியன்றஅடிசில்,
பூந்தண் மலர்ப், பாயல்
உவகையி னுறையும் இடன், நுகர் தெண்ணீர்ஒண்
சுடர்எண்ணெய், வெள்ளிலைகாய்,
இவைகளொன் பதுந்தன் மனையின் அடைந்தோர்
மகிழ்வுற இனிதினிலளித்தல்,
நவையற இல்வாழ் வடைந்துளோன் பூண்ட
கடனெனநான்மறை நவின்ற. **காசிகாண்டம்.**

**முறுவல்**-முதனிலைத்தொழிற்பெயர். முறுவலித்த, முறுவலிக்க, முறுவலித்தான் என வினைவிகற்பங்கள் பிறத்தல் காண்க. இனிதுரை-பண்புத்தொகை. கானீர் (கால்+நீர்). காலுக்குநீர் என நான்காம்வேற்றுமைத் தொகையாகவாகிலும், காலைக்கழுவ நீர் என இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்றொக்க தொகையாக வாகிலுங் கொள்க. **பாய்** - (பா-பரத்தல்)பரந்திருப்பது. கிடக்கை - (கிட+கை) தொழிலாகுபெயர். தலைச்சென்றார். (தலை - இடம்) தன்னிடம் சென்றார். தன்னிடம் வந்தவர். **ஊண்** from உண்.

## நெடுநேரம்நிற்றலாகாத இடங்கள்.

47. (வ-ம்) கறுத்த...விட்டுழியும் பலர்தொகு நீர்க்கரையும் நீடுநிலை நிகரில் அறிவினர் வேண்டார்.

(ப-ரை) கறுத்த - வெகுண்ட, பகைமுனையும் - பகைமுனையின் கண்ணும்; கள்ளாட்டுக் கண்ணும் - கள்ளால் களித்து ஆடும் இடத்தும்; நிறுத்த மனம் இல்லார் - பொதுமகளிரது, சேரி அகத்தும்-சேரிக்கண்ணும்; குணம் - தமது குணங்களை, நோக்கி - ஆராய்ந்து, கொண்டவர் - தம்மை விரும்பிக் கொண்டவர், கோள் - அக்கோட்பாட்டை, விட்ட உழியும்-விட்டவிடத்தும்;

பலர் - அநேகர், தொகு - கூடுகின்ற, நீர்க்கரையும் - தண்ணீர்த் துறையிடத்தும், நீடுநிலை-நெடிதாக நிற்கையை, நிகரில் - ஒப்பில்லாத, அறிவினர்-அறிவினையுடையார், வேண்டார்-விரும்பார்.

(க-ரு) உக்கிரமாகச் சண்டைசெய்கின்ற இடத்திலும், கள்குடித்துக் களித்தாடுகின்ற இடத்திலும், பரத்தையர் சேரியிலும், சிநேகம் தளர்ந்தவிடத்தும், அநேகர் வரப்போக இருக்கின்ற தண்ணீர்த்துறையிலும் நெடுநேரம் பொருந்தியிருப்பது தகுதியன்று.

Those of imcomparable wisdom do not wish to stand long at a place of fierce quarrel, at a place of revelry, in a hamlet of harlots, at a place where those who had befriended them for their good qualities have forsaken them, and at the entrance to a tank or river where many go for water.

கறுத்த-கறு-பகுதி, கறு-கறுப்பு-கோபம். முனை-battle.கள்ளாட்டு மூன்றும்வேற்றுமை உருபும் பயனும் உடன்றொக்க தொகை. ஆட்டு-(ஆடு-ப) முதனிலை திரிந்த தொழிற்பெயர். நிறுத்த-ஒருவழியில் நிறுத்த, ஒரு புருஷனிடத்தில் நிறுத்த. சேரி - (சேர் + இ பகுதிப்பொருள் விகுதி). சேர்ந்திருக்குமிடம். அகத்து-அகம் + அத்து (சாரியை). கோள் from கொள். விட்டுழி-விட்ட + உழி ( - இடம்). தொகு - வினைத்தொகைவினை. நீர்க்கரை- "யரழ முன்னர்க் கசதப வல்வழி, இயல்புமிகலு மாகும் வேற்றுமை, மிகலு மினத் தோடுறழ்தலும் விதிமேல்" (ந - சூ - 224) என்பதில் வேற்றுமை மிகலும் என்ற விதியால் க் மிக்கது. நீடு - வினையுரிச்சொல். நிலை - (நில் + ஐ) - தொழிற்பெயர்.

## செய்வன தவிர்வன.

48. (ப-ரை) முளிபுல்லும் - முற்றிய புல்லின்கண்ணும், முளிகானமும் - முற்றிய காட்டின்கண்ணும், சேரார் - சேர்ந்திரார். தீக்கு ஊட்டார் - அவற்றை அக்கினிக்கு உணவாக ஊட்டார். துளிவீழ - மழை பெய்யாநிற்க, காலுபரப்பி - காலைப்பரப்பி, ஓடார் - ஓடுவது செய்யார். தெளிவு இலா - தேற முடியாத, கானம் - காட்டுள், தமியர் - தமியராய், இயங்கார் - போகார். துளி அஃகி - மழை குறைந்து பெய்யாது ஒழிதலால், நல்குரவு - வறுமை, ஆற்ற - மிகவும், பெருகினும் - அதிகரித்தாலும், தொல்வரவில் - தமது குடியொழுக்கத்தில் நின்றும், தீர்ந்த - நீங்கிய, தொழில் - தொழில்களை, செய்யாரே - செய்யவேமாட்டார்.

(க-ரு) முற்றிய புல் இருக்கின்ற இடத்திலும் முதிர்ந்த காடுள்ள இடத்திலும் சேர்ந்திருத்தலாகாது. அவைகளைத் தீயிட்டுக் கொளுத்துதல் ஆகாது. மழை பெய்யும்போது காலைப்பரப்பி ஓடுதல் கூடாது. வழிதுறை தெரியாத காட்டில் ஒன்றியாகப்போதல் கூடாது. மழையின்றிக் காலங்கெட்டாலும் குடியொழுக்கம் தப்பி நடக்கவொண்ணாது.

Do not abide in a place overgrown with old grass and old forest: do not set fire to them. Do not run with spread legs when it rains. Do not go alone into a meshy wood. Do not do anything inconsistent with your birth though poverty should increase for want of rain.

முளிபுல் - (முளி - மரக்கணு) - கணுக்கொண்ட புல் - கணுமுற்றிய புல். கானம்-(கான் + அம் - சாரியை). ஊட்டார் - ஊட்டு + ஆ + ஆர். ஊட்டு என்

பது உண் என்பதற்குப் பிறவினை. தமியர்-முற்றெச்சம். இயங்கார் (இயங்கு-ப). அஃகி - அஃகு ( - குறைதல்) பகுதி. நல்குரவு from நல்கூர். நல்கூர்ந்தேன், நல்கூர்வேன், நல்கூர்ந்தோன், நல்கூர என வருதலறிக. ஆற்ற - வினையுரிச்சொல். தொல்வரவு - பண்புத்தொகையாயினும் ஒரு சொல்லாகக் கொள்க.

## சுகம்வேண்டுவார் செய்யலாகாதன.

49. (வ-ம்) நோயின்மைவேண்டுபவர், பாழ்மனையும்...தமியராய் தாமே புகார், பகல்வளரார்.

(ப-ரை) நோய் இன்மை - நோயின்றிச் சௌக்கியமாக இருப்பதை, வேண்டுபவர் - விரும்புகின்றவர்கள்; பாழ்மனையும் - குடியில்லாத மனையகத்தும், தேவகுலனும் - தேவாலயங்களுக்குள்ளும், சுடுகாடும்-சுடுகாட்டுள்ளும், ஊர் இல்வழி - ஊரில்லாதவிடத்து, எழுந்த - உளதாயின, ஒற்றை - தனியான, முது மரனும் - முதுமரத்தின்கண்ணும், தமியர் - துணையோடல்லது, தாமே - (அறிவின்றித்) தாமே, புகார் - போகார். பகல் - பகலில், வளரார் - நித்திரை செய்யார்.

(க-து) குடியில்லாத வீட்டிலும், கோயிலினுள்ளும், சுடுகாட்டினுள்ளும் ஊரில்லாதவிடத்துள்ள ஒன்றியான பழைய மரத்தினிடத்தும் துணையின்றித் தனியே போதலாகாது. பகலில் நித்திரை செய்யக்கூடாது. இவையெல்லாம் நோய் உண்டாவதற்கு ஏதுவாம்.

Those who would have uninterrupted health, would not enter all alone a house in ruins, temples, the place of cremation, nor approach a lonely old tree which stands in a place far from haunted scenes, nor sleep during the day.

பாழ்-பயனின்மை. பாழ்மனை-ஒருவரும் இன்மையால் பயனற்றிருக்கும் வீடு (Similarly பாழ்ங்கிணறு). குலன் (ம்). மனை - வாசஸ்தானம். தேவகுலன் - தேவரிருக்குமிடம். ஒற்றை - ஒன்று + ஐ - (ஐ-சாரியை). முதுமரம் - ஆலமரமுமாம்.

## ஒருவர் எழுந்து ஓரிடஞ் செல்கையில் ஏனையர் செய்யலாகாதவை.

50. (ப-ரை) எழுச்சிக்கண்-பிறர் எழுந்துபோகத் தொடங்கினபொழுது, பின் கூவார்-அவரைப் பின்னேநின்று அழையார்: தும்மார்-அப்போது தும்முவதும் செய்யார்: வழுக்கியும்-மறந்தும், எங்கு உற்றுச்சேறிரோ-எங்குப்போகிறீரோ, என்னார்-என்று கேளார்: முன்புக்கு-முன்னேசென்று,எதிர்முகமாக-எதிர்முகமாக, நின்றும்-நின்றுகொண்டும், உரையார்-ஒன்றைச்சொல்லார்; இருசார்வும்-அவர்க்கு இருமருங்கு நின்று சொல்வார். குரவர்-தம்குரவர் போம்பொழுது, வலம்கொள்வர்-வலங்கொண்டுபோக.

(க-து) ஒருவர் எழுந்து போகும்போது, அவரைப் பின்னின்று அழைத்தலும், தும்முவதும், எங்கே போகின்றீர் என்று கேட்டலும் கூடாது. அங்ஙனம் போகும்போது அவருக்கு முன்னே சென்று எதிர்முகமாக நின்று ஒன்றைச்சொல்லாமல் அவர் பக்கத்தில் நின்றுகொண்டு அதனைச்சொல்க. பெரியோர் போகும்போது அவரை வலங்கொண்டுபோக.

When any body gets up to go elsewhere, do not call behind him nor sneeze, nor ask him even forgetfully "where are you going?" nor

say anything standing in front of them, you may say anything standing by his side. When you meet your elders go round on their right hand side.

எழுச்சி-தொழிற்பெயர் (எழு+சி). கூவார்-கூ-பகுதி. தும்மார்-தும்மு-பகுதி. தும்மல்-ஒலிக்குறிப்புபற்றி வந்தபெயர்.

சேறிர்-(சேறி என்பதற்குப் பன்மை). சேறி+ர். சேறி என்பதில் (செல்+த்+இ) த் எழுத்துப்பேறு: இது றகரமாகத்திரிந்தது.பகுதிமுதல் நீண்டது. ல்-கெட்டது. இகரம் முன்னிலை ஒருமை விகுதி: இதுவே காலங் காட்டுகின்றது. சேறி என்பது செல்வாய் எனப்பொருள்படும். ஓ-வினா. என்னார்-இடைச்சொல்லடியாகப்பிறந்த எதிர்மறைக்குறிப்பு வினைமுற்று. என்பர்-உடன்பாடு.

இருசார்வும் என்பதற்குப்பின்னே 'நின்று சொல்வார்' என்பது இசையெச்சம்.

## தவிர்வனசில.

51. (வ-ம்) (பிறரைப்பார்த்து) உடம்பு...விளக்கு ஊதார். அடுப்பினுள் ...தம்மேல் அதனைப்படக்குறித்துக்காயார்.

(ப-ரை) (பிறரைப்பார்த்து), உடம்பு - (உம்முடைய) உடம்பு, நன்று என்று-நன்றாயிருக்கிறதென்று, உரையார்-சொல்லார். விளக்கும்-விளக்கினையும், ஊதார்-வாயால்ஊதி அவியார். அடுப்பினுள்-அட்டில் அடுப்பின்கண், தீ-நெருப்பு, நந்தக்கொள்ளார்-அவியச்செய்யார்; தம்மேல்-தம் உடலின்மீது, அதனைப்பட-அந்நெருப்பின் சுடர்படும்படி, குறித்துக் காயார்-குறித்துக் குளிர்காயார்.

(க-து) ஒருவரைப் பார்த்து உம்முடைய உடம்பு நன்றாயிருக்கிறதென்று சொல்லலாகாது. விளக்கை வாயினால் ஊதி அவிக்கக்கூடாது. அடுப்பிலுள்ள நெருப்பை அவித்தல் கூடாது. அடுப்பிலுள்ள நெருப்பின் சுடர் தம் உடம்பின்மேல் படும்படி குளிர்காய்த லாகாது.

Do not admire another's constitution in his presence. Do not put out a lamp by blowing your breath. Do not put out the fire in the oven. Do not so warm yourself that the flame of that fire touches you.

விளக்கு-இங்கே தானியாகுபெயரன்று, சுடரை உணர்த்தலின். அடுப்பு-அடுதற்றொழில் செய்யுமிடம். பட-காரணகாரியமின்றி வந்த நிகழ்காலச் செயவெனெச்சம்.

## பெரியோருடன் வழிச்செல்லு மொழுக்கம்.

52. (வ-ம்)-ஆன்றவிந்த.........மிடத்து, யாதொன்றும்...மறையார்.

(ப-ரை) ஆன்று-அறிவகன்று, அவிந்த-அடக்கமுடைய, மூத்த-தம்மில் முதியரான, விழுமியார்-பெரியோர், தம்மோடு-தம்முடனே, ஒராறு-ஒருவழியே, செல்லும் இடத்து-போகும்பொழுது, யாதொன்றும் ஏறார் - யாதொன்றின்மேலும் ஏறிப்போகார்: செருப்பு ஏறார்-செருப்புத்தொடார், வெயில் மறையார்-(ஒன்றனால் பிறர்தம்மேல்) வெய்யில் படாதபடி மறைக்கப்போகார். அங்கு-அசை.

(க-து.) பெரியோர்கள் தம்முடனே வழிநடந்து வருவாரானால், அப்பொழுது வாகன முதலியவற்றில் ஏறிப்போதல் கூடாது: காலில் செருப்பைத்

கொடுத்துச் செல்லுதல் கூடாது: குடை முதலியவற்றைப் பிடித்துக்கொண் டும் போகக் கூடாது.

When learned and dignified elders accompany you, do not (yourself) go on any conveyance, nor wear your shoes, nor use any sunshade (for you).

ஏமூர் என்பதனைச் செருப்பின் பின்னரும் கூட்டிக்கொள்க. ஆன்று - அகன்று (i. e. அறிவகன்று) என்பதன் மரூஉ. அகலக்கரண்டி என்பது ஆலக் கரண்டி என வருவதுகாண்க. அவிந்த-மனம்பொறி அவிந்த. விழுமியார் - (வி ழுமம்-பெருமை). ஒராறு - ஒன்று + ஆறு.

### அந்தணரை ஐங்குரவர்போற் கொண்டொழுகல்.

53. (ப-ரை) வால்-சிறந்த, முறையான்வந்த-மரபிலே தோன்றிய, நான்ம றையாளரை-பிராமணரை, மேல்-மேலாகிய, முறைபால்-முறைத்தன்மையையு டைய, தம்-தம்முடைய, குரவரைப்போல்-குரவரைப்போல, ஒழுகல்-கொண்டு ஒழுகுதல், நூல்முறையாளர்-நூன்முறை தெரிந்துசீலத்தொழுகுவோருடைய, துணிவு-துணிவாம்.

(க-து) நன்மரபைச் சேர்ந்த பிராமணரைத் தம்முடைய குரவரைப்போ ல் பாவனை செய்யவேண்டும் என்பது சாஸ்திரமறிந்த பெரியாரது அபிப்பிரா யமாம்.

It is the opinion of the learned that brahmins (well read in the vedas) of noble birth should be regarded as esteemed seniors.

வால்-உரிச்சொல். நான்மறை-ருக், எஜுர், சாமம், அதர்வணம், குரவர்- ஐங்குரவர். துணிவு - தொழிலாகுபெயர்.

### குரவர்க்குச் செய்யும் ஆசாரம்.

54. (வ-ம்) கால்வாய்த்தொழுவு, சமய மெழுந்திருப்பு (எ) இவை குர வர்க்கு (ச் செய்யும்) ஆசாரம் என்ப சாரத்தால் சொல்லிய இவை மூன்று.

(ப-ரை) கால்வாய்-காலின்கண், தொழுவு-தொழுதலும், சமயம்-அவர் நன்றென்ற சமயத்தின்கண் நிற்றலும், எழுந்திருப்பு-அவரைக்கண்டால் எழுந் திருத்தலும், இவை-என இவை, குரவர்க்கு ஆசாரம்-குரவர்க்குச்செய்யும் ஆ சாரம், என்ப-என்று சொல்லுவர் (நல்லார்). சாரத்தால் சொல்லிய (குரவர்க் குச் செய்யும் ஆசாரம் பலவற்றுள்ளும்) சாரத்தால் சொல்லப்பட்டன, இவை மூன்று-இம்மூன்றுமேயாம்.

To prostrate at their feet, to stand up when you are bid, and to get up when you see them, are acts of obeisance to be performed to our seniors. These three are of the utmost importance of all observances.

வாய் - ஏழனுருபு. தொழுவு - தொழிற்பெயர். எழுந்திருப்பு என்ப தில் இரு - பகுதிப்பொருள் விகுதி. சாரம் - essence. சொல்லிய - வினையா லணையும்பெயர். மூன்று - பெயர்ப்பயனிலை.

55. (ப-ரை) துறந்தாரை-அருந்தவரை, பேணலும்-பாதுகாத்தலும், நா ணலும்-பழிபாவங்கட்கு நாணுதலும், தாம்கற்ற-தாம் கற்றவற்றை, குரவர்மு ன்-குரவர்முன்னே, மறந்தும்-மறந்தாயினும், சொல்லாமை-சொல்லாமையும், மூன்றும்-(என) இம்மூன்றும், திறம் கண்டார்-திறப்பட அறிந்தார். கண்ட நெ றி-அறிந்த நெறியாம்,

(க-து) துறவிகளைப் பாதுகாத்தல் வேண்டும்; பழிபாவங்கட்கு அஞ்சல் வேண்டும். தாம் கற்ற திறத்தைத் தமது குரவர்முன்னே எடுத்துச் சொல்லுதல் தகுதியன்று.

To protect ascetics, to shame-face evil, and to avoid exhibiting one's knowledge before seniors even forgetfully: these three are the ways of persons of good understanding.

"கற்ற இடத்திலே வித்தைகாட்டுகிறதோ" பழமொழி, கற்ற-பலவின்பால் வினையா லணையும்பெயர்.

56 (ப-ரை) பார்ப்பார்-பார்ப்பாரும், தவர்-தவசியரும், சுமந்தார்-சுமையுடையவரும், பிணிப்பட்டார்-நோய்கொண்டாரும், மூத்தார்-மூத்தவரும், இளையார்-பிள்ளைகளும், பசு-பசுக்களும், பெண்டிர்-பெண்டிரும், என்ற இவர்கட்கு-என்று சொல்லப்பட்ட இவர்க்கு, ஆற்ற-மிகவும், வழிவிலங்கினரோ-வழிகொடுத்து விலகிப்போயினரோ, பிறப்பினுள் - தாம்பிறந்த பிறப்புததோறும், போற்றி எனப்படுவார்-பிறரால் போற்றி என்று சொல்லப்படுவார்.

(க-து) பார்ப்பார்-தவசியர்-சுமையுடையவர் - நோயாளர் -பாலியர்-பசுக்கள் என்னும் இவர்களைக் கண்டால் வழிவிட்டு விலகிச் செல்கின்றவர்களே ஒவ்வொரு பிறப்பிலும் சிறந்தவர்கள் என்று சொல்லப்படுவர்.

Brahmins, ascetics, porters, invalids, the old, the young, cows, and females: those who stand apart making way for these are thought of highly in every one of their births.

இருதிணையுங்கலந்து, மிகுதியால் இவர்கள் என்னும் உயர்திணை முடிபைப்பெற்றன. பசு என அஃறிணைப்பொருள் ஒன்றேயாகப், பார்ப்பார் முதலிய உயர்திணைப்பொருள் ஏழாதல் இங்கே மிகுதி. vide (ந-சூ-373). "திணைபால் பொருள்பல விரவின சிறப்பினு,மிகவினு மிழிபினு மொருமுடிபினவே." தவர்-(sans தபம், in Tamil தவம்) தவசியர். சுமந்தார் from சும, இப்பகுதியடியாக சுமத்தல், சுமை, சுமையடை (சும்மாடு), சுமைதாங்கி என வருதல் காண்க. போற்றி-துதிக்கப்படுவது, துதிக்கப்படுபவர் எனப் பொருள் கொள்ளும். இதனுள் இகரம் செயப்படுபொருள்விகுதி. ஊருணி என்பதனுட்போல. [போற்றி என்பதனை வாழிய என்பது வாழி என வந்தாற்போல வந்தவியங்கோள் முற்றெனக்கொண்டு காக்கவெனப் பொருள் கூறினும் பொருந்தும், 'எந்தாய் போற்றி இறைவாபோற்றி" என்றாற்போன்ற இடங்களில்.]

**மனையாளன்றி மற்றமங்கையருடன் தனித்திருத்தலாகாமை.**

57. (ப-ரை) ஐம்புலனும் - ஐம்புலன்களையும், தாங்கற்கு - தடுக்க,அரிது-அரிது; ஆகலான் - ஆகையால், ஈன்றாள் ஆயினும் - தன்னைப்பெற்ற தாயுடனாயினும், மகள் ஆயினும் - தான்பெற்ற மகளுடனாயினும், தன் உடன் பிறந்தாள் ஆயினும் - தன்னுடனே பிறந்தாளுடனாயினும், சான்றார் - பெரியராயினார், தமித்தாக - தனியாக, உறையற்க - வசியார்.

(க-து) இந்திரிய சேஷ்டையைத் தடுப்பது அருமையாதலால், தாய் - மகள் உடன்பிறந்தவள் என்பவர்களுடனே தானும் தனியாக வசித்தலாகாது.

Be it mother, daughter, or sister, the great would not live alone with any, because it is very difficult to overcome the five senses.

"தற்றாய்புதல்வியுடன் றோன்றியநங்கையேனும், உற்றோருழியிற்றனியெய்தி யுறைதலாகா"—நாசிகாண்டம்.

ஈன்றாள் - (ஈன் - பெறு - பகுதி) பெற்றவள். (ஈந்தான் - ஈ - பகுதி). மகள் from மக others are மகன், மகர், மகார், மக்கள். உடன்பிறந்தாள் - சகோதரி. சான்றோர் - from சால் (உரிச்சொல்). உரிச்சொல்லடியாகப்பிறந்த இறந்தகால வினையாலணையும்பெயர். தமித்தா(க) - from தமி (தனி). உறை யற்க - எதிர்மறை வியங்கோள். ஐம்புலன் - the five senses - சுவை(ரசம்)- ஒளி (ரூபம்) - ஊறு (ஸ்பரிசம்) - ஓசை (சப்தம்) - நாற்றம் (கந்தம்) taste, seeing, touching, hearing, smell. புலன் - sense. பொறி - an organ of sense. ஐம்புலன் - பஞ்சவிஷயம்; ஐம்பொறி - பஞ்சேந்திரியம். ஐம்புலனடக்கல் - subjugation of the five senses, ஐம்பொறிநுகர்ச்சி - emjoyment of the five senses. ஐம்பொறி - மெய்-வாய்-கண்-மூக்கு-செவி. பொறியாவன - கருவியான உறுப்புகள்: புலனுவன - அக்கருவியால் அநுபவிக்கப்படுவன. ஐம்புலனுகர்ச்சியினிறப்பன:—சுவையால் - மீன், நாற்றத்தால் - வண்டு, ஊற்றினால் - யானை, ஓசையால் - அசுணம், ஒளியால் - விட்டில். தாங்கற்கு-செயவென்னும் வாய்பாட்டெச்சத் திரிபு. (தாங்க). ஐம்புலனும் தாங்கற்கு அரிது - ஐம்புலன்களின் செய்கையைத் தடுக்கமுடியாது. அரிது என்பதற்கெழுவாய் தாங்கற்கு என்பதின் பகுதியிலுள்ள தாங்கல் என்ற தொழிற்பெயராகக் கொள்ள.

## இராசசேவையில் தவிர்வனவான செயல்கள்.

58. (ப-ரை) கடை - அரசர் வாயிலின்கண், விலக்கில் - தடை உண்டானால், காயார் - வெகுண்டு காயார்; கழி கிழமை - (அரசரோடு) மிக்கஉரிமையை, செய்யார் - (அவர் பொருதவகை) செய்யார்; கொடை(க்கண்) - தமக்கு ஒன்று உதவுமிடத்தும், அளிக்கண் - அவர் தம்மைத்தலையளி செய்யுமிடத்தும், பொச்சாவார் - தமக்கு அவை அமையா வென்று இகழார்; நேர் - அரசருக்குச்சமானமாக, கோலம் செய்யார் - தம்மை அலங்கரித்துக் கொள்ளார்; இடையறுத்துப் போகி - (அரசர் இருந்த சபையின் கண்) ஊடறுத்துச்சென்று, பிறன்ஒருவன் - பிறனொருவனை, சேரார் - சேர்ந்திரார்; கடைபோக - முன்புபோலப்பின் நெடுங்காலம், வாழ்தும் - வாழ்வோம், என்பார் - என்று கருதுவார்.

(க-து) அரசருடைய வாயிலின்கண் உள்செல்லத் தடை நேர்ந்தால்கோபித்தலும், அரசருடன் அதிக சொந்தம் பாராட்டுவதும், அரசர் தமக்கு வெகுமானஞ் செய்யுமிடத்தும் சம்மானஞ் செய்யுமிடத்தும் அவை தமக்கு அமையாவென்றிகழ்தலும், அரசருக்குச் சமானமாகத் தம்மை அலங்கரித்துக்கொள்வதும், இராஜசபையில் ஊடறுத்துப்போய் வேறொருவனைச் சேர்ந்திருப்பதும் கெடுதி பயக்கும்.

Those who wish to lead a uniform course of life, would not frown when there is a hindrance at the outergate of the king's palace; would not lay pretentions to too much relationship with the king; would not despise a gift or favor of the king; would not embellish themselves like the king; would not force their way though the king's assembly to be in another's company.

கடை - கடைசியிடம்; இது வீடு முதலியவற்றின் கடைசியிடம் என்ற பொருளாய் வாயிலைக் குறிப்பதாயிற்று. முன்பக்கவாயில் தலைக்கடை எனவும் பின்பக்கவாயில் புறக்கடை (also புழைக்கடை) எனவும் வழங்கும். தலைவாயிலைக்காத்து நிற்பவர் கடை காவலர் எனப்பெறுவர். கழி - உரிச்சொல் - மிகுதிப்பொருளது. கோடை from கொடு. அளி - அருளினால் செய்யப்படுவது. பொச்சாவார் - (பொச்சா - பகுதி). எதிர்மறைக்குறிப்பு வினைமுற்று. இத

ணடியாகப் பொச்சாவாமை என எதிர்மறைத்தொழிற்பெயரும் பொச்சாப்பு என உடன்பாட்டுத் தொழிற்பெயரும் பொச்சாவாத என எதிர்மறைப் பெய ரெச்சமும் பொச்சாப்பார் என வினையாலணையும்பெயரும் வருதல்காண்க. கோலம் - அழகு. நேர் - ஒப்புப்பொருளில் வரும் இடைச்சொல். இடையறுத்து - இடையறு - பகுதி. போகி - என்பதில் கு - சாரியை: விகுதியே இறந்தகாலத்தைக் காட்டிநின்றது. பிறன் - பிற என்னும் இடைச்சொல்லடியாகப் பிறந்த ஆண்பாற்பெயர். ஒருவற்சேரார் - இரண்டாம் வேற்றுமைத்தொகையாதலின் இயல்பாயிருக்கவேண்டிய ன் - ற் ஆகத்திரிந்தது. "இயல்பின் விகாரமும் &c." என்பது விதி. கடைபோக. (கடை - முடிவிடம்) முடிவிடம் போகுமட்டில்- அதாவது முழுவதும், அதாவது ஆயுள்முழுமையும். வாழ்தும்-தன்மைப்பன்மை எதிர்கால வினைமுற்று தும்-தன்மைப்பன்மை விகுதி: விகுதியே காலங்காட்டியது. "றவ்வொடுகரவும்மை நிகழ்பல்லவும், தவ்வோடிறப்புமெதிர்வும்" என்பதனுல் அறிக.

59. (ப-ரை) தமக்கு உற்ற - தமக்குப் பொருந்தின, கட்டுரையும் - உறுதிச் சொல்லும்; தம்மில் - தம்மைக்காட்டில், பெரியார் - (அரசனால்) சிறப்புச் செய்யப்பட்டார், உரைத்ததற்குற்ற உரை - உரைத்த உரைகளும்; அஃதன்றி - அஃதன்றியே, பிறர்க்கு உற்ற கட்டுரையும் - பிறருக்கு உறுதியாகிய கட்டுரைகளும்; சொல்லற்க - அரசருக்குச் சொல்லாதொழிக. சொல்லின் - சொல்லுவராயின், வடுக்குற்றம் - தமக்குக்கெடுதி உண்டாக்கும் குற்றம், ஆகிவிடும் - ஆகமுடியும்.

(க-து) தமக்குப்பொருந்தின உறுதிச்சொல்லையும், அரசனால் மிகச்சிறப்படைந்தவர் சொல்லிய வார்த்தைகளையும், பிறர்க்கு உறுதியாகிய வார்த்தைகளையும் அரசரிடத்தில் சொல்லுதல்கூடாது. சொன்னால் தமக்குக் கெடுதி தரும் குற்றமாக முடியும்.

Do not express to the king assertions concerning you, nor statements made by your superiors, nor also assertions concerning others. If you do so, it would become an unalterable fault against you.

கட்டுரை - (கட்டு - உறுதி) - உறுதிவார்த்தை: undoubted truth. இந்த வார்த்தையே கட்டிய உரைஎனப் புனைந்துரை - பொய்வார்த்தை என்னும் பொருள்படும் (see also கட்டுகதை). இந்த அர்த்தத்தில் கட்டுஎன்பது வினைத்தொகை வினை. தம்மில் - ஐந்தாம்வேற்றுமை எல்லைப்பொருள். பெருமை உடையவர் பெரியார் - "ஈறுபோத லிடையுகர மிய்யாதல் &c." என்பதனுலறிக. வடு - தீப்பட்டு ஆறிய தழும்பு. "ஆறுதேநாவினுற்சுட்டவடு" இது இப்பொழுதும் நீங்காத தழும்பாதலின் இது நீங்காத பழியினுக்கு உவமையாகுபெயராய் வழங்கப்படும், as வடுச்சொல். வடு என்பதே குற்றத்துக்கும் பெயராதலால் வடுக்குற்றம் என்பது இருபெயரொட்டுப் பண்புத்தொகை. மாவடு என்றால் மாம்பிஞ்சு என்று பொருள். ஆகிவிடும் என்பதில் ஆகிவிடு பகுதி. இதில் விடு என்பது துணிவுப்பொருள் காட்டி நின்றது.

60. (வ-ம்) பெரியார் உவப்பன...சிறியாரைக்கொண்டு (தம்) இல்லம் புகார். தம்மோடு...அறிவறியார்...இழித்துரையார்.

(ப-ரை) பெரியார் - பெரியராயுள்ளார், உவப்பன - உவப்பன வற்றை, தாம் - தாம், உவவார் - விரும்பார்; சிறியாரை - கீழ்மக்களை, கொண்டு- உடன்கொண்டு, இல்லம் - தம் இல்லத்தின்கண், புகார்-உட்புகார்; தம்மோடு- தம்முடனே, அளவளாவு - நெஞ்சு கலப்பு, இல்லா இடத்து - இல்லாத விட

த்து, அறிவுஅறியா - அறிவினை அறியாத, பிள்ளையே ஆனும் - பிள்ளையே ஆனாலும், இழித்து உரையார் - (உயர்த்தியன்றி) இழித்துச் சொல்லார்.

(க-து) பெரியார்க்கு உகப்பாவனவற்றைத் தாம் விரும்புதலும், கீழ்மக்களைத் தமது வீட்டினுள்ளே இட்டுக்கொண்டுபோதலும் கூடாது. தம்முடனே நெஞ்சுகலந்த நெருக்கம் இல்லாவிட்டால், சிறுபிள்ளைகளைத்தானும் உயர்வாகவன்றி இழிவாகப் பேசுதலாகாது.

Do not desire what is desired by the great: do not take into your house the low. Where there is no intimacy, do not speak mean even of ignorant children.

உவப்பன - பலவின்பால் எதிர்கால வினையாலணையும் பெயர். உவ - பகுதி. உவவார் - எதிர்மறை வினைமுற்று. இல்லம் என்பதில் அம்-சாரியை. சிறியார் from சிறுமை. ஆனும் - ஆயினும் என்பதன் மரூஉ. இழித்து - (இழிந்து - தன் வினை). மெல்லினம் வலித்தலால் பிறவினையாவனவற்றை எழும்பு-எழுப்பு, திருந்து - திருத்து, இயங்கு - இயக்கு என்ற உதாரணங்களாலும் அறிக. அளவளாவு - தொழிற்பெயர்; அளவளா - பகுதி=கல; நெஞ்சு கலத்தல். அளவளாதல் - அளவளாவல் எனப்பிறதொழிற்பெயர்களும், அளவளாவுகிறேன் என வினைமுற்றும் வருதல் காண்க. "அளவளாவில்லாதான்வாழ்க்கை" எனக் குறளில் வருவதுங்காண்க.

61. (ப-ரை) முனியார் - (அரசன் செய்வனவற்றை) வெறார்; துனியார் - அவனோடு கலகப்படார்; முகத்து எதிர் - (விலங்கவன்றி) முகத்துக்குநேராக, நில்லார் - நிற்றல்செய்யார்; தனிமை இடத்துக்கண் - (அரசன்) தனியே நின்ற இடத்தின்கண், தம் கருமம் - தமது காரியத்தை, சொல்லார் - சொல்லிக் கொள்ளார்; இனியவை - இனியவான பொருள்களை, யாம் - யாங்கள், அறிதும் - நுகர்ந்தறிவேம், என்னார் - என்று (அரசனிடம்) சொல்லார்; காக்கை - காகமானது, வெள்ளென்னும் - வெள்ளென்றிருக்கும், எனின் - என்று (அரசன்) சொல்லினனாயினும், கசிவு இன்று - அவன்மேல் அன்பின்றி வெறார்.

(க-து) அரசன் செய்கின்ற காரியங்களை வெறுத்தலும் அவனோடுகலகம் கொள்ளுதலும் ஆகாது. விலகியன்றி அரசனுக்கு நேர்முகமாக எதிரில்நிற்றல் கூடாது. அரசன் ஏகாந்தமாக இருக்கும்போது அவனிடத்தில் ஒருவர் தம்முடைய காரியங்களைச் சொல்லிக்கொள்ளுதலாகாது. இனிமையானபொருள்களை நாங்கள் அநுபவித்தறிந்திருக்கிறோமென்று அரசனிடத்தில் சொல்லலொண்ணாது. காக்கை வெண்ணிறமுடையது என்றதுபோன்ற அபவாதங்களை அரசன் பேசினாலும் அவன்மேலுள்ள அன்புநீங்கி வெறுத்தலாகாது.

Do not show aversion to the king's deeds, nor create commotion against him. Do not stand facing the king. Speak not to him in private of your affairs. Do not tell him "we have enjoyed, and have experience of, pleasures. Even though he should say that the crow is white, do not be displeased with him.

அறிதும் - முன்னே 58-வது வெண்பாவில் வாழ்தும் என்பதற்கு உரைத்தபடிகாண்க. என்னார் - என் என்னும் இடைச்சொல்லடியாகப் பிறந்த எதிர்மறை வினைமுற்று. இன்று - எதிர்மறைக்குறிப்பு முற்று: இதில் பகுதியே எதிர்மறை காட்டிநின்றது. வெள்ளென்னும் - செய்யுமென்னு வாய்பாட்டு வினைமுற்று. வெள்ளென் - பகுதி. (வெண்மை) வெள் என்னும் பகுதியுடனே என் என்னுமிடைச்சொல் சேர்ந்து அதனை வினைப்படுத்தியது.

(வெள்ளென விளர்த்தது என்பதில் என என்பது வெள் என்னும் பண்போடி யைந்து பண்புப்பொருளில் வந்தது.

62. (ப-ரை) உமிவும் - உமிதலும்; உயர்ந்த உழி ஏறலும் - உயர்ந்தஇடத்து ஏறியிருத்தலும்; பாக்கும் - பாக்குத்தின்னலும்; வகை இல் - கூறுபாடில்லாத, உரையும் - வார்த்தையும்; வளாச்சியும் - உறங்குதலும், ஐந்தும் - என இவ்வைந்தையும், பெரியார் அகத்து - அரசர்முன்பு, புணரார் - செய்யார்.

(க-து) எச்சில் உமிதல் - உயர்வான பீடத்திருத்தல்-அடைகாயுண்ணல்-வகைபடாதவார்த்தை சொல்லுதல் - உறங்குதல் என்னும் ஐந்தனையும் அரசர் முன்பு செய்யற்க.

Spitting, occupying a high seat, chewing betel and nut, random words, and sleep: these five should be avoided in the presence of kings.

உயர்ந்துழி உயர்ந்த+உழி: உழி - இடம். பாக்குத்தின்றலைப் பாக்கு என உபசரித்தார். வளர்ச்சி - சி - தொழிற்பெயர்விகுதி.

63. (வ-ம்) குலமுடையார் (தமது) செல்வமும் கல்வியும் தேசும் குணனும் இறைவர்முன் பகைவர்போல் பாவித்துப் பல்கால் பயின்று கூறுர்.

(ப-ரை) குலமுடையார் - நற்குடியிற் பிறந்தவர், செல்வமும் - (தமது) செல்வத்தையும், கல்வியும் - கல்வியையும், தேசும் - (தமது)விளக்கத்தையும், குணனும் - குணத்தையும், இறைவர் முன் - அரசர்முன்பு, பகைவர்போல் - தமக்குத்துனபஞ்செய்யும் பகைவர்போல, பாரித்து - பரப்பி, பல்கால் - பல முறை, பயின்றுகூறுர் - பயின்று உரையார்.

(க-து) அரசரெதிரில், தமது செல்வம் - கல்வி - விளக்கம் குணம் என்ப வைகளைப் பலமுறையும் விரித்துப்பேசுதல் ஒழிக. இது நற்குடிப்பிறப்பினர் ஒழுக்கம்.

Those of noble birth would not speak frequently of their wealth, learning, splendour, and nature in the presence of kings as if they were their enemies.

இறைவர் - அரசர் கடவுளுக்குச் சமானமென்பது இந்துக்களுடைய கோட்பாடாதலால் அரசனை இறைவர் என்பர். "அனைவோர்க்கும் தெய்வம் இலைமுகப்பைம்பூணிறை" "முறைசெய்துகாப்பாற்று மன்னவன்மக்கட்,கிறை யென்று வைக்கப்படும்" தேசு - sans தேஜஸ். பகைவரெதிரிலே பிரதாபம் பேசுவதுபோல அரசரெதிரிலே தமது பெருமையை மிக விரித்துக்கூறற்க என்பது செய்யுளின் திரண்டகருத்து. பாரித்து - பாரி - பகுதி: பாரிப்பு - பெயர். உடம்பு பாரிக்க, தலைபாரித்துக் கொண்டிருக்கிறது, பாரித்தமரம், பலபடப்பாரித்துக் கூறினர் என வருவனகாண்க. பல்கால் - "பலசில எனு மிவை தம்முன்றும்வரின், இயல்பு மிகலு மகரமேக, லகரம்றகரமாகலும் பிற வரின், அகரம் விகற்ப மாகலு முளபிற" (ந - சூ - 170). பயின்று - பயில் - பகுதி.

64. (வ-ம்) பெரியார்...குலத்தும் குரவரையும் கண்டால் வணங்கார், அணங்கொடு சேர் பெரியார் செல்லுமிடத்து(ம்) (கண்டால் வணங்கார்).

(ப-ரை) பெரியார் - அரசரது, மனையகத்தும் - மனையினிடத்தும், தேவ குலத்தும் - தேவராலயங்களுள்ளும், குரவரையும் - குரவரையும், கண்டால் - கண்டால், வணங்கார் - வணங்கார். அணங்கொடு செல்லுமிடத்து - தெய்வங்

கள் புறம்போந்து எழுந்தருளுமிடத்தும், நேர் பெரியார் - தகுதியுடைய அரசர், செல்லுமிடத்து - புறம்போகுமிடத்தும், கண்டால் - கண்டாலும், வணங்கார் - வணங்கார்.

(க-து) அரமனையிலும் - ஆலயத்திலும் - தெய்வங்கள் விழாக்கொள்ளுமிடத்திலும் - அரசர் புறம்போந்து ஊர்வலம் வருதற்கண்ணும் - கண்டால், குரவரையும் வணங்காதொழிக. (எனவே ஏனையரையும் வணங்கற்க என்றவாறும்.

Do not bow even to your superiors in a king's palace, in temples, during the festivals of gods and when the king is out on a trip.

குரவரையும் - உயர்வு சிறப்பும்மை. கண்டால் - செயின் என்னும் வாய்பாட்டில் சேர்ந்த வினையெச்சம். (காண் - பகுதி). செல்லுமிடத்தும் என்றவும்மை தொக்கது. நேர்பெரியார் என்பதை நேர்மையுடைய பெரியாரெனக்கொள்க

65. (ப-ரை) நகையொடு - நகையாடலும், கொட்டாவி-கொட்டாவி விடுதலும், காறிப்பு-காறி உமிழ்தலும், தும்மல் - தும்முதலும், இவையும் - என்ற இவைகளையும், பெரியார்முன் - அரசர் முன்பு, செய்யார் - செய்யார். செய்யின் - செய்வராயின், பழி - பழி, அசையாது நிற்கும் - குறையாமல நிலை பெறும்.

(க-து) அரசரெதிரில் சிரித்தல் - கொட்டாவி விடுதல் - காறியுமிழ்தல் - தும்முதல் என்னும் இவைகளைச்செய்யற்க. செய்தால் பழி வளரும்.

To laugh, to yawn, to hawk and spit, and to sneeze: these also should be avoided in the presence of kings. Otherwise blame will rest on you permanently.

நகை - from நகு. நகுதல் என்றும் வரும். நக்கான் - நகுகிறான் - நகுவான் என முக்காலத்தில் வருமாறும், நக்க - நக்கால் என எச்சங்கள் வருமாறும்காண்க, கொட்டாவி - கொட்டி விடப்பட்ட ஆவி (கொட்டு+ஆவி): இது உலக வழக்கில் கோட்டுவாய் எனச்சிதைந்து வழங்குகின்றது, காறிப்பு- காறு - பகுதி, இ - சா, ப் - ச, பு - தொழிற்பெயர் விகுதி.

## ஆசிரியரிடம் ஒழுகுமுறைமை.

66 (வ-ம்) பெருந்தக்கார் என்றும் அடக்கத்தால், நின்றக்கால் நிற்க: இருந்தக்கால் ஏவாமை ஏகார்: சொல்லின் செவிகொடுத்துக் கேட்டீக: சொல்லொழிந்தக்கால் மீட்டும் வினவற்க.

(ப-ரை) பெருந்தக்கார் - நன்மாணுக்கர், என்றும் - எப்போதும், அடக்கத்தால் - ஆசிரியர்முன் அடங்கி ஒழுகவேண்டுதலின், நின்றக்கால் - அவர் பாடஞ் சொல்லுதலை நிறுத்தினால், நிற்க - தாமும் நிற்கக்கடவர்: இருந்தக்கால் - அவர் முன்னிருந்தபோது, ஏவாமை - அவர் எழுந்து போ என ஏவுதற்குமுன்னே, ஏகார் - எழுந்துபோகார்: சொல்லின் - அவர் பாடம் முதலியவற்றைச்சொல்லின், செவிகொடுத்து - செவிதாழ்த்து, கேட்டீக - கேட்டிடுக: சொல் ஒழிந்தக்கால் - அவர் யாதொன்றுஞ் சொல்லாவிடின், மீட்டும் - மறுபடியும், வினவற்க - வினவாதிருக்கக்கடவர்.

(க-து) நன்மாணுக்கராவார், ஆசிரியர் பாடஞ்சொல்லுதலை நிறுத்தினால் தாமும் நிற்கக்கடவர்: ஆசிரியர் எழுந்துபோ என்றேவிய பின்னரே எழுந்து

போவர்: ஆசிரியர் பாடமுதலியவற்றைச் சொன்னால் செவிதாழ்த்துக் கேட்பர்: அவர் யாதொன்றும் சொல்லாவிட்டால் தாமும் வினவாமல் இருக்கக்கடவர்.

As good scholars have always to be docile in the presence of their teacher, they ought to pause when the teacher pauses after instruction; should not leave the premises without his permission; should listen with submission whenever he speaks. If he should remain silent do not again trouble him with questions.

அரசர்முன்னிலையில் நடந்துகொள்ளவேண்டிய முறைமைகளைக் கூறி வருகின்ற இடத்தில்; (இந்தச் செய்யுளுக்கு மேலே பழைய உரையாசிரியர் உரைத்த உரையை அநுசரித்து எழுதிய உரையைக்காட்டிலும்) பெருந்தக்கார் என்பதை அரசனைச்சேர்ந்த மந்திரிமுதலான பெருந்தக்காராகக் கொண்டு அதற்கியையப் பொருள் உரைப்பதே தகுதி எனத்தோன்றுகின்றது. ஆனாலும், இம்முறைமைகளைக் கூறுகின்ற விடத்திலும் பின்னால் 69, 71, 72, 74 என்றும்போன்ற செய்யுள்களில் வேறு விஷயங்களையும் கூறுதலால், மேல் நாம் கூறியபடி கொள்ளவேண்டு மென்கிற நியதி யாதொன்றுமில்லை. நின்றக்கால் - இருந்தக்கால் - ஒழிந்தக்கால் - வினையெச்சம். இடையில் ககரஒற்றுமிகுதலால் - கால்-என்பது பெயரெச்சங்கொண்ட பெயரன்று,வினையெச்ச விகுதி என்க. ஏவாமை - எதிர்மறை வினையெச்சம். ஏகார் - ஏகு-பகுதி. பெருந்தக்கார் - பெருமைதக்கார். கேட்டிக - இங்ஙனம் வருவதை வியங்கோட்டிரிசொல் விகாரமாய் நின்றது என்பர் நச்சினார்க்கினியா பாலைக்கலியில் "சினைவாடச்சிறக்குநின் சினந்தணிந்தீகென" என வருவதும் காண்க.

### பெரியோர்சபையில் தவிர்வனவாவன.

67. (ப-ரை) பெரியோர் அகத்து - பெரியோர் அவைக்களத்தில்:—உடுக்கை - ஆடையை, இகவார் - களையார்; செவி - காதை, சொறண்டார் - சொறியார்; கை - கையை, மேல் எடுத்து - மேலே உயர்த்தி, உரையார்-பேசார்; பெண்டிர்மேல் - மாதர்களை, நோக்கார் - உற்றுப்பாரார்; செவிச்சொல்லும் - பிறர்தம் செவியிற் சொல்லும் சொல்லையும், கொள்ளார் - கேளார்.

(க-து) பெரியோர் கூடியிருக்கின்ற சபையிலே ஆடைகளைதலும் - காதைச்சொறிதலும் - கையை மேலெடுத்துப் பேசுதலும் - பெண்டிரை உற்றுப்பார்த்தலும் - பிறர் தமது செவியிற் சொல்லும் சொல்லைக் கேட்டலும் ஆகா.

In the assembly of the great, do not undress yourself, nor scratch your ears. nor speak raising your hands, nor look at ladies, nor listen to the words uttered in your ears by others.

உடுக்கை - தொழிலாகுபெயர். இகவார் - (இக - பகுதி.) இசத்தல் - நீக்கல். சொறண்டார் - சுறண்டார் - பிரதிகளில் சொறண்டாரெனவே இருக்கிறது. சுறண்டு என்பதன் மருவுபோலும்.

### ஒருவரிடம் ஒன்றுரைக்கும் செவ்வி.

68. (ப-ரை) விரைந்து - விரைவாக, உரையார் - வார்த்தை சொல்லார், மேன்மேல் - மேலும்மேலும், உரையார் - வார்த்தைசொல்லார். பொய்யாய- பொய்யாய சொற்களை, பரந்து - பரக்க, உரையார் - சொல்லார். பாரித்து - (தாம் சொல்லத்தக்க சொற்களைப்) பரப்பி, உரையார் - பேசார், ஒருங்கு எனைத்தும் - கூட எல்லா எழுத்தினையும், சில் எழுத்தினால் - சில எழுத்தால்

பொருள அடங்க - பொருள் விளங்கும் வகை, காலத்தால் - காலவகையின் படி, செவ்வி அறிந்து - சமயசந்தர்ப்பத்தை அறிந்து; சொல்லுக-சொல்லுக.

(க-து ஒருவரிடத்தில் ஒன்றைச் சொல்லும்போது அவசரப்படுதலாகாது. சொன்னதையேமேயும் சொல்லுதல் கூடாது. பொய்யைப்பரக்கச் சொல்வதும், சொல்வதை வெகுவாய் விரித்துச்சொல்லுதலும் கூடாது. தான் சொல்லவேண்டிய பொருளைச் சில எழுத்துக்களில் அடக்கிக் காலத்திற் கேற்றபடி சொல்லவேண்டும்.

When speaking to others, do not hurry on, nor repeat your statements, nor enlarge falsehood, nor dilate your words, but speak according. to the exigency of the occasion in a loconical manner.

மேன்மேல் - அதிகப்பொருளைக்காட்டும் அடுக்கு. பரந்து - பர - பகுதி இதனடியாகப் பரவை (சமுத்திரம்) என வருவது காண்க. எனைத்து - எத்தனை என்பதன்மருவாகிய எனை - பகுதி. து - ஒன்றன்படர்க்கை விகுதி. குறிப்பு வினையாலணையும்பெயர். "சில்லெழுத்திலேலே பொருளடங்க". "Brevity is the soul of wit." சில்வகையெழுத்திற் பலவகைப்பொருளும் செவ்வனாடியிற் செறித்தினிது விளக்கி" (நன்னூல்). காலத்தால் - இங்கே ஆல் வினைப்பொருளில் வந்தது: காலத்தை அநுசரித்து என்பது பொருள். செவ்வி - பண்புப்பெயர்.

## குலமாதர் தவிர்வனவாவன.

69. (வ-ம்) (நற்குலப்பெண்டிர்) தலைமகன்தன் மேனி அல்லால் பிற எம் மேனியாயினும் நோக்கார்; தம்மேனி யையும்) நோக்கார்; தலை உளரார்; கைந் நொடியார்.

(ப-ரை) (நற்குலட்பெண்டிர்), தலைமகன்தன்-தங்கணவரது, மேனி அல்லால் - உடலின் வடிவத்தையன்றி, பிற - ஏனை ஆடவரதுமேனி, எம்மேனியாயினும் - எத்துணையழகுடையவேனும், நோக்கார் - பாரார்: தம்மேனி-தம் உடலின் வடிவத்தையும், நோக்கார் - வியந்துபாரார்: தலை உளரார்-தலைமயிரைக்கோதார்: கைந்நொடியார் - கைந்நொடித்தல் முதலியன செய்யார்.

(க-து) குலமாதர் தமது கணவர்தேகத்தின் வடிவத்தையன்றிப் பிறருடைய தேகத்தின் வடிவழகைவியந்து பாரார். தமது வடிவழகையும் (கண்ணாடிமுதலியவற்றில்) வியந்து பாரார். தலைமயிரைக்கோதுதலும் கைந்நொடித்தல் முதலியன செய்தலு செய்யார்.

Ladies of noble birth would not admire others' beauty, however extra vagant, except that of their husbands: nor admire their own beauty, nor disentangle their hair with their fingers, nor snap their fingers.

உளரார் - (உளர்தல்=தடவுதல்) தடவுதல் செய்யார், மயிரைத்தடவித் தடவிக்கோதார். பிற - இடைச்சொல்லடியாகப்பிறந்த பலவின்பாற் படர்க்கைப் பெயர். தலைமகன் - தலைமையானவன் - (பெண்பால் - தலைவி).

70. (ப-ரை) பிறரொடு - பிறரொடுகூட இருந்து, மந்திரம் கொள்ளார் - ஒன்றனை ஆராயார். இறைவனை - அரசனை, சாரார் - சாரநில்லார். செவி ஓரார் - (அரசன் பிறனொருவனுக்குச் சொல்லும் சொல்லைத்) தாம்செவியால் கேளார்,சாரில் - சார்ந்து நின்றவிடத்து, பிறிதொன்று - பிறிதொரு காரியத்தை, தேர்வார்போல் - ஆராய்வார்போல, திரிந்து - முகந்திரிந்து, நிற்க - நிற்கக்கடவர்.

(க-து) அரசனெதிரில் வேறொருவரோடுகூட இருந்துகொண்டு ஒரு காரியத்தை ஆராய்தலும், அரசனுக்குச்சமீபத்தில் நிற்றலும், அரசன் வேறொருவனிடத்துச்சொல்வதொரு காரியத்தைச் செவிகொடுத்துக் கேட்டலும் ஆகாது. சமீபத்தில் நின்றிருக்கும்படி நேரிட்டால் வேறொருகாரியத்தில் கவனமாயிருப்பதுபோல முகந்திரிந்து நிற்கக்கடவர்.

In the royal court, do not counsel with others, nor stand near the king, nor overhear secrets uttered by the king; and if you should stand near the king then, appear to consider over some other affair.

பிறர் - இடைச்சொல்லடியாகப்பிறந்த பலர்பாற்பெயர். மந்திரம் - ஆலோசனை. பிறிது - plural பிற. திரிந்து - திரி - பகுதி.

## செய்வன தவிர்வன.

71. (ப-ரை) துன்பத்துள் - துன்பகாலத்தில், துன்பு உற்று - அத்துன்பத்துள் அமைவுற்று, வாழ்தலும் - வாழ்தலும்; இன்பத்துள் - இன்பகாலத்தில், இன்ப வகையான்-பிறர்க்கு இன்புசெய்யும் வகையான் இன்பமடைந்து, ஒழுகலும் - நடத்தலும்; அன்பில் - அன்பினின்றும், செறப்பட்டார் - வேறுபட்டாரது, இல்லம் - வீட்டின்கண், புகாமை - புகாமையும்; இம்மூன்றும்-இம்மூன்றும், திறப்பட்டார்கண்ணே-ஒரு திறப்பட்டாரிடத்தே, உள - உளவாம்.

(க-து) தமக்குத் துன்பம் நேரிட்ட காலத்தில் அதனைப்பொறுத்திருத்தலும், இன்பம் உண்டானால் மற்றவர்களுக்கு நன்மை செய்வதில் சந்தோஷங்கொண்டு நடத்தலும, அன்பு நீங்கினவருடைய வீட்டை அடையாமையும், ஆகிய இம்மூன்றும் ஒருவழிப்பட்டவர்களிடத்தே காணப்படும் குணங்களாம்.

To bear one's adversity, to please others in prosperity & to avoid entering the house of friends who have forsaken their affection: these three are to be found only with those of steady character.

துன்பம் & இன்பம் - பண்புப்பெயர். துன்புற்று - துன்புறு - பகுதி, உகரக்கேடு - ச, உ-வினையெச்ச வி, பகுதி இரட்டி இறந்தகாலங்காட்டியது. புகாமையும் என்பது எண்ணும்மை தொகுத்தலாய் வந்தது. கண்-ஏழனுருபு. ஏ-தேற்றம்; பிரிநிலையுமாம். உள - பலவின்படர்க்கைக் குறிப்பு வினைமுற்று. உண்டு Is singular.

72. (ப-ரை) நன்கு அறிவார் - நன்கறிந்தவர், செறுவந்தும் - தாம் வெகுண்டாராயினும், தம் - தமது, குரவர்பேர் - குரவர்பெயரை, உரையார் - சொல்லார். இல்லத்து - தமதுவீட்டில், உறுமி - தமது மனைவியை மிகவும் கோபித்துப்பேசி, நெடிதும் - நெடுநேரம், இரார் - இருக்கமாட்டார். என்றும் - எக்காலத்தும், பெரியாரை- தம்மிற்பெரியாரை, முறைகொண்டு-முறைப்பெயர்கொண்டு, கூறார் - சொல்லார். புலையரையும் - புலையரையும்,முறை-முறைப்பெயர்கொண்டு, கூறார் - கூறார்.

(க-து) கோபங்கொண்டு நின்றவிடத்தும் தம்முடைய குரவரது பெயரைச் சொல்லலாகாது. நெடுநேரமளவாக மனையாளை மிகக்கோபித்து இருத்தல்கூடாது. தம்மிற்பெரியாரையும் புலையரையும் முறைப்பெயர்கொண்டு அழைத்தலாகாது.

Those who know well, would not mention the names of their seniors even in anger; would not long continue scolding their wives at home; would not talk of their elders nor of the low by words expressive of relationship.

தெறுவந்து - (தெறு - அழி) அழியவந்து, அழியும்படியாகவந்து, அழி தற்குக் காரணமான கோபம் உண்டாகி. தெறுவா - பகுதி, தெறுவ என்று னது குறுக்கல் விகாரம், த் - ச, த் - இ, உ - எச்ச வி - த் - ந் ஆனது மெலித் தல். உறுமி - உறுமு - ஒலிக்குறிப்பு பற்றவந்த சொல் as பன்றிஉறுமுகிறது, நெடிது - நெடுமை என்னும் பண்படியாகப்பிறந்த குறிப்பு வினையெச்சம்.

73· (ப-ரை) புழைக்கடை - (பிறர்மனையினகண்) புழைக்கடைவாயிலால், புகார் - புகார். அரசன் - அரசனுனவன், கோட்டி - கூட்டங்கொண்டு கூத் து முதலியவற்றால் இன்புறுகின்ற விடமும், உரிமை - உரிமை மகளிரோடு இருந்தவிடமும், இவற்றுக்கண் - ஆகிய இவ்விடங்களில், செவ்வியார்-செவ் வியராய் உள்ளார், நோக்கார் - சென்று நோக்கார், அவ்வத்தொழிற்கு-அந் தந்தத் தொழிலுக்கு, உரியர் அல்லாதார் - உரியரல்லாதவர்.

(க-து) வேறொருவருடைய வீட்டினிடத்தில் புழைக்கடைவாயிலாக உள் ளே போதலாகாது. அரசன் கூத்துமுதலியவற்றால் இன்புறுகின்ற விடத்தி லும் உரிமை மகளிரோடிருக்கு மிடத்திலும், அவ்வத்தொழிலுக்கு உரியவர் களன்றி மற்றவர்கள் போய்ப்பார்த்தல் கூடாது.

Do not enter another's house by the backdoor. The good would not pry into king's private stage & private apartments, except those concerned.

புழைக்கடை—இது புறக்கடை (opp of தலைக்கடை) எனவும்வழங்கும்) புழை - துவாரம், துவாரதகின்கடை. வீடுகளில் இடையீடாக ஏற இடம்விட் டுக்கட்டுவது இந்துக்களில் வழக்கம். இவ்விடையீடான இடம் வீட்டுகெருத் துவாரம் (புழை) போல இருத்தலால் அதன் கடைசிபாகத்தைப் புழைக்கடை என வழங்கலாயிற்று. இதுபின்பு வீட்டின் பின்புறத்திலுள்ள நிலத்தையும் (Backyard) உணர்த்துவதாயிற்று. கோட்டி - Sans கோஷ்டி - (கூட்டம்.) அ + அ + தொழில = அவ்வத்தொழில்.

74 (ப-ரை) ஒள்ளியம் என்பார் - அறிவுடையோர் என்று சொல்லப்படு வோர்; வண்ணமகளிர் - கோலஞ்செய்யும் (பொது) மகளிரது, இடத்தொடு - இடத்தொடு சேர்ந்த, தம்இடம் - தமது இடத்தை, இடம் - சிறந்த இடமாக. கொள்ளார் - கொள்ளார். தெள்ளி - தெளிவுறறு, மிகக்கிழமை - மிகுந்தசொ ந்தம், உண்டெனினும் - உளதாயினும், வேண்டாவே - விரும்பப்படுவனஅல் ல. (ஏனெனின்), பெண்டிர்க்கு - தம்மனைவியர்க்கு, உவப்பன - விரும்பப்ப டுவன, வேறு ஆய் விடும் - வேறுபடும்.

(க-து) பொதுமகளிர் வசிக்கின்ற இடத்திற்குச் சமீபமாக உள்ள தங் முடைய இடத்தை வசிப்பதற்குரிய சிறந்த இடமாகக் கொள்ளலாகாது. அம் மனங் கொண்டால் தம்முடைய மனைவியரது மனவிருப்ப மெல்லாம் வேறுபடும்.

The wise would not choose to reside in their own place if it should lie close to the place owned by harlots. Such places, though they are your own by right are not preferable. If such places be chosen. Your wife's desires would change.

வண்ணம் (S வர்ணம் - வர்ணம்) - நிறம் - அழகு - கோலம். வண்ண மகளிர் - தம்மை அழகுசெய்துகொள்ளும் பெண்கள். பெண்களுக்குத்தம் மை அழகுசெய்துகொள்ள விரும்புதல் சுவபாவமாயினும், 'விலைமகட்கழகு

தன் மேனிமினுக்குதல்' என்கிறபடியே, பொதுமகளிர் தமது கோலத்தைக் காட்டியே பொருள் பறிப்பவராதலால் அவர்களைச்சிறப்புவகையால் வண்ண மகளிர் என்ப. ஒள்ளியம் - தன்மைப்பன்மைக்குறிப்பு முற்று. ஒள்ளியம்என்பார் - தன்மையும படர்க்கையும் விரவிவந்தது இடவழுவமைதி. வேண்டா என்பதற்கு எழுவாய் அவ்விடங்கள் என்பது மறைந்து நின்றதாகக் கொள்க. உவக்கப்படுவன என்னும் செயப்பாட்டுவினை உவப்பன எனச் செய்வினைபோல நின்றது.

75. (ப-ரை) என்றும் - எக்காலத்தும், கடைபோக - ஒருதன்மையராக, வாழ்தும் - வாழ்வோம், என்பார் - என விரும்புகின்றவர்; நிரல்பட - ஒருவர் பக்கத்தில் வரிசைப்பட, செல்லார் - போகார்; நிழல் - ஒருவருடைய நிழலை, மிதித்துநில்லார் - மிதித்துநில்லார்; உரையிடை - (முன்னர்ஆராய்ந்தன்றிப்) பேசும்போது, ஆய்ந்து - ஆராய்ச்சிசெய்து, உரையார் - பேசார்; ஊர் - ஊரிலுள்ளோர், முனிவ - வெறுக்கத்தக்கவைகளை, செய்யார் - செய்யார்; அரசர் - அரசரது, படையளவும் - சேனையினளவையும், சொல்லார் - பகைவருக்குச் சொல்லார்.

(க-து) ஒருவர் பக்கத்திலே போகும்போது ஒருவரிசைப்பட போதலும், ஒருவருடைய நிழலை மிதித்துக்கொண்டு நிற்றலும் கூடாது. பேசுதற்குமுன்னமே ஆராய்ந்து பேசவேண்டுமல்லாது பேசும்போது ஆராய்ச்சிசெய்துகொண்டே பேசுதல் ஆகாது. ஊரினருக்கு வெறுப்பான காரியங்களைச்செய்ய வொண்ணாது. அரசருடைய படையின் அளவைப் பகைவருக்குச் சொல்லுதல் அடாது.

Those who wish to lead a uniform course of life, would not go abreast with others; would not stand on another's shadow.

ஆய்ந்து. ஆய் - பகுதி. ஊர் - இடவாகுபெயர். வாழ்தும் என்பார்-இடவழுவமைதி. முனிவ - பலவின்படர்க்கைக்குறிப்பு வினையாலணையும்பெயர்.

76. (ப-ரை) அளை - புற்றில், உறை - வசிக்கின்ற, பாம்பும் - சர்ப்பமும், அரசும் - அரசனும், நெருப்பும் - தீயும், முழை - குகையில், உறை - வசிக்கின்ற, சீயமும் - சிங்கமும், என்ற - என்றுசொல்லப்பட்ட, இவைநான்கும் - இந்நான்கனையும், இளைய என்று - இளையன என்றும், எளியஎன்று - எளியன என்றும், பயின்றன என்று - பழகினவை என்றும், எண்ணி - நினைத்து, இகழின் - இகழ்ந்து நடந்தால், இழுக்கம் - துன்பம், தரும் - தருவனவாம்.

(க-து) பாம்பு - அரசன் - நெருப்பு - சிங்கம் என்கின்ற இந்நான்கையும் இளையனவென்றும் எளியனவென்றும் பழகினவென்றும் அசட்டையாக இருந்தால் துன்பம் உண்டாகும்.

The serpent living in holes, the king, the fire, & the lion living in caves: these four, if despised as young, harmless, & familiar, would produce evil.

உறை - வினைத்தொகைவினை. பாம்பு-நெருப்பு-சீயம் என்னும் மூன்று அஃறிணையுடனே அரசனென்னும் ஒரு உயர்திணைவருதலால் மிகுதிபற்றி இவை என அஃறிணைப் பன்மையாற்சுட்டினார். இழுக்கம் - இழுக்கு - பகுதி.

77. (ப-ரை) திறப்பட்டார் - அறிவுடையோர், இறப்ப - மிகவும், பெருகியக்கண்ணும் - (தம்மிடத்துச்செல்வம்) பெருகிய விடத்தும், அறத்தொடு - அறத்தினையும், கல்யாணம் - கல்யாணத்தினையும், ஆள்வினை - முயற்சியையும், கூரை - வீட்டினையும், மன்னரின் - அரசர் செய்வதினும், மேம்பட - மிகும்படியாக,

செய்யற்க - செய்யாதொழிக; செய்பவேல் - செய்வராயின், மன்னிய - தம் மாட்டேற்ற, செல்வம் - செல்வம், கெடும் - அழியும்.

(க-து) ஒருவர்தாம் எவ்வளவு விசேஷித்த செல்வம் உடையவராயிருப்பினும், தருமம் - கல்யாணம் - ஒரு தொழில் முயற்சி - வீடென்னும் இவைகளை அரசரைசகாட்டில் மேன்மையாகச் செய்தலாகாது. செய்தால் தம்மிடத்திலுள்ள செலவம் அழிவடையும்.

Even when they are extremely prosperous, the wise had better never excel kings in charitable deeds, performance of marriage ceremonies, attempts, and erection of buildings. If they should do so; their wealth will perish.

ஆள்வினை - ஆளும்வினை - காரணமான முயற்சியை காரியமான ஆளும் வினையென்பது உபசாரவழக்கு. கூறை - சினையாகுபெயர். பெருகியக்கண் - வினையெச்சம். மன்னரின் - ஐந்தாம்வேற்றுமை எல்லைப்பொருள், ஏல் - எனில் என்பதன் மரூஉ.

78. (வ-ம்) கண்தாமம் திரியார், குரவரையும் - மிக்காரையும் கண்டுழி உண்டது கேளார். புலையரையும்...விடல்.

(ப-ரை) கண்தாமம் - தம்மிடத்துப்புகழ், திரியார் - வேறுபடாதவர்;குரவரை - ஐங்குரவரையும், மிக்காரை - சான்றோரையும், கண் டுழி-கண்டால், உண்டது - உண்டது (யாதென), கேளார் - வினவார். (ஆதலால்), புலையரையும் - கீழோரையும், உண்டது - உண்டது (யாதென), கேளார் - வினவாது, விடல் - ஒழிக.

(க-து) ஐங்குரவரையும் பெரியோரையும் கண்டால் 'நீங்கள் உண்டது என்ன' என்று கேட்டலாகாது. ஆதலால், கீழோரையும் அங்ஙனம் கேட்க வேண்டாம்.

Those of steady fame ought not to enquire of the (five) seniors & other great personages what meals they have taken. Do not, therefore, enquire even of the low of what meals they have taken.

புலையரையும் - இழிவு சிறப்பும்மை. மிக்காரையும் என்பதில் உயர்வு சிறப்பும்மை தொக்கது. திரியார் - வினையாலணையும்பெயர். கேளார் - முற்றெச்சம். விடல் - வியங்கோள்.

79. (வ-ம்) எஞ்ஞான்றும் கட்டில்மிசை கிடந்தாரது...மறந்தானும் சாந்தம்பூசார்; கிடந்தார்கண் நில்லார்.

(ப-ரை) எஞ்ஞான்றும் - எப்போதும், கட்டில் மிசை - கட்டிலின் மீது, கிடந்தாரை - படுத்திருப்பவரது, கால் - காலை, கழுவார் - கழுவார்; பூ பெய்யார் - அவருக்குப் பூவை அலங்கரியார்; மறந்தானும்-மறந்தாவது, சாந்தம்-சந்தனத்தை, பூசார் - (அவருக்குப்)பூசார்; கிடந்தார்கண் - அப்படிப் படுத்திருப்பவரது அருகில், நில்லார் - நிற்றலும் செய்யார். அம்-அசை.

(க-து) ஒருவர் கட்டிலின்மீது படுத்துக்கொண்டிருந்தால், அப்போது, அவருடைய காலைக்கழுவுதலும் - அவருக்குப் பூச்சூடுதலும் - சந்தனம் பூசுதலும் - அவர் அருகில் நிற்றலும் ஆகா.

Never wash the feet of those who lie on a cat, nor adorn them flower, nor anoint them with sandal even forgetfully, nor stand near them

**கிடந்தார்** - வினையாலணையும்பெயர் - கிடந்தாரைக் கால்கழுவார்:— கிடந்தாரைக்காலின்கண் கழுவார் or கிடந்தாரது காலைக்கழுவார்; இங்ஙனம் வருவதை "முதலை ஐயுறிற் சினையைக்கண்ணுறும், அதுமுதற் காயிற் சினைக் கையாகும்" (ந - சூ - 315) என்பதனானறிக. கிடந்தார் என்னும் முதற்பெயரோடு ஐ என்னும் உருபைச் சார்த்தினால் கால் என்னும் சினைப்பெயருடனே கண்ணென்னும் உருபைச்சார்த்துக. முதற்பெயரோடு அது என்னும் உருபைப் புணர்த்தினால் சினைப்பெயருடனே ஐ உருபைச் சார்த்துக. கிடந்தாரைப்பூப் பெய்யார் - கிடந்தாரைச் சாநதம் பூசார் என்பவைகளில் கிடந்தாருக்கு என்பது பொருளாதலின் இரண்டாவது நான்காவதில் மயங்கி வந்ததென அறிக.

80. (ப-ரை) திறத்து - பெரியோருடைய ஒழுக்கத்தினை, உள்ளி - நினைத்து, வாழ்தும் - அவ்வாறு வாழ்வோம், என்பார் - என்று எண்ணுவோர்; உதவி - தாம் ஒருவருக்குச் செய்தநன்றியின், பயன் பயனை, உரையார்-சொல்லார்: உண்டி-தமக்கு ஒருவரிட்ட உணவை, பழியார் - இகழ்ந்து உரையார். தாம் (செய்த) அறத்தொடு - தாமசெயத அறத்தையும், தாம் நோற்ற நோன்பு-தாம்மேற்கொண்டு முடித்த விரதத்தையும்,வியவார்-புகழ்ந்துரையார்.

(க-து) தாம் ஒருவருக்குச்செய்த நன்றியைத் தாமே பாராட்டுதலும், தமக்கு ஒருவரிட்ட உணவை இகழ்ச்சிசெயதலும் ஆகா. தாம்செய்த தருமத்தையும்அனுசரித்துமுடித்த விரதத்தையும் தாமே புகழ்ந்துபேசுதல் நன்றன்று.

Those who wish to lead the lives of great men would not speak of the good done by them to others; nor speak ill of the food given by others. They would admire the charities and now performed by themselves.

"தான் புரிதவத்தைக் கொடையினைப் புகழிற்றழைவுறுதஃகும்" காசி காண்டம். நோற்ற - நோல் - பகுதி. உளி - உ (ள்)ளி.

81. (ப-ரை) மெய்யாய - உண்மையான, காட்சியவர்-அறிவினை உடையார், எய்தாத - தமக்குக் கிடைத்தற் கரியவற்றை, வேண்டார் - விரும்பார்; இழந்ததற்கு - தம்மால் இழக்கப்பட்டன வற்றிற்கு, இரங்கார் - வருந்தார்; கைவாராவந்த - அகற்றறகரியதாக நேரிட்ட, இடுக்கண் - துன்பத்தின் பொருட்டாக, மனம் அழுங்கார் - மனம்கலங்கார்.

(க-து) கிடைப்பது அருமையான பொருள்களை விரும்புவதும், இழந்த பொருளைக் குறித்து வருந்துதலும், நீக்கமுடியாத துன்பம் நேரிட்டால் அதற்கு மனங்கலங்குதலும் பயனில்லாத காரியங்களாம்.

The truly wise would not long for what they cannot obtain, nor feel sorry for they have lost, nor lose their peace of mind at the occurrence of an irrevocable misery.

**எய்தாத** - எதிர்மறைப் பலவின்பால் வினையாலணையும்பெயர். **கைவாரா** - ஈறுகெட்ட எதிர்மறை வினையெச்சம். கைவாராது-(கைவருதல் - அநுகூலித்தல்.)

82. (ப-ரை) என்றும் - எப்போதும், தலைக்கு இட்ட - ஒருவர் தலையில் முடித்த, பூ - பூவை, மோவார் - தாம் முகரார்; மோந்த - ஒருவர் மோந்த, பூ - பூவையும், சூடார் - சூட்டிக்கொள்ளார். பார்ப்பார் - பிராமணர், பசு - பசுவினை, கொடுப்பின் - கொடுத்தால், கைக்கொள்ளார் - அதனைவாங்கார். புலைக்கு - புலையருக்கு, எச்சில் - எச்சிலை, நீட்டார் - கொடார். விடல் - ஆதலால் இவைகளை விடுக.

(க-து) ஒருவர் தலையில் முடித்த பூவைத் தாம் மோந்தலும், ஒருவர் மோந்தபூவைத் தாம்தலையில் முடித்தலும் ஆகா. பார்ப்பாரிடத்துப்பசுவைப்

)றர் தானமாக வாங்குதல் கிரமமன்று. புலையருக்கு எச்சிலைக் கொடுத்தல் குதியல்ல.

Do not smell the flower worn by others, nor wear the flower smelled y others. Do not accept the gift of a cow from brahmins. Do not give he refuse of meals to the out-caste.

கைக்கொள்ளார் - கைக்கொள் - பகுதி: நீட்டார் - முற்று. நீட்டு causa- ive of நீள்) - பகுதி.

83. (ப-ரை) காட்டுளேயானும் - காட்டிலேதானும், தம்மில்மூத்த - தம் ிலும் வயதுமுதிர்ந்த, மரம் - மரங்கள், உளவாகலான் - உள்ளன ஆதலால், !மாட்டுடைப் போர்வையோடு - உடலின்மீது போர்த்தலும், ஏக்கழுத்தம் - இறுமாந்திருத்தலும், தாள் அசைப்பு - தாளை அசைத்தலும், பழித்தார-(என்ற இவை ஆகாவென்று பெரியோரர்) பழித்தனர்.

(க-து) காட்டிலே யானாலுங்கூட, உடலின்மீது போர்த்திருத்தலும் - இறுமாப்புடனிருத்தலும் - காலையசைத்தலும் ஆகா எனப்பெரியோர இவற்றை ) பழிதிருக்கின்றனர்.

Even in a forest as there are trees older than you, you are for )idden by sages to cover body with a cloth, to assume haughty carriages, and to shake your feet.

ஏக்கழுத்தம் - ஏ - உயர்வு; கழுத்தை உயர்த்தி யிருத்தல்; இறுமாப்பு - 'ஏக்கல் மலைநாட'' (பழமொழி) என்பதில் ஏ என்பது உயர்வு என்னும் பொருளில் வருவதறிக. ஏக்கழுத்தம் என்பது எக்கழுத்தம் - எக்கழுத்து எனவும் வரும். ஆனும் - ஆ(யி)னும் தம்மில் - ஐந்தாம்வேற்றுமை எல்லைப்பொருள். 'பழித்தாரமாந்தம்மின்'' என்றும்பாடம். பொருள் - காட்டினிடத்திலேனும் தம்மூத்தோர் உளராயிருப்பாராயின் அவர்முன் உடலின்மீதுபோர்த்தல்... பழியின் எல்லையாம்.

84. (ப-ரை) நிலை இயைந்த - நிலைபொருந்திய, நற்கருமம் - நல்லகாரியங்களை,செய்யுங்கால் - செய்யுமிடத்து, என்றும் - எப்போதும், புலையர்வாய் - புலையரிடத்து, நாள்-நலலநாளை, கேட்டு-கேட்டறிந்து, செய்யார்-செய்யார்; தொலைவுஇல்லா - கேடில்லாத, அந்தணர்வாய்-அந்தணரிடத்து, நாள்கேட்டு- நல்லநாளைக்கேட்டறிந்து, செய்க - அந்தநற்கருமங்களைச்செய்க. அவர் வாய்ச்சொல் - அவருடைய வாய்ச்சொற்கள், என்றும் - எப்போதும், பிழைப்பது - பிழைபடுவது, இல - இல்லை.

(க-து) அந்தணருடைய வாய்ச்சொல் தவறாதாதலால், ஒருஸ்திரமான நல்லகாரியத்தைச் செய்யும்போது அந்தணரையே நல்லநாள்கேட்டுச்செய்க. புலையரைக்கேட்டுச் செய்யற்க.

When you want to perform a steady good action, do not consult the out-caste for an auspicious day; but consult brahmans of good prestige, because their words never go amiss.

வாய் - ஏழனுருபு. வாய்ச்சொல் என்பதில் வாய் - சினைப்பெயர். அந்தணர் - அம் - அழகிய, தண் - தட்பம் : அழகியதட்பம் (குளிர்ச்சி- கிருபை அருள்) உடையவர். '' அந்தணரென்போரறவோர் மற்றெவ்வுயிர்க்கும்,செந்தண்மை பூண்டொழுகலான்'' என்ற குறளானும் உணர்க. (வேத) அந்தத்தை அணவியிருப்போர் என்றுரைப்பர் நச்சினார்க்கினியர். அணவுதல் - சேர்தல், சொல்பிழைப்பது இல என்னுமுடிபில் ஒருமை யெழுவாய் பன்மை முடிபைக்கொண்டிருப்பது வழுவன்றோ வெனின், '' ஒருமையிற் பன்மையும் பன்

மையி ஞெருமையும், ஓரிடம் பிறவிடந்தழுவலுமுளவே" (ந-சூ-380) என்ப தனுல் வழுவமைதி எண்க.

85. (ப-ரை) மன்றத்து - அறிஞரானவர் பெரியோர் கூடியசபையிலே, நின்று - நின்று, உஞற்றூர் - யாதொரு அங்கசேஷ்டையும் செய்யார் ; மாசுதி மிர்ந்து - மாசுள்ளவற்றைத் திமிர்ந்துகொண்டு, இயங்கார் - நடவார் ; என் றும் - எப்போதும், கடுஞ்சொல் - கடுமையான சொற்களை, உரையார் - பே சார் ; இருவராய் நின்ற உழியும் - இருவராய் நின்று பேசுமிடத்தும், சொல் லார் - (அக்கடுஞ்சொல்லைப்) பேசார். விடல் - ஆதலால் இவற்றை ஒழிக.

(க-து) பெரியோர்களிருக்கின்ற சபையிலே யாதொரு அங்கசேஷ்டை யும் செய்தலாகாது. நடக்கும்போது அழுக்குள்ளவைகளைத் தேய்த்துக்கொ ண்டு நடத்தல்கூடாது. எப்பொழுதும் கடுமையான வார்த்தைகளைப் பேசுத லும், இருவராக நின்றவிடத்து அவ்வார்த்தைகளைப் பேசுவதும் நன்றன்று.

The wise would not perform any grimaces in an assembly of the great ; would not walk rubbing or besmearing dirty things; would never utter harsh words, nor do so in the presence of two persons standing. Better, therefore, avoid these.

86. (ப-ரை) ஐயமில் - ஐயமற்ற, காட்சியவர் - அறிவுடையோர், கைசுட் டி - (தமது குரவர்முன்னே) கையைச்சுட்டிக்காட்டி, கட்டுரையார்-பேசார்; காலால் - காலினால், எழுத்துஇடார் - எழுதார் ; உள்ளாரோடு - கல்விமுதலி யவற்றை உடையாரோடு, இல்லாரை - அவற்றையில்லாரை, மெய்சுட்டி - மெய்யெனச்சாதித்து, ஒப்பு உரையார் - ஒப்பிட்டுக்கூறூர் ; குரவர் - குரவர், கையில்கொடுப்ப - கையில்கொடுப்பனவற்றை, இருந்து - உட்கார்ந்திருந்து, ஏலார் - ஏற்றுக்கொள்ளார்.

(க-து) குரவரெதிரில் கையைச்சுட்டிக்காட்டிப் பேசுதலாகாது. காலால் எழுதிக்காட்டலாகாது. கல்விமுதலியன இல்லாதவர்களை அவற்றையுடையவ ர்க்குச் சமானமென்று சாதித்தலாகாது. குரவர் கொடுப்பனவற்றை உட்கார் ந்திருந்தபடியே வாங்கிக்கொள்ளுதலாகாது.

Those of clear understanding would not, before seniors, talk pointing and any body with their fingers, nor write anything with their feet : would not assert comparisons between those who have learning &c and those who have them not; would not receive in a sitting posture what is given by their seniors.

சுட்டி - சுட்டு - பகுதி. கொடுப்ப - நிகழ்காலம். ஏலார் From ஏல்.

87. (ப-ரை) தன் - தனது, உடம்பு - உடல், தாரம் - மனைவி, அடைக்க லம் - தன்னிடத்தில் அடைக்கலமாக ஒருவன்வைத்த பொருள், தன் உயிர்க் கென்று - தன்உயிர்க்கு உதவியாக, உன்னி - எண்ணி, துவைத்த - சேர்த்து வைத்த, பொருளோடு - பொருளும், இவை நான்கும் - ஆகிய இந்நான்கினை யும், பொன்னினைப்போல்-பொன்போல் அருமையாக, போற்றிக்காத்து-ஆத ரித்து, உய்க்க-ஒழுகுக. உய்யாக்கால் - அங்ஙனம் ஒழுகாவிட்டால், அன்றே- அப்பொழுதே, விழுமம் - துன்பத்தை, தரும் - கொடுக்கும்.

(க-து) தன்னுடம்பு - தன்பெண்டாட்டி - தன்னிடத்தில் அடைக்கல மாக வைக்கப்பட்டபொருள் - தனக்கு ஆபத்துக்காலத்தில் உதவியாகும்படி சேர்த்துவைக்கப்பட்ட பொருள் ஆகிய இந்த நான்கையும் அருமையாகப் பாதுகாவாவிட்டால் மிகுந்த துன்பம் உண்டாகும்.

Protect carefully, as you would do gold, your body, your wife, any thing lodged with you for safety and what you have saved as provision for life. Otherwise great misery would follow.

தாரம் - Sans தாரா. அடைக்கலம் - பத்திரமாக மூடிவைக்கத்தகுந்தபாத்திரம்; பத்திரமாக வைக்கத்தகுந்த இடம்; பத்திரமாக வைத்திருக்கும்படி கொடுக்கப்பட்ட பொருள்.

83. (ப-ரை) நந்து எறும்பு - ஆக்கமுள்ள எறும்பும், தூக்கணம்புள்-தூக்கணம் பறவையும், காக்கை-காக்கையும், என்ற-என்று சொல்லப்பட்ட, இவை போல் - இவைகளின் செய்கைபோல; தம் - தமது, நல்லருமம் - நல்லகாரியங்களை, கடைப்பிடித்து - சோராமல்கொண்டு, தம்கருமம் - தமதுகாரியங்களை, அப்பெற்றியாக - அம்மூன்றின் தன்மைபோல, முயல்பவர்க்கு - செய்பவர்க்கு, ஆசாரம் - இல்வாழ்க்கையின் ஒழுக்கம், எப்பெற்றியானும் - எத்தன்மையாலும், படும் - சிறப்புறும்.

(க-து) எறும்பானது கிடைக்காத காலத்தில் உதவியாகும்படி கிடைக்கின்ற காலத்திலே உணவைச்சேகரித்து வைத்துக்கொள்ளும். தூக்கணங்குருவியானது குளிர்காற்று முதலியவற்றில் நின்றும் தன்னைக் காக்கும்படி கூடுகட்டிக்கொள்ளும். காக்கையானது தன் இனத்தை அழைத்தழைத்து அவைகளுடனே தனக்குக்கிடைத்த உணவை உண்ணும். இங்ஙனமாக இவைகளின செய்கையை அநுசரிப்பவர்க்கு இல்வாழ்க்கையின் ஒழுக்கம் எவ்விதத்திலும் சித்திபெறும்.

Well prospers, under any circumstances, the household of those who hold fast their good actions and persevere like the prosperous ant, the Loxia bird, and the crow.

"காக்கை கரவா கரைந்துண்ணும் ஆக்கமும், அன்னநீரார்க்கேயுள" குறள்.
"Go to the ant, thou sluggard; consider her ways, and be wise: which having no guide, overseer, or ruler, provideth her meat in the summer, and gathereth her food in the harvest"—Proverbs of solomon.

89. (ப-ரை) பெரியார்முன் - பெரியோரிடத்தில், யாதும் - யாதேனும் ஒன்று உரைக்க வேண்டின், தொழுதாலும் - வணங்கிநின்றேனும், வாய்புதைத்தாலும் - வாய்புதைத்து நின்றேனும், அஃதன்றி - உரைப்பதன்றி, உரையார் - வேறுவகையின் அறிஞர் உரையார். அவர் கண் - அவர்முன், உளே - உன்மனதிலே, வழிநோக்கி - கிரமத்தை ஆராய்ந்து, (அதன்படியே) உரை - உரைப்பாயாக.

(க-து) பெரியோரிடத்தில் ஏதாகிலும் சொல்வதானால் வணங்கிநின்றாயினும் வாய்பொத்தி நின்றாயினும் சொல்வதன்றி வேறுவிதமாகச்சொல்லலாகாது. அவரிடத்தில் பேசவேண்டிய கிரமதனை அநுசரித்துப் பேசுக.

Never utter anything in the presence of the great without assuming a humble posture or without holding your fingers before your mouth. Speak to them after considering over the proper manner.

ஆனும் - ஆயினும். வாய்புதைத்தலாவது - ஒரு பெரியவருடனே பேசும்போது விரல்களைக்குவித்து வாயின் எதிரிலே சமீபமாக வைத்துக்கொண்டிருத்தல். கைகட்டி வாய்பொத்தி நின்று உரைத்தான் எனவும் வருவதுங் காண்க.

90. (ப-ரை) பேதைகள் அல்லார் - அறிவீனர் அல்லாதவர், சூதர்கழகம் - சூதாடுமிடத்தும், அரவம் - ஆரவாரம், அறு - நீங்காத, களம் - இடத்

தும், புகார் - புகுதல் செய்யார்; புகுபவேல் - புகுவாராயின், பல ஏதமும் - பல துன்பங்களும், தரும் - உளவாகும்.

(க-து) சூதாடுகின்ற இடத்திலும் ஆரவாரம் நீங்காத இடத்திலும் அறிவுடையார் போகார். போனால் பலதுன்பங்கள் உளவாகும்.

Others than fools will never enter either a gambling house or a riotous place. If they should enter many miseries would follow.

பேதைகள் அல்லார் - அறிவுடையவர். புகுபவேல் - வினையெச்சம். இரண்டுசொல்லாகப் பிரித்துக்கொண்டால், புகுப - பலர்பால் முற்றென்றும், எல் - எனில் என்றும் கொள்க. உம் - முற்றும்மை.

91. (ப-ரை) நடுக்கு அற்ற - சோர்வற்ற, காட்சியார் - அறிவையுடையார், உரல்களத்தும் - ஆரவாரஞ்செய்யுமிடத்தும், அட்டிலும் - மடைப்பள்ளியிலும், பெண்டிர்கள்மேலும் - பெண்டீர்கள் உறைகின்ற இடத்தும், நோக்கார் - (முறையே) உற்றுப்பாரார்; எடுத்து - குரலை எடுத்து, இசையார் - பேசார்; இல்லம் - இல்லத்துள், புகார் - புகுதல் செய்யார்; விடல் - ஆதலால் நீ இவற்றை விடுக.

(க-து) ஆரவாரஞ் செய்யுமிடத்தைப் பார்த்தலும், மடைப்பள்ளியில் எடுத்துரைத்தலும், பெண்டிர்கள் உறைகின்ற இல்லத்துள் புகுதலும் ஆகா.

Persons of unfailing wisdom would not gaze at noisy places, nor talk loud in cook-rooms, nor enter a house occupied by females. Better, therefore, avoid these.

உரல் (from உர - கெட்டியாக. in a loud voice). சப்தம் - ஆரவாரம். உரக்க, உரத்து என வருவனகாண்க. அட்டில் - அடு + இல்: சமைக்கப்பட்ட இடம்.

## தூய்மைக்குப்புறனடை.

92. (ப-ரை) உரைக்கும் கால் - உண்மை உரைக்குமிடத்து, ஆசாரம் - ஆசாரங்களில் நின்றும், ஆற்றவும் - பரிஷ்காரமாக, வீடுபெற்றார் - விடுதலை பெற்றவர், (எவ்வெவரெனில்); அறியாத தேயத்தான் - அறியாத தேசத்தான், ஆதுலன் - வறியவன், மூத்தான் - விருத்தாப்பியன், இளையான் - வாலிபன், உயிரிழந்தான் - உயிரிழந்தவன், அஞ்சினான் - பயமுற்றவன், உண்பான் - உண்பவன், அரசர்தொழில் - அரசர்தொழிலில், தலைவைத்தான் - தலைவைத்தவன், மணாளன் - மணமகன், என்ற ஒன்பதின்மர் - என்று சொல்லப்பட்ட இவ்வொன்பது வகைப்பட்டோருமாம்.

(க-து) புறநாட்டான், தரித்திரன், வயோதிகன், வாலிபன், உயிரிழந்தவன், பயமுற்றவன், உண்கின்றவன், இராசகாரியத்தில் பிரவேசித்தவன், மணமகன் என்ற ஒன்பதின்மரும் ஆசாரமிலிகளாவர்.

The stranger, the panper, the old, the young, the dead, the alarmed, the eating, one who under-takes king's service and the bride groom: these nine are indeed exempt totally from theobservance of prescribed rites.

தேயம் - sans தேசம். மணாளன் also மணவாளன் - மணம் + ஆளன் = மணத்துக்குரியவன். மணம் - கலியாணம். ஒன்பதின்மர் - இதில் இன் சாரியை. note other words derived from numbers:—ஒருவர், இருவர், மூவர், நால்வர், ஐவர், எழுவர், எண்மர் - பதின்மர், நூற்றுவர், ஆயிரவர் &c. கண்டீர் - முன்னிலை யுரையசை. வீடு - முதனிலை நீண்ட தொழிற்பெயர்: விடுதல்.

# பெருந்தேவனார்.

சீருறும்பாடல்பன்னீராயிரமுஞ்செழுந்தமிழ்க்கு
வீரர்தஞ்சங்கப்பலகையிலேற்றியவித்தகனார்
பாரதம்பாடும்பெருந்தேவர்வாழும்பழம்பதிகாண்
மாருதம்பூவின்மணம்வீசிடுந்தொண்டைமண்டலமே.

இப்புலவர் பெருமான் தொண்டைமண்டலத்தினர். மதுரைத் தமிழ்ச்சங்கமாகிய முதற்சங்கம் - இடைச்சங்கம - கடைச்சங்கம் என்னும் முச்சங்கத்தினுள் கடைச்சங்கப்புலவர்களில் ஒருவர். அக் காலத்திற்றானே இவரைப் "பாரதம்பாடிய பெருந்தேவனார்" என வழங்கியிருக்கின்றனர். பரிபாலனர் புகழ் (காவலன் வாழ்த்துச்) செய்யுளால் இவர் பல்லவராயன் அரசு புரிந்துவந்தகாலத்தினரென்பதும்; இவர் தாமியற்றிய அடியிற்குறித்த திருவள்ளுவமாலைச்செய்யுளால், திருக்குறள் அரங்கேறின காலத்தவர் என்பதும் போதரும்.

இவர் அருளிச்செய்த இப்பாரத நூற்கண் ஆங்காங்கு திருமாலின் சிறப்பைப் பலவாற்றானும் புகழ்ந்திருத்தலின் வைணவ மதத்தினரென்று தெற்றென விளங்குறுகின்றது. புறநானூறு முதலிய பேரிலக்கியத் தொகுதிகளுக்கு இவர் செய்தருளிய தெய்வவணக்கச் செய்யுளால் சைவரென்றுஞ் சிலர் கூறுப.

இவர் அருளிச்செய்த இந்நூல் பெரும்பாலும் வெண்பாவாற் சமைந்துளதேனும் இடையிடையே ஆசிரியப்பாவும் உரையும் விரவியுளது. இக்காப்பியத்தின் செய்யுட்டொகை பன்னீராயிரமென்று மேலைய தொண்டைமண்டலச் சதகச்செய்யுளால் தெரியவருகின்றது. இருபதினாயிரத்துக் கதிகமுமென்பர்: அது இக்காலத்து முற்றுங் கிடைப்பது அரிது.

தொல்காப்பியத்திற்குப் பல்லாற்றானும் இவர் பாரதம் எடுத்துக்காட்டாவதனால் இவர் மிகச்சிறந்த புலவர் என்பது பெறப்படுகின்றது. இப்பெருந்தேவனார் இந்நூலேயன்றி ஏனை நூலொன்றும் செய்துளதாகத் தோன்றிற்றிலது.

திருவள்ளுவமாலை.

வெண்பா.

எப்பொருளும் யாரு மியல்பி னறிவுறச்
செப்பிய வள்ளுவர்தாஞ் செப்பவரு—முப்பாற்குப்
பாரதஞ்சீ ராம கதைமனுப் பண்டைமறை
நேர்வனமற் றில்லை நிகர்.

# பழமொழி.

1 வைத்ததனை வைப்பென் றுணரற்க தாமதனைத்
துய்த்து வழங்கி யிருபாலும்—அத்தகத்
தக்குழி நோக்கி யறஞ்செய்யி னஃதன்றோ
எய்ப்பினில் வைப்பென் பது.

2 தோற்ற மரிதாய மக்கட் பிறப்பினால்
ஆற்றுந் துணையு மறஞ்செய்க—மாற்றின்றி
அஞ்சும் பிணிமூப் பருங்கூற் றுடனியைந்து
துஞ்ச வருமே துயக்கு.

3 சிறிய பொருள்கொடுத்துச் செய்த வினையால்
பெரிய பொருள்கருது வாரே—விரிபூ
விராஅம் புனலூர வேண்டயிரை விட்டு
வராஅஅல் வாங்கு பவர்.

4 இசைவ கொடுப்பதூஉ மில்லென்ப தூஉம்
வசையன்று வையத் தியற்கை—அஃதன்றிப்
பசைகொண் டவனிற்பப் பாத்துண்ணா னாயின்
நசைகொன்றான் செல்லுலக மில்.

5 அற்றாக நோக்கி யறத்திற் கருளுடைமை
முற்ற வறிந்தார் முதலறிந்தார்—தெற்ற
முதல்விட் டஃதொழிந்தா ரோம்பா வொழுக்கம்
முயல்விட்டுக் காக்கை தினல்.

6 சிறந்த நுகர்ந்தொழுகுஞ் செல்வ முடையார்
அறஞ்செய் தருளுடைய ராதல்—பிறங்கல்
அமையொடு வேய்கலாம் வெற்ப வதுவே
சுமையொடு மேல்வைப்பா மாறு.

7 வழங்கலுந் துய்த்தலுந் தேற்றுதான் பெற்ற
முழங்கு முரசுடைச் செல்வம்—தழங்கருவி
வேய்முற்றி முத்துதிரும் வெற்ப வதுவன்றோ
நாய்பெற்ற தெங்கம் பழம்.

8 சேர்ந்தா ரொருவனைச் சோர்ந்தொழுகப் பட்டவர்
தீர்ந்தாராக் கொண்டு தெளியினும்—தேர்ந்தவர்க்குச்
செல்லாமை காணுக்காற் செல்லும்வா யென்னுண்டாம்
எல்லாம்பொய் யட்டூணே வாய்.

9 புன்சொல்லு நன்சொல்லும் பொய்யின் றுணர்கிற்பார்
வன்சொல் வழியராய் வாழ்தலு முண்டாமோ
புன்சொல் விடர்ப்படுப்ப தல்லா லொருவனை
இன்சொ விடர்ப்படுப்ப தில்.

10 நன்கொன் றறிபவர் நாழி கொடுப்பவர்க்
கென்று முறுதியே சூழ்க எறிதிரை
சென்றுலாஞ் சேர்ப்ப வதுபோல நீர்போயும
ஒன்றிரண்டாம் வாணிக மில்.

11 வழங்கார் வலியிலார் வாய்ச்சொல்லும் பொல்லார்
உழந்தொருவர்க் குற்று றுதவலு மில்லார்
இழந்ததில் செல்வம் பெறுதலு மின்னா
பழஞ்செய்போர் பின்று விடல்.

12 முறைதெரிந்து செல்வர்க்கு நல்கூர்ந்த வர்க்கும்
இறைதிரியா னேரொக்கல் வேண்டும்—முறைதிரிந்து
நேரொழுகா னாயி னதுவா மொருபக்கம்
நீரொழுகப் பாலொழுகு மாறு.

13 தோற்றத்தாற் பொல்லார் துணையிலர் நல்கூர்ந்தார்
மாற்றத்தாற் செற்று ரெனவலியார்—ஆட்டியக்கால்
ஆற்று தவராழுத கண்ணீ ரவையவர்க்குக்
கூற்றமாய் வீழ்ந்து விடும்.

14 வினைப்பய னொன்றின்றி வேற்றுமை கொண்டு
நினைத்துப் பிறர்பனிப்பச் செய்யாமை வேண்டும்
புனப்பொன் னவிர்சுணங்கிற் பூங்கொம்ப ரன்னாய்
தனக்கின்னா வின்னா பிறர்க்கு.

15 ஆறாச் சினத்த னறிவிலன் மற்றவனை
மாறி யொழுக றலையென்ப—ஏறி
வளியாற் றிரையுலாம் வாங்குநீர்ச் சேர்ப்ப
தெளியானைத் தேற்ற லரிது.

16 பொல்லாத சொல்லி மறைந்தொழுகும் பேதைதன்
சொல்லாலே தன்னைத் துயர்ப்படுக்கும்—நல்லாய்
மணலுண் முழுகி மறைந்து கிடக்கும்
நுணலுந்தன் வாயாற் கெடும்.

17 கெடுவ லெனப்பட்டக் கண்ணுந் தனக்கோர்
வடுவல்ல செய்தலே வேண்டும்—நெடுவரை
முற்றுநீ ராழி வரையகத் தீண்டிய
கற்றேயுந் தேயாது சொல்.

18 பயனோக்கா தாற்றவும் பாத்தறிவொன் றின்றி
இசைநோக்கி யீகின்றா ரீ[illegible]போல்
ஒலித்துப் பாயு மலைகடற் றண்சேர்ப்ப
கூலிக்குச் செய்துண்ணு மாறு.

19 நினைத்த திதுவென்றந் நீர்மையை நோக்கி
மனத்த தறிந்தீவார் மாண்டார்—புனத்த
குடிஞை யிரட்டுங் குளிர்வரை நாட
கடிஞையுட் கல்லிடுவா ரில்.

20 அடுத்தொன் றிரந்தார்க்கொன் றீந்தாரைக் கொண்டார்
படுத்தேழை யாமென்று போகினும் போக
அடுத்தற லைம்பாலா யாவர்க்கே யானுங்
கொடுத்தேழை யாயினா ரில்.

21 பல்லாண்டு மீண்டிப் பழுதாய்க் கிடந்தது
வல்லான் றெரிந்து வழங்குங்கால்—வல்லே
வளநெடிது கொண்ட தரூஉ தருமோ
குளநெடிது கொண்டது நீர்.

22 கரப்புடையார் வைத்த கடையு முதவா
துரப்புடை மன்னர்க்கே துப்புரவ தல்லால்
நிரப்பிடும்பை மிக்கார்க் குதவவொன் றீதல்
சுரத்திடைப் பெய்த பெயல்.

23 இம்மைத் தவமு மறமு மெனவிரண்டும்
தம்மை யுடையா ரவற்றைச் சலமொழுகல்
இம்மைப் பழியேயு மன்றி மறுமையும்
தம்மைத்தா மார்க்குங் கயிறு.

24 கன்றி முதிர்ந்த கழியப்பன் ஞள்செயினும்
ஒன்றுஞ் சிறியார்க ணென்ஞனுந் தோன்றுவாம்
ஒன்றுய் விடினு முயர்ந்தார்ப் படுங்குற்றம்
குன்றின்மே லிட்ட விளக்கு.

25 தெரியா தவர்தந் திறனில்சொற் கேட்டால்
பரியாதார் போல விருக்க—பிரிவில்லா
வம்பலர் வாயை யவிப்பான் புகுவாரே
அம்பலந் தாழ்க்கூட்டு வார்.

26 ஆய்ந்த வறிவின ரல்லாதார் பல்லுரைக்குக்
காய்ந்தெதிர் சொல்லுபவோ கற்றறிந்தார்—தீந்தேன்
முசுக்குத்தி நக்கு மலைநாட தம்மைப்
பசுக்குத்திற் குத்துவா ரில்.

27 காழார மார்ப கசடறக் கைகாவாக்
கீழாயோர் செய்த பிழைப்பினை—மேலாயோர்
உள்ளத்துக் கொண்டுநேர்ந் தூக்கல் குறுநரிக்கு
நல்லநா ராயங் கொளல்.

28 அடங்கி யகப்பட்ட வைந்திணைக் காத்துத்
தொடங்கிய மூன்றினான் மாண்டீண்—டடம்பொழியச்
செல்லும்வாய்க் கேமஞ் சிறுகாலைச்செய்தாரே
கொல்லிமேற் கொட்டுவைத் தார்.

29 அறஞ்செய் பவர்க்கு மறமுழி நோக்கித்
திறந்தெரிந்து செய்தக்காற் செல்வுழி நன்றும்
புறஞ்செய்யச் செல்வம் பெருகு மறஞ்செய்ய
அல்லவை நீங்கி விடும்.

30 முற்பெரிய நல்வினை முட்டின்றிச் செய்யாதார்
பிற்பெரிய செல்வம் பெறலாமோ—வைப்போ
டிகலிப் பொருள்செய்ய வெண்ணியக்கா லென்னும்
முதலிலார்க் கூதிய மில்.

31 அங்கண் விசும்பி னகனிலாப் பாரிக்கும
திங்களுந் தீங்குறுதல் காண்டுமால்—பொங்கி
அறைப்பா யருவி யணிமலை நாட
உறற்பால யார்க்கு முறும்.

32 உணற்கினிய வின்னீர் பிறிதுழியில் லென்னுங்
கிணற்றகத்துத் தேரைபோ லாகார்—கணக்கினை
முற்றப் பகலு முனியா தினிதோதிக்
கற்றலிற் கேட்டலே நன்று.

33 உலப்பி லுலகத் துறுதியே நோக்கிக்
குலத்தடக்கி நல்லறங் கொள்ளார்க் கொளுத்தல்
மலைத்தழு துண்ணுக் குழவியைத் தாயர்
அலைத்துப்பால் பெய்து விடல்.

34 தெற்ற வொருவனைத் தீதுரை கண்டக்கால்
இற்றே யவனைத் தெளியற்க—மற்றவர்
யாவரே யாயினு நன்கொழுகார் கைக்குமே
தேவரே தின்னினும் வேம்பு.

நாமகத்தா [illegible]
நாணகத்துத் [illegible] நன்கொழுகா ராயினென
மானமர் கண்ணாய் மறந்தும் பரியலசால்
கானகத் துக்க நிலா.

36 பெரியநட் டார்க்கும் பகைவர்க்குஞ் சென்று
திரிவின்றித் தீர்ந்தார்போற் சொல்லி யவருள்
ஒருவரோ டொன்றி யொருபபடா தாரே
இருதலைக் கொள்ளியென் பார்.

37 பெரியாாக்குச் செய்யுஞ சிறப்பிணைப் பேணிச
சிறியாாககுச செய்து விடுதல்—பொறிவண்டு
பூமே லிசைமுரலு மூா வதுவன்றே
நாய்மேற் றவிசிடு மாறு.

38 நிறையான் மிகுகல்லா நேரிழை யாளைச
சிறையா னகபபடுதத லாகா—அறைகூய்
வருந்த வலிதினின் யாப்பினு நாய்வால
இருநதுத லெனறுமோ வில.

39 பூத்தாலுங் காயா மரமுள மூத்தாலும
நன்கறியார் தாமு ளனியுளர்—பாததி
விளைத்தாலு நாறுத விததுள பேதைக்
குரைத்தாலுந தோன்றா துணாவு.

40 தங்குற்ற நீக்கில ராகிப் பிறாகுற்றம
எங்கேனுந தீாத்தற் கிடைப்புகுதல்—எங்கும்
இயலுலகில் வெள்ளாடு தன்வளி தீரா
தயல்வளி தீர்த்து விடல்.

41 நாடி நமரெனறு நன்குபுறந் தந்தாரைக்
கேடு பிறரொடு சூழ்தல் கிளர்மணி
நீடிகல் வெறுப்ப நினைப்பின்றித் தாமிருந்த
கோடு குறைத்து விடல்.

# பழமொழியுரை.

பழமை பண்புப்பெயர், மொழி செயப்படுபொருள் விகுதியாகிய ஐ புணர்ந்து கெட்டுநின்ற தொழிலடியாகப் பிறந்தபெயர். இது காரணவிடுகுறிப் பெயராயினும், எழுத்தினலாகிய சொல்லை இடுகுறி மாத்திரையா யுணர்த்திநின்றபெயர்; இது பெயர் மாத்திரையில் நில்லாமல் இங்குத் தன்னாலாகிய சொற்றொடருக்காதலால் கருவியாகுபெயர். பழமை மொழி ஆகிய இவ்விரண்டுசொல்லில் பழமை என்பதோடு மொழி பண்புத்தொகை நிலைத்தொடராகப்புணர்ந்தது. மொழி-மொழியப்படுவதென்பதுபொருள்.

1. (இ-ள்.) வைத்ததனை-(ஒருவர்தாம்தேடி) சேமித்து வைத்தபொருளை, வைப்பென்று - (பின் உதவும்) நிதியென்று, உணரற்கணென்றிருக்கக்கடவர், அதனை - சேமித்து வைத்தபொருளை, தாம் துய்த்து - தாமும் அநுபவித்து, வழங்கி - வாழ்ந்து, இருபாலும்-இம்மை மறுமை இரண்டுக்கு முரிய, அத்தக-அச்செயலுக்குத் தகுதியாக, தக்க உழி - தகுந்த இடத்தை (சற்பாத்திரத்தை), நோக்கி-ஆராய்ந்து, அறம்செய்யின் - ஈதலாகிய அறத்தையும் செய்வராயின், அஃது அனறே - அவ்வொழுக்கமே, எய்ப்பினில் - (தமக்கு) தளர்ச்சிவந்தகாலத்தில், வைப்பு என்பது - (உதவியாகும்) நிதியென்று சொல்லப்படுவது.—எ-று.

கருத்து :—ஒருவனுக்கு வறுமைவந்தகாலத்தில் உதவுவது பத்திரப்படுத்திவைத்தபொருள் அன்று. அறத்தின்வழிச் செலவிட்ட பொருளேயாம்.

வைத்தது - இறந்தகாலவினையாலணையும் பெயர். துய்த்து-இறந்தகாலவினையெச்சம், பகுதி - துய். வைப்பு - தொழிலாகுபெயர், வழங்கல் - சஞ்சரித்தல். பால் - நிலம்; அது உலகத்துக்காயிற்று. தக்குழி என்பதில் தக்க என்னும் பெயரெச்சத்தீறு தொகுக்கப்பட்டது. உழி - இடம்; அது ஏற்போர்மேல் நின்றது. தீயோர்க்கு ஈந்தால் அப்பொருளால் அவர் செய்யுந் தீவினைப்பயன் ஈந்தோனையுஞ் சார்தலால் தக்குழிநோக்கி என்றார். எய்ப்பு - தொழிற்பெயர், பகுதி - எய். தக செயவெனெச்சம். உம்மை முற்று.

2. (இ-ள்) மாற்று இன்றி - தடை இல்லாமல், அஞ்சும்-அஞ்சப்படும், பிணி - நோயும், மூப்பு - வார்த்திகமும், அரு கூற்றுடன்-

தடுத்தலரிய யமனுடே, இயைந்து - கூடி, துயக்கு - (அறிவுவேறு படுதலாகிய) மயக்கத்தினால், துஞ்சவரும்-இறக்கும்படி வரும், (ஆதலால்) தோற்றம் - பிறப்பதற்கு, அரிது ஆய - அரியதாகிய, மக்கள் பிறப்பினால் - மக்கட் பிறப்புப்பெற்றதினால், ஆற்றும் துணையும்-கூடிய மட்டும், அறம் செய்க-(ஒருவர்) அறத்தைச் செய்யக்கடவர்.

கருத்து :—நோயும் மூப்பும் மரணமும் வரும் ஆகையால் பெறுதற்கரிய மக்கட்பிறப்பைப் பெற்றவர் தம்மாற் கூடியமட்டும் தருமஞ்செய்யவேண்டு மென்பது.

தோற்றம் என்பதனீற்றில் நான்கனுருபும், துயக்கு என்பதனீற்றில் மூன்றனுருபும் தொகுத்தல் பெற்றன. தோற்றம் - தொழிற்பெயர், தோன்று - பகுதி, அம - தொழிற்பெயர் விகுதி, னகரம் றகரமானதும் உகரக்கேடும சந்தி. மக்கள்-பன்மை குறித்தேவரும் பல்லோர் படர்க்கைப்பெயர். மக்கட்பிறப்பு - வினைமுதலின்கண் வந்த தொழிற் பண்புத்தற்கிழமைப் பொருளதாகிய ஆறும் வேற்றுமைத் தொகையாதலால் ளகரந்திரிந்தது. மக்கட்பிறப்பித்தல் என வரின் செயப்படுபொருளின்கண் வந்த அப்பொருளதாகிய ஆறும் வேற்றுமைத் தொகையென்க. இவ்விரு தொகைகளிலும் உயர் திணைப் பெயராயினும் ளகரம் திரிந்தேவரும் : ஏகாரம் - தேற்றம். வரும் என்பதற்கு எழுவாய் பிணி மூப்பு எனக. மாற்று-முதனிலைத் தொழிற்பெயா. இன்றி எதிர்மறைக்குறிப்பு வினையெச்சம்.

**3.** (இ-ள்.) விரி பூ-மலர்ந்த மலர்கள், விராம் - கலந்த, புனலூர - நீர்வளமுடைய மருத நிலத்தலைவனே, சிறியபொருள்கொடுத்து - (ஒருவர்க்கு) சிறியபொருளைக்கொடுத்து, செய்தவினையால்-செய்துகொண்ட அறத்தொழிலால், பெரியபொருள் - (மறுமைக்கு) பெரியபொருளையும் பெறுந்தன்மையை, கருதுவாரே - நினைக்கின்ற அறிவுடையவரோ, வேண்டு அயிரை-விரும்பும் நுண்ணிய பொருளை, விட்டு - தூண்டிலில் கோத்துவிட்டு, வரால்வாங்குபவர் - வரால் மீனைப்பிடிப்பவரோ டொப்பாவார்.—எ-று.

கருத்து :—சிறிய அறத்தைச்செய்து மறுமையில் பெரிய இன்பத்தைப் பெறுகின்றவர் தூண்டிலில் அற்ப இரையைக் கோத்துவிட்டுப் பெரிய வரால் மீனைப் பிடிப்பவரை ஒப்பார்.

அயிர் என்றது இங்குச் சிறிய தேள்ளடைமீனை. "தேள்ளடையைப்போட்டு வராலை இழுத்தல்" என்பது தற்காலப்பழமொழி. அளபெடை இரண்டும் செய்யுளிசை நிறைக்கவந்தன ஆயினும் முதல் அளபெடை மூன்றுமாத்திரையாயும், இரண்டாவது நான்கு

மாத்திரையாயும் வந்தன. விராவும் என்னும் பெயரெச்சம் ஈற்றுயிர் மெய்கெட்டு வந்ததுதொகுத்தல் ; நன் - வினை-சூ-22. அயிர்-நுண்மை. இது நுண்ணிய பொருளை யுணர்த்தலால் பண்பாகுபெயர்.

4. (இ-ள்) இசைவ - ஒருவன் (தனக்கு) இயலும் பொருள்களை, கொடுப்பதும் - (ஏற்போர்க்கு) கொடுத்தலும், (இசையாதனவற்றை) இல் என்பதும்-இல்லை என்று சொல்லுதலும், வசை அன்று - பழிப்பல்ல, வையத்து - உலகத்தாருக்குரிய, இயற்கை - இயற்கையேயாம், அஃது அன்றி - அவ்வகை அல்லாமல், பசைகொண்டவன் - (தன்னிடத்து) அன்புவைத்தவன், நிற்ப - (பசியால்வருந்தி) நிற்கையில், பாத்து-(அவனுக்கு) பகுத்துத்தந்து, உண்ணான் ஆயின்- உண்ணுதலைச் செய்யானானால், நசை - (தானுண்ணுமுணவின்மேல் வைத்த) விருப்பத்தினால், கொன்றான் - (அவனை) வருத்தினவனான், செல் உலகம் - இனி செல்லுதற்குரிய மறுமையுலக இன்பமும், இல் - (அதனால்) இலனாவான்.—எ-று.

கருத்து :—ஒருவர் தம்மாற் கொடுக்கக்கூடியதை இரப்போர்க்குக் கொடுத்தலும் கூடாததை இல்லையென்று சொல்லுதலும் உலகத்தில் இயற்கையே; ஆனால் தன்னைவிரும்பி வந்தடைந்தவன் பசியால் வருந்தியிருக்க உண்பவனுக்கு மறுமையின்பம் இல்லை என்பது.

இசையாதன சொல்லெச்சம். அளபெடை யிரண்டில்முன்னது இன்னிசை நிறைக்கவும், பின்னது செய்யுளிசை நிறைக்கவும் வந்தன. அன்று ஒன்றன்படர்க்கைக் குறிப்புவினைமுற்று, இங்கு பலவின்படர்க்கைக்குரியதாயினும் மற்ற பாலிடங்களிலும் வரும். இது புதியனபுகுதல். அஃதென்பது கொடுப்பதையும், இல் என்பதையும் சுட்டலால் தொகுதியொருமை. நிற்ப காரண காரியப் பொருளதல்லாமையால் நிகழ்கால வினையெச்சமென்க. பாத்து இறந்தகாலவினையெச்சம், பா பகுதி, (பகு என்பதன் மரூஉ)த் சந்தி, த் இறந்தகால இடைநிலை, உ வினையெச்சவிகுதி.

5. (இ-ள்.) அறத்திற்கு - அறத்திற்கு, அருள் உடைமை- அருளை உடையராதல், அற்றுகநோக்கி-அவ்வறத்தின் தன்மையதாக ஆராய்ந்து, முற்ற அறிந்தார் - நிரம்ப அறிந்தவர்கள், முதல் அறிந்தார் - (அறத்தின்) காரணம் அறிந்தவராவார், தெற்ற - தெளிய, முதல் - அறத்துக்குக் காரணமாகிய அருளை, விட்டு - விட்டு, அஃது ஒழிந்தார் - அவ்வருளை நீங்கினவரது, ஓம்பா ஒழுக்கம் - (அருளை) காவாத அவ்வொழுக்கமுடையனது, முயல்விட்டு - முயலைவிட்டு, காக்கை தினல் - காக்கையைத் தின்னுதலோடொக்கும்.—எ-று.

கருத்து :—சிறந்த அறத்துக்குக்காரணம் அருளாதலின் அதை விட்டு மற்றை அறங்களைச்செய்தல் முயலைவிட்டுக் காக்கையைத் தின்றுதலோடொக்கு மென்பது.

அற்று - அன் என்னும் இடைச்சொலடியாகப் பிறந்த ஒன்றன் படர்க்கைக் குறிப்புவினையாலணையும்பெயர். மூற்ற - காரியப்பொருட்டாகிய எதிர்காலச் செயவெனெச்சம். தெற்ற நிகழ்காலச் செயவெனெச்சம், பகுதி - தெற்று. முதல் இரண்டும் பண்பாகு பெயர்கள். காக்கை-முயல் இரண்டும் முதலாகுபெயர்கள். முயல் விட்டுக்காக்கைதினல் என்பது அக்காலத்துப் பழமொழி போலும்.

6. (இ-ள்.) பிறங்கல் - மலையில், அமையொடு - உட்டொளையில்லா மூங்கிலோடு, வேய் - உட்டொளையுள்ள மூங்கில், கலாம்- சேர்ந்துள்ள, வெற்ப - மலைநாட்டரசனே, சிறந்த - சிறந்த போகங்களை, நுகர்ந்து - அநுபவித்து, ஒழுகும் - நடக்கின்ற, செல்வம் உடையார் — பொருட்செல்வம் உடையவர், அறம்செய்து அருளுடையராதல் - (யாவரிடத்தும்) அறஞ்செய்து அருளுடையராயிருக்கக்கடவர், அதுவே - அவ்வருளுடையராதலே, சுமையொடு-பொன் சுமையின்மேல், மேல் - மேன்மையாகிய மாணிக்கத்தை, வைப்பு ஆம் ஆறு - வைத்தல் ஆகிய விதம்போலும்.—எ-று.

கருத்து :—செல்வமுடையார் சிறந்த போகங்களை அநுபவித்தலேயன்றி யாவரிடத்தும் கிருபையுடையவரா யிருக்கக்கடவர். அப்படியிருத்தல் பொன்குவியலின்மேல் மாணிக்கத்தை வைத்தலோடொக்கு மென்பது.

சிறந்த - இறந்தகாலப் பலவின்படர்க்கை வினையாலணையும் பெயர். சிறந்த+நுகர்ந்து இரண்டாம்வேற்றுத் தொகை. விரிந்தால் சிறந்தவற்றை நுகர்ந்து எனவிரியும். இவ்வுருபு அடையப்படு பொருளது. ஆதல் வியங்கோள் வினைமுற்று. ஆ - பகுதி, து - சாரியை, உகரக்கேடுசந்தி, அல் வியங்கோள்விகுதி. பிறங்கல் - இருக்குமிடத்திலும் தூரதேசங்களிலும் விளங்குதலுடையதென்னும்பொருளில் தொழிலாகுபெயர். கலாவும், ஆகும் என்னும் செய்யுமென்னும் பெயரெச்சங்கள் ஈற்றுயிர் மெய்கெட்டுக் கலாம், ஆம் என நின்றன. சுமை - சுமக்கப்படுவது என்னும்பொருளில், சும - பகுதி, ஐ செயப்படுபொருள் விகுதி, பகுதியீற்று அகரக்கேடு கடைக்குறை. மேல் பண்பாகுபெயர். வைப்பு தொழிற்பெயர். வை-பகுதி, ப்-சந்தி, பு - தொழிற்பெயர் விகுதி.

7. (இ-ள்.) தழங்கு - முழங்குகின்ற, அருவி - அருவியையுடைய, வேய்முற்றி - மூங்கில்கள் முதிர்வதினால், முத்து உதிரும்-

முத்துகள் உதிர்கின்ற, வெற்ப - மலைநாட்டரசனே, வழங்கலும்-(அறத்தின்பொருட்டுப் பிறர்க்கு) கொடுத்தலும், துய்த்தலும்-தான் அனுபவித்தலும், தேற்றாதான் - அறிந்துசெய்யாதவன், பெற்ற - அடைந்த, முழங்கு-ஒலிக்கின்ற, முரசுடை - முரசையுடைய, செல்வம் - செல்வமாகிய, அது - அர்த்தப்பொருள், நாய் பெற்ற - நாய் அடைந்த, தெங்கம்பழம் அன்றே - தெங்கின் பழத்தையே ஒக்கும்.

கருத்து :—ஒருவன் பிறர்க்கும் தனக்கும் பயன் படுத்தாமல் வைத்திருக்கும் செல்வம் நாய்க்கு அகப்பட்ட தேங்காய்போலும்.

பெருஞ்செல்வர்கள் மாளிகையில் காலை, நன்பகல், மாலைகளில் காலந்தவறாமல் முரசுகொட்டலுக்குக் காரணம் அப்பெருஞ்செல்வமாதலின அம்முரசை உடைமையாக்கி முரசுடைச் செல்வமெனறார். செல்வம் - விபவம், இது தனக்குக் காரணமாகிய பொருளுக்காதலால் காரியவாகுபெயர். துய்த்தல - தொழிற்பெயர், துய்-பகுதி, த சந்தி, தல தொழிறபெயர் விகுதி, து பகுதி யெனக்கொள்ளின் யகரமில்லாமல துத்தல எனவரும். தேற்றாதான் - எதிர்மறை ஆண்பாற்படர்க்கை வினையாலணையும்பெயர். தேற்று பகுதி, இப பகுதி தன்வினை பிறவினை இரண்டிற்கும பொதுவாயினும் இங்குத தன்வினை. முற்றி எனபது காரணபபொருட்டாகிய செயவெனச் சத்திரிபு அனறே-அன்று என்பதும் ஓ என்பதும் எதிர்மறை யாதலின் தேற்றப்பொருள் படநின்ற புணர்ச்சி. அருவி என்பது வெற்புக்கு விசேடணமாதலின் அருவிவெற்ப என்பது இரண்டாம் வேற்றுமையுருபும் பயனுமுடன் றொக்கதொகை.

8. (இ-ள்.) சேர்ந்தாரொருவனை - தாம்சேர்ந்தவராகிய ஒருவனை, சேர்ந்து - பிரியாதிருந்து, ஒழுகப்பட்டவர்-நடக்கும் இயலபுடையவர், தீர்ந்தாராக - முடிந்த உறவினராக, கொண்டு-துணிந்து, தெளியினும் - தேறியகாலத்தும், தேர்ந்தவர்க்கு - தேறினவர்க்கு, செல்லாமை - (இல்வாழ்க்கை) இனிது நடவாமையை, காணுக்கால்-கருதாவிட்டால், செல்லும்வாய்-(அவ்வில்வாழக்கை) இனிது நடப்பதற்குக் காரணம், என் உண்டு - யாதுளது, எல்லாம்பொய்-(முன் ஒழுகிய ஒழுக்கம்) எல்லாம் பயன்படாதனவாம், அட்டு-(வேறுமுயற்சியால் கிடைத்தபொருளை) சமைத்து, ஊணே - உண்ணுதலே, வாய் - உண்மையாகிய காரணமாகும்.—எ-று.

கருத்து :—தனை இல்லாதவனை அடுத்து ஒழுகினும், அவ்வொழுக்கம் பயன் தாராதலால், பயன்தரும் வேறுமுயற்சிசெய்து உயிர்வாழவேண்டு மென்பது.

ஒழுகப்பட்டவர் - (கடந்தார் எனப் பொருள்படும் கடக்கப் பட்டார் என்பதுபோன்ற) செய்வினையாகிய வினையாலணையும் பெயர். தீர்ந்தாராக்கொள்ளல் இனி வேறொருவரை அடுப்பதில்லையென் றுகொள்ளுதல், தெளியினும் என்னும் உம்மை உயர்வுசிறப்பு. செல்லாமை - எதிர்மறைத் தொழிற்பெயர். வாய் - வழி, அதுகார ணத்தையுணர்த்தியது. என் விளிப்பெயர், ஏ-பிரிநிலை, காணுக்கால்- செயின் என்னும் வாய்பாட்டு வினையெச்சத்தைச் சார்ந்த எதிர்மறை வினையெச்சம். காண் பகுதி, ஆ எதிர்மறை விகுதி, அனைத்துமொ ருபகுதி, க் சந்தி, கால் எதிர்கால வினையெச்சவிகுதி, ஆம் அசை. அட்டு அடு என்னும் பகுதி விகாரப்பட்டுவந்த இறந்தகால வினை யெச்சம்.

9. (இ-ள்.) புன்சொல்லும்-இழி சொல்லின் பயனையும், நன் சொல்லும் - இனிய சொல்லின் பயனையும், பொய் [illegible] மையாக, உணர்கிற்பார் - அறியவல்லவர்கள், வன்சொல் [illegible]- கடுஞ்சொல்சொல்லும் நெறியையுடையவராய், வாழ்[illegible] வாழ்தலும், உண்டாமோ - அவருக்கு உண்டாகுமோ, [illegible] இழி சொல்லானது, ஒருவனை - சொன்ன ஒருவனை, இடர்ப்படுப் பதல்லால் - துன்பப்படச்செய்வதல்லாமல், இன்சொல் - இன்சொல் லானது, இடர்ப்படுப்பதில்-துன்பப்படச் செய்வதில்லை.—எ-று.

கருத்து:—கடுஞ்சொல்லையும் இன்சொல்லையும் பேசுதலால் விளையும்தீமை நன்மைகளை ஆய்ந்தறிந்த மேலோர் கடுஞ்சொல்லைப் பேசார் என்பது.

புன்சொல் - பண்புத்தொகை, விரித்தால் புன்மையாகியசொல் எனவிரியும். இன்று இன்றியென்னும் எதிர்மறைக்குறிப்பு வினை யெச்சத்திரிபு. உணர்கிற்பார் எதிர்காலப் பலர்பால் வினையாலணை யும்பெயர், கில் ஆற்றலுணர்த்தும் விகுதி, ஆற்றல் - வல்லமை. ஆ எதிர்மறை. இடர்ப்படுப்பது இரண்டும் எதிர்காலத் தொழிற்பெயர். அல்லால் எதிர்மறைக்குறிப்பு வினையெச்சம்.

10. (இ-ள்) எறிதிரை - (கடலினது) எறிகின்ற அலைகள், சென்று உலாம் - சென்று உலாவுகின்ற, சேர்ப்ப - துறையையுடை யானே, நன்கு ஒன்று - ஒருவர்செய்த உபகாரத்தை, அறிபவர் - மற வாதிருக்கக் கருதுவோர், நாழிகொடுப்பவர்க்கு - நாழி தானியம் கொடுப்பவர்க்கு, என்றும் - எக்காலும், உறுதியே - (அவருக்குநன் மை) பொருந்துதலேயே, ஆழ்க - என்னைக்கடவான், அதுபோல அவ்வாறு [illegible] கருதலபோல, சீர் [illegible]-(வண்டியிற்செ

ல்லேயன்றி) கடலில் கப்பலேறிச் சென்றும், ஒன்று-ஒருபொருள், இரண்டு ஆம் - இரண்டு பொருளாகின்று, வாணிகம் - வர்த்தகமும், இல் - பயன் தருதலில்லை.—எ-று.

கருத்து:—சிறிது உபகாரம் செய்தவர்க்கும் நன்மையே கருத வேண்டும், அவ்வாறு கருதல் பயன் தருதல்போலக் கப்பலேறிச் சென்றுசெய்யும் வியாபாரமும் பயன்தாரதென்பது.

நன்கு பண்புப்பெயர், விகுதி கு. நாழி முகத்தலளவையாகு பெயர்; இதுசிறுமையை யுணர்த்தி வந்த குறிப்புப்பெயர். எறிதிரை-வினைத்தொகை. உலாவும் என்னும் எதிர்காலப்பெயரெச்சம் உலா ம் என ஈற்றுயிர் மெய்கெட்டு வந்தது. நீர் போயும் ஏழாம் வேற்று மைத் தொகை. ஒன்று, இரண்டு பொருள்களை யுணர்த்தலால் எண்ணலளவை யாகுபெயர்கள். உம்மைகளிரண்டில் முன்னது முற்று, பின்னது இறந்தது தழீஇய எச்சவும்மை.

11. வழங்கார் (அறத்தின்பொருட்டு) ஈயாதவர், வலியில்லார் - (அறிவின்) வலியில்லாதவர், வாய்ச்சொல்லும் பொல்லார்-வாயி னுற்சொல்லும் சொல்லும் கடினமானவர், ஒருவர்க்கு உற்றுல்-ஒரு வர்க்கு இடர்வந்தால், உழந்து உம் - வருந்தியாயினும், உதவல்-உபக ரித்தல், இல்லார் - இல்லாதவர், இன்னுர் - ஆகிய இத்தன்மையான வர், இழந்தது இல் - கேடில்லாததாகிய, செல்வம் - செல்வத்தை, பெறுதலும் - அடைதலும், பழம்செய்-முன்னே உரம்பெற்றுவந்த பழைய வயல்நிலம், போர் - போரிடும்படி, பின்று - (அவ்வாறு உரஞ் செய்யாத) பிற்காலத்தில், விடல் - (கதிர்களை) விடுதலோடு ஒக் கும்.—எ-று.

கருத்து:—கொடாதவரும் இன்சொல் பேசாதவரும் பிறர்க்குத் துன்பம் வந்தபோது உபகரியாதவருமாகிய தீயோர் பெருஞ்செல் வத்தை முன்செய்த நல்வினையால் பெற்றிருத்தல் இப்பொழுது கொழுமை செய்தல் இல்லாத வயல்நிலம் முன்பெற்றிருந்த கொழு மையால் அதிக விளைவு தருதல்போலும் என்பது.

வாய்ச்சொல் என்பது வாயாற் சொல்லும்சொல், வாயினின் றுண்டாகுஞ்சொல், வாயினது சொல் என மூன்றுபொருளாய் மயங்கும். பொல்லார் பண்படியாகப்பிறந்த பெயர், பகுதி பொல் லு. இழந்தது இறந்தகாலத்தொழிற்பெயர், இல் செல்வம் பண் புத்தொகை, விரித்தால் இன்மையாகிய செல்வம் எனவரும். இன் னர் பண்படியாகப்பிறந்த பலர்பாற் பெயர்; பகுதி இன். பின்று [illegible]ாலப்பெயர், [illegible] பொருள் உணர்த்தும் விகுதி.

**12.** (இ-ள்.) முறைதெரிந்து - (அரசன்) முறைமையை அறிந்து, செல்வர்க்கும் - செல்வமுடையவர்க்கும், நல்கூர்ந்தவர்க்கும் - வறுமையுடையவர்க்கும், இறை - சிறிதும், திரியான் - அம் முறைமையில் மாறுபடாதவனாகி, நேர் ஒக்கல்வேண்டும் - நேர்மையாக ஒத்து நடத்தல்வேண்டும், முறைதெரிந்து - முறைமையைத் தெரிந்து, நேர் ஒழுகான் ஆயின் - நேர்மையாக நடவான் ஆனால், அது - அந்நேர்மையாக ஒழுகாமையானது, ஒருபக்கம் நீர் ஒழுக - (தாயினது மார்பின் ஒருபக்கத்தினின்று ஒரு குழந்தையின் வாயிலே) நீர் ஒழுகாநிற்க, பால் ஒழுகும் - (அம்மார்பின் மறுபக்கத்தினின்று மற்றொரு குழந்தையின்வாயிலே) பால் ஒழுகுகின்ற, ஆறு ஆம் - விதத்தை ஒக்கும் —எ-று.

கருத்து:—அரசன் செல்வர்க்கும் தரித்திரர்க்கும் முறைமையினின்றும் மாறுபடாமல் நடுவுநிலைமையாக நடக்கவேண்டும்; அவ்வாறு நடவானாயின் அது தாயினுடைய மார்பின் ஒருபக்கத்திலிருந்து தன் ஒருகுழந்தையின் வாயிலே பாலும், அம்மார்பின் மற்றொரு பக்கத்திலிருந்து தன் மற்றொரு குழந்தையின்வாயிலே நீரும் ஒழுகுகின்ற விதத்தை ஒப்பாகும் என்பது.

நல்கூர்ந்தவர் இறந்தகால வினையாலணையும்பெயர்; நல்கூர் பகுதி, அர் விகுதி, த் இடைநிலை, அ சாரியை, த் வ் சந்தி, த் ந் ஆனது மெலித்தல். இறை என்பதினீற்றில் இழிவு சிறப்பும்மை தொகுத்தல். திரியான் வினைமுற்று வினையெச்சமாய் வந்தது.

**13.** (இ-ள்.) வலியார் - பொருள் முதலியவற்றில் மிகுந்தவர், தோற்றத்தால் - தாம்பிறந்த குடியினால், பொல்லார் - இழிந்தவரையும், துணையிலார் - தம்மைக்காக்கும் துணையில்லாதவரையும், நல்கூர்ந்தார் - தரித்திரரையும், ஆட்டியக்கால் - அலைத்தபோது, மாற்றத்தால் - பேசிய கடுஞ்சொற்களினால், செற்றுசென - தம்மை வருத்தினரென்று, ஆற்றாது - பொறுக்காமல், அவர் - அம்மூவர்களும், அழுத கண்ணீரவை - அழுதகண்ணீர்கள், அவர்க்கு - அவ்வலியவர்களுக்கு, கூற்றமாய் - யமனாய், வீழ்ந்து விடும் - அழித்தேவிடும்.

கருத்து:—பொருள் முதலியவற்றில் மிகுந்தவர் தம்மைவந்து சார்ந்த இழிகுடிப் பிறப்பினரையும் ஆதரவில்லாதவரையும் தரித்திரரையும் கடுஞ்சொற்களைக்கூறி வருத்த அவர்கள் அழுதகண்ணீர் அவ்வலியவரை அழிக்கும் என்பது.

இச்செய்யுளில் "ஏழை அழுதகண்ணீர் கூரியவாளையொக்கும்" என இப்பழமொழி வந்துள்ளமை காண்க. தோற்றம் - பிறப்பு.

இது தொழிற்பெயர், பகுதி - தோன்று: பொல்லார் - பண்படியாகப்பிறந்த குறிப்புவினையாலணையும்பெயர், பொல்லா - பகுதி, ஆர் - பல்லோர் படர்க்கை விகுதி, விகுதி ஆகாரக்கெடு முதற்குறை நல்கூர்ந்தார் - பல்லோர்படர்க்கை இறந்தகாலவினைப்பெயர். இது நல்குரவு என்னும் பெயரடியாகப்பிறந்தது. நல்கூர் பகுதி, த் சந்தி, த் இறந்தகால இடைநிலை, ஆர் - பல்லோர்படர்க்கை விகுதி, தகரம் நகரமானது சந்தி செற்றார் - இறந்தகாலத்தெரிநிலை வினையாலணையும் பெயர், செறு - பகுதி. ஆட்டியக்கால்-செயின் என்னும் வாய்பாட்டைச்சார்ந்த வினையெச்சம். அழுத - இறந்தகாலப் பெயரெச்ச வினை காரணப்பொருட்டாய்க் கண்ணீர் என்னும் காரியப் பெயர்கொண்டது. கண்ணீரவை பலவின் படர்க்கைப்பெயர். பலமுறை அழுதலின் பலவின்பாலாய் நின்றது. கண்ணீர் பகுதி, வை பலவினபடர்க்கை விகுதி, அ சாரியை வீழ்ந்துவிடும் என்னும் செய்யுமென்முற்றில விடு துணிவுப்பொருள் விகுதி.

14. (இ-ள) பொன் அவிர் - பொன் போல்விளங்குகின்ற, சுணங்கின் - தேமலையுடைய, புனம்-பூஞ்சோலையில் உள்ள, பூ கொம்பர் அன்னாய் - பூங்கொம்பை ஒத்தவளே, தனக்கு இன்னா - தனக்குத் துன்பந்தருஞ் செயல்கள், பிறர்க்கு - மற்றவர்க்கும், இன்னா- துன்பஞ் செய்வனவாகும், (ஆதலால்) வினைப்பயன்-(ஒருவன் செய்யத்தொடங்கிய) தொழிலினாலாகிய நற்பயன், ஒன்று இன்றி - சிறிதும் இல்லாமல், வேற்றுமைகொண்டு - பகையினால், நினைத்து-ஆராய்ந்து, பிறர்பனிப்ப - பிறர் நடுங்கும்படி, செய்யாமை வேண்டும்- செய்யாமலிருத்தலே தகுதி

கருத்து:—தனக்குத் துன்பந் தருவன பிறர்க்கும் துன்பந்தரும் எனக்கருதிப் பகையினால், பிறர்க்குத் தீமைசெய்யா திருக்கவேண்டும் என்பது.

ஒன்று என்னும் வரையறைப் பண்புப்பெயர்இங்குச்சிறுமையின் மேலது. கொண்டு கருவிப்பொருளதாகிய மூன்றாம வேற்றுமைச் சொல்லுருபு. பனிப்ப காரியப் பொருட்டாகிய எதிர்காலச் செயவெனெச்சம். வேண்டும் தேற்றப் பொருள் தரும தொழிற்பெயர். பூங்கொம்பு இரண்டாம் வேற்றுமை யுருபும் பயனுமுடன் றொக்கதொகைநிலைத்தொடர். செய்யாமை எதிர்மறைத் தொழிற்பெயர். புனம் என்பதைப் பூங்கொம்பென்பதனோடு கூட்டியுரைக்க. கொம்பர் என்பதுபோலக் கொம்பு என்பது ஆர் போலிபெற்றது. இன்னாமை என்னும் பண்புப்பெயரின் ஈறுகெட்டு நின்ற இன்னா தன் காரணமாகிய வினையையுணர்த்தலின் காரியவாகுபெயர்.

**15.** (இ-ள்) வளியால் - காற்றினால், திரை - அலைகள், கதிகரைகடந்து, உலாம் - உலாவுகின்ற, வாங்குநீர் சேர்ப்ப - வளைகின்ற நீரையுடைய கடற்றுறைவனே, தெளியானை-(அறிவிப்பினும்) தெரிந்துகொள்ளாதவனை, தேற்றல் - தெளிவித்தல், அரிது-முடியாது, (ஆதலால்) ஆறுசினத்தன் - தணியாத கோபமுடையவனும், அறிவிலன் - நன்மை தீமைகளை அறிதலில்லாதவனுமாகிய, அவனை-அவனை, மாறி - நீங்கி, ஒழுகல் - நடத்தல், தலை என்ப-சிறந்த ஒழுக்கம் என்று அறிவுடையவர் சொல்லுவார்.—எ-று.

கருத்து:—தணியாத கோபமுடையவனும் நன்மை தீமைகளை அறியாதவனுமாகிய ஒருவனுக்கு அறிவு விளங்கச் செய்தல் முடியாதாகையால், அவனை நீங்கி நடத்தலே சிறந்த ஒழுக்கம் என்பது.

ஆறு ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். சினத்தன், இலன் பண்படியாகப் பிறந்த பெயர்ப்பகுபதங்கள். இவற்றிற்குப்பகுதி முறையே சினம், இன்மை என்றறிக. அறிவிலன் இனைவழுவமைதி. தலை பண்பாகுபெயர். என்ப என் என்னும் இடைச்சொலடியாகப் பிறந்த எதிர்காலப்பலர்பால்வினைமுற்று. பகரவிகுதியே எதிர்காலத்தையும் பலர்பாலையும் காட்டும். உலாம் ஈற்றுயிர் மெய்கெட்டுவந்த செய்யுமென்வாய்பாட்டுப் பெயரெச்சம், கெடாதாயின் உலாவும் எனவரும். அரிது ஒன்றன்படர்க்கைக்குறிப்பு வினைமுற்று. பகுதி-அருமை. மற்று அசை.

**16.** (இ-ள்.) நல்லாய் - நற்குணமுடையவளே, மணலுள் முழுகி - மணலில் நுழைந்து, மறைந்துகிடக்கும் - மறைந்துகிடக்கின்ற, நுணலும் - தவளையும், தன்வாயால் - தன் ஒலியால், (கெம்பாம்புக்ககப்பட்டு நாசமாகும், (அதுபோல்) பொல்லாத சொல்லிப் புறத்திலே ஒருவர்மேல் குற்றத்தைச்சொல்லி, மறைந்து - (கண்டவிடத்து அவர்க்கு இனியவனாகாமல்) மறைந்து, ஒழுகும்-நடக்கும், பேதை - அறிவில்லான், தன்சொல்லாலே - (பிறரால் வரலல்லாமல்) தன்சொல்லினாலேயே, தன்னை - தன்னை, துயர்படுக்கும் - துன்பத்துக்கு உட்படுத்துவான்.—எ-று.

கருத்து:—தவளை தன்வாயாலே தன்னைத் தின்பவர்க்குத் தான் இரையாவதுபோல மூடன் தன் சொல்லாலேயே தான் துன்பத்தில் அகப்பட்டுக்கொள்வான் என்பது.

பொல்லாத பண்படியாகப்பிறந்த பலவின்பாற் படர்க்கைப்பெயர். பேதை பண்பாகுபெயர். துயர்படுக்கும் படர்க்கையொருமை [illegible]. [illegible] செய்யுமென்முற்று. நல்லாய் பண் [illegible]

யாகப்பிறந்த விளியடைந்த பெண்பாற்பெயர். இச்செய்யுள் ஒரு பெண்ணை முன்னிலையாக்கிச் சொல்லப்பட்டமையால் மகளே முன்னிலை யெனப்படும். மகளே - பெண். வாய் கருவியாகுபெயர். ஏ பிரிநிலை, உம்மை உயர்வு சிறப்பு.

**17.** (இ-ள்.) நெடுவரை - பெரிய சக்கரவாளமலை, முற்று - சூழ்ந்த, நீர் ஆழி - நீர்வளப்பமுள்ள சமுத்திரத்தினால் சூழப்பட்ட, வரை அகத்து - எல்லையினிடத்தில் (பூமியினிடத்தில), ஈண்டிய - சேர்ந்த, கல் - மேருமலையும், தேயும் - தேய்ந்துபோம், சொல் - (ஒருவன் சொல்லிய) நிந்தை, தேயாது - அழியாது, (ஆகையால்) கெடுவல் என பட்டக்கண்ணும் - இவர்க்கு இன்ன நிந்தையைக் கூறுவிட்டால் நான் கெடுவேன் என்று கருதப்பட்ட இடத்தும், தனக்கு ஓர் - தனக்கு ஒரு, வடு அல்ல - பழிப்பு அல்லாத செய்கைகளை, செய்தலே வேண்டும் - அவனுக்குச் செய்தலேதகுதி —எ-று.

கருத்து —நான்படின் மேருமலையும் தேயும் ஒருவன் கூறிய நிந்தையோ அழியாது நிற்கும் ஆகையால் தனக்குக்கேடு வருவதாயினும் பிறனமேல் நிந்தைகூறலாகாது என்பது.

கெடுவல் தன்மையொருமை எதிர்கால வினைமுற்று, கெடு பகுதி, வ் எதிர்கால இடைநிலை, அல் தன்மையொருமை விகுதி, இவ் விகுதி எதிர்கால வினைமுற்றுக்கேவரும். எனப்பட்டக்கண் செயின் என்னும் வாய் பாட்டு வினையெச்சத்தைச்சேர்ந்த செயப்பாட்டு வினையெச்சம். வினையெச்ச விகுதியாகிய கண் இறந்தகாலங்காட்டியது. உம்மை உயர்வுசிறப்பு. வடு காரியவாகுபெயர். அல்ல அன்மை என்னும் பண்படியாகப்பிறந்த எதிர்மறைப் பலவின்படர்க்கைக் குறிப்பு வினையாலணையும்பெயர். முற்று + நீராழி வினைத்தொகை நிலைத்தொடர். ஆழி + வரையகத்து மூன்றாம்வேற்றுமை யுருபும் பயனுமுடன் றொக்க தொகை நிலைத்தொடர். வரை பூமிக்குப் பண்பாகுபெயர். ஈண்டிய - ஈண்டு பகுதி, உகரக்கெடுசந்தி, இன் இறந்தகால இடைநிலை, இடைநிலையின் னகரமெய்கெட்டது தடைக்குறை, யகரமெய் சந்தி, அ பெயரெச்சவிகுதி. கல் கருவியாகு பெயர், இதனிற்றில் உயர்வுசிறப்பும்மை தொகுத்தல்,

**18.** (இ-ள்.) வயமாப்போல் - சிங்கம்பாய்வதுபோல, ஆலித் தப்பாயும் - ஒலியாநின்று அலைகள் பாய்கின்ற, அலைகடல் - அலையினையுடைய கடலினது, தண்சேர்ப்ப - குளிர்ந்த துறையையுடையானே, பயன் - (மறுமையில் உதவும்) பயனை, கோக்கரு - ஆராயமாட்டும், ஆம் [illegible] - [illegible] [illegible] - [illegible] [illegible]

ளானென) பகுத்துணரும் உணர்வு, ஒன்று இன்றி - சிறிதும் இல்லாமலும், இசைநோக்கி - புகழைக்கருதி, ஈகின்றார் - கொடுக்கின்றவருடைய, ஈகை - கொடையானது, கூலிக்கு - (அடையும்) கூலியின்பொருட்டு, செய்து - தொழிலைச்செய்து, உண்ணும் ஆறு-(அதனால் கிடைத்தபொருளால்) உண்ணும் விதம்போலும்.—எ-று.

கருத்து:—மறுமைப்பயனைக் கருதாது புகழின் பொருட்டு ஈவோர் ஈகையானது கூலிக்குவேலைசெய்து உண்ணும் விதமபோலும் என்பது.

சிறுமைப பண்பையுணர்த்தும் ஒனறெனபதனீற்றில் இழிவு சிறப்போடு முற்றுப்பொருளதாகிய உம்மைதொகுத்தலாயிற்று. பகுதது இகழ்கால வினையெச்சத்தினதிரிபு; பகு-பகுதி, (பகு என்பதன் மரூஉ) த சந்தி, த்-இறந்தகால இடைநிலை, உ-வினையெச்சவிகுதி. இன்றி பண்படியாகப்பிறந்த குறிப்பு வினையெச்சம், இல் - பகுதி, அ சாரியை, இ-வினையெச்சவிகுதி, லகர தகரங்கள றகரமானதும் உகரக்கேடும் சந்தி, பகுதியீற்றில சந்தியால்வந்த றகரம் னகரமானது மெலித்தல ; அச்சாரியை யெனனுமல், த எழுததுப்பேறெனவும், இகரவிகுதி யெனனுமல றி-விகுதியெனவுங் கூறினும பொருந்தும். இசை முதனிலைத்தொழிறபெயர். ஈகின்றார் நிகழ்காலவினையாலணையும் பெயா. இவ்வாறு முக்காலத்திலும் தொழிலிடையறாத பொருளைநிகழ்காலததால் கூறுதல்வடநூலார்மதம். எதிர்காலத்தால கூறுதல தமிழ்நூலார் மதம். எல்லாமிருகங்களையும் வெல்லவல்லது சிங்கமாதலால் அதனை வயமா என்றார். வயம்—வெற்றி. ஆலித்தல்-களித்தல், அது இங்கு ஒலித்தலுக்காயிற்று. அலைகடல் வினைத்தொகை நிலைததொடராதலால் வருமொழிககரம் மிகாதாயிற்று. அது பெயராயின் இரண்டாம்வேற்றுமை யுருபும் பயனும் உடன்தொக்கதொகை நிலைத்தொடராகி அலைக்கடலெனக் ககரம் மிகும். குவவுருபு நிமித்தகாரண காரியப்பொருளது.

19. (இ-ள்.) புனத்த - கொல்லையிலுள்ள, குடிஞை - கோட்டான், இரட்டும் - ஒலிக்கும், குளிர்வரைநாட - குளிர்ந்தமலை நாட்டரசனே, தடிஞையுள் - பிட்சாபாத்திரத்தில், கல் இவோர் [illegible] இல்லை, (ஆதலால்) [illegible] - [illegible] [illegible] இதுவென்று - இன்னதென்று [illegible] - [illegible] நோக்கி [illegible] [illegible] [illegible] [illegible]

கருத்து:—இரப்போருடைய பிட்சாபாத்திரத்தில் அறிவில்லாரும் கல்லையிட மாட்டாராகையால் பேரறிவுடையோர் குறிப்பறிந்துகொடுப்பார் என்பது.

நீர்மையை நோக்கல்—குறிப்பறிதல். நினைத்தது இறந்தகால ஒன்றன்பால் வினையாலணையும்பெயர். மாண்டார் மாண் என்னும் பண்படியாகப்பிறந்த இறந்தகால வினையாலணையும் பெயர். புனத்த புனம் என்னும் இடமடியாகப்பிறந்த குறிப்புப்பெயரொச்சம். குளிர் வரை வினைத்தொகை. வரை மூங்கிலின்பெயர் அதற்கிடமாகிய மலைக்குவந்தமையால் தானியாகுபெயர்.

**20.** (இ-ள்.) அடுத்த-அடர்ந்த, அறல் - கருமணலையொத்த, ஐம்பாலாய் - கூந்தலையுடையவளே, யாவர்க்கேயானும்-கேடு நினைப்பவர்க்கே ஆயினும், கொடுத்து - (அறத்தின் பொருட்டு) கொடுத்து, ஏழையாயினார் - வறுமை அடைந்தவர்கள், இல் - இல்லை, (ஆதலால்) அடுத்து - தம்மையடுத்து, ஒன்று இரந்தார்க்கு - ஏதேனும் ஒருபொருளை யாசித்தவர்களுக்கு, ஒன்று ஈந்தாரை - (யாசித்த) ஒருபொருளைக் கொடுத்தவரை, கொண்டார் - பெற்றுக் கொண்டவறியவர், படுத்து - ஈந்தவரை இழிவுபடுத்தி, ஏழை ஆம் என்று - இவர் ஏழை என்றுசொல்லி, போகினும் - சென்றாராயினும், போக - போகக்கடவர்.—எ-று.

கருத்து:—ஏழைகளுக்குக் கொடுத்துத் தரித்திரர் ஆனவர் இல்லை, ஆதலால் கொடுக்கப்பெற்றவர் கிடைத்தமட்டில் திருப்தியடையாமல் இகழ்ந்தாலும் கொடையாளர் அதனைமதியார் என்பது.

மூன்றாமடியில் அடுத்த என்னும் பெயரொச்சத்தில் அகர விகுதி தொகுத்தல். ஏழை பண்பாகு பெயராய் ஆண்பால், பெண்பால், ஒன்றன்பால், பலவின்பால்களுக்கு உரிய பொதுப்பெயராதலால் ஆம் என்னும்செய்யுமென்வாய்பாட்டு வினைமுற்றைக் கொண்டதாயினும், ஈந்தார் என்றமையால் ஏழை ஆம் என்பதற்கு ஏழையாவார் என உரைத்தாம். ஒன்று இரண்டும் எண்ணலளவையாகு பெயர்கள். ஏழை இரண்டும் பண்பாகு பெயர்கள். போகினும் என்னும் எதிர்கால வினையெச்சத்தினின்றுமுள்ள உம்மை எதிர்மறை. போக வியங்கோள் வினைமுற்று. ஐம்பாலாய் விளியடைந்த பண்புத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகைக் காரணப்பெயர். ஐம்பால்-ஐந்து வகைக்கூந்தல், அவை—முடி, கொண்டை, குழல், [illegible] பனிச்சை. [illegible] முடித்தல், [illegible]

தில் முடித்தல், சுருள் - பின்னே செருகல், குழல்-சுருட்டி முடித தல், பனிச்சை - பின்னிவிடுதல்.

**21.** (இ-ள்.) குளம்-குளமானது, நெடிதுகொண்டது-அதிகமாகக் கொண்டதாகிய, நீர் - சலம், அறுமோ - பிறர்க்குப்பயன் படுதலால் குறையுமோ, (அதுபோல) பல்லாண்டும்-பலவருஷமும், ஈண்டி - பெருகி (கழிந்து), பழுதாய் - பிறர்க்குப்பயன் படாததாய், கிடந்தது - கிடந்தபொருள், வல்லான் - ஈயவல்லவன், தெரிந்து-தருமத்தின் பயனை உணர்ந்து, வல்லே-விரைந்து, வழங்குங்கால் - இரவலர்க்கு ஈயும்போது, வளம் - செழுமையை, நெடிதுகொண்டது-அச்செல்வம் மிகுதியுங் கொண்டதாகி, அறாது - குறையாது.--எ-று.

கருத்து:—பிறர்க்குப்பயன் படுதலால் பெருங்குளம் நீர்குறையாததுபோல நெடுநாளாய்ப் பிறர்க்குப்பயன்படாமல் சும்மாகிடந்த செல்வத்தை ஒருவன் அறத்தினைபொருட்டுச் செலவிடுவானாயின் அச்செல்வம் வளருமேயன்றிக்குறையாது என்பது.

பல்லாண்டு பண்புத்தொகை, பன்மையாகிய ஆண்டு என விரியும். உம்மை முற்று. பழுது பண்புப்பெயர், இங்கு ஆகுபெயராய்ப்பொருளை யுணர்த்தியது. கிடந்தது இறந்தகால ஒன்றன்பாற படர்க்கை வினையாலணையும்பெயர். வல்லே விரைவுக்குறிப்புப யுணர்த்தும் பண்புப்பெயர். நெடிது இரண்டும் நெடுமை என்னும் பண்படியாகப்பிறந்த குறிப்புவினையெச்சங்கள். அறாஅது செய்யுளிசை நிறைக்கவந்த உயிரளபெடை. கொண்டது இறந்தகால ஒன்றன்பால் வினையாலணையும்பெயர், இது நீர் என்பதனோடு இருபெயரொட்டுப் பண்புத்தொகையாய்ப் புணர்ந்தது.

**22.** (இ-ள்.) கரப்பு உடையார் - ஒளித்துவைக்கும் இயல்புடையார், வைத்த - சேர்த்துவைத்த பொருள்கள், துரப்பு உடை (புலைகவர்களை) துரத்தும் இயல்புடைய, மன்னர்க்கே - அரசர்க்கே, துய்ப்புறவு - அனுபவிக்கப்படும் பொருள்களாம், அது அல்லால்-அது அல்லாமல், கடையும்-சாங்காலத்தும், உதவா - (அச்சேர்த்துவைத்தவர்க்கு) உதவியாகமாட்டா, (இதை ஒருவாறு உணர்ந்த அவ்வொளித்துவைக்குமியல்புடையார்) இரப்பு - வறுமையினது, இடும்பையன்பும், மிக்கார்க்கு - மிகுந்தவர்களுக்கு, உதவ - உதவும்படி, ஒன்று ஈதல் - சிறிதுபொருளைத்தருதல், சுரத்திடை - உலர்ந்த பாலைவனத்தில், பெய்தபெயல் - பெய்தமழையை ஒக்கும்.--எ-று.

கருத்து:—இரப்போர்க்கு இல்லையென்று ஒளிக்கும் இயல்புடையாரது பொருள் அச்சேர்த்தவர்க்கு அனுபவிக்கப்படும் பொரு

வாவதல்லாமல் அவர்க்கு மரணகாலத்தும் பிறரால் அறியப்படா மையால் பயன்படமாட்டா. இதை ஒருவாறு உணர்ந்திருந்த வறுமையுடையவர்க்குச் சிறிது ஈதல் பாலைவனத்தில் பெய்தமழை அந்நிலத்தைக் குளிர்விக்காமல் வற்றிப்போதலோடு ஒக்கும் என்பது.

வைத்த இறந்தகாலப் பலவின்பால் வினையாலணையும் பெயர். கடையும் என்பதில் உம்மை இறந்தது தழீஇய எச்சவும்மை. உதவா எதிர்மறைப்பலவின்பால் வினைமுற்று. தூப்பு தொழிற்பெயர். பகுதி தூ. உடைய என்னும் குறிப்புப் பெயரெச்சம் ஈறு கெட்டு வந்தது. துப்புரவு தொழிலாகுபெயர்; து-பகுதி, ப்-சந்தி, பு-விகுதி, உரவு-விகுதிமேல் விகுதி. உகரக்கேடுசந்தி. ஏகாரம் பிரிநிலை. பெயல் மழைக்குத் தொழிலாகுபெயர்.

**23.** (இ-ள்.) இம்மை - இப்பிறப்பிலே, தவமும் - தவமும், அறமும்-துறவறமும், என - என்றுசொல்லப்பட்ட, இரண்டுதம்மையும் - இரண்டையும், உடையார் - உடையவர்கள், அவற்றை-அவ்விரண்டினையும், சலம் - பொய்வழியில்பட, ஒழுகல் - ஒழுகுதல், இம்மை - இப்பிறப்பில், பழி - நிந்தைகள், ஏயும் - வந்துநிரம்பும், அன்றி - அதுவல்லாமல், மறுமையும் - வருபிறப்பினும், தம்மை-தங்களை, தாம் ஆர்க்கும்-தாங்கள் கட்டுகின்ற, கயிறு-கயிறாகும்,எ-று.

கருத்து :—இப்பிறப்பில் தவவொழுக்கமும் துறவறவொழுக்கமும் ஆகிய இரண்டையும் தனித்தனியே உடையவர்கள் பொய்யொழுக்கத்தில் ஒழுகுவாராயின் இம்மையிலே நிந்தனையையும் மறுமையில் பிறவிக்கடலில் மூழ்குதலையும் உண்டாக்கும் என்பது.

என இடைச்சொலடியாகப்பிறந்த செயவெனெச்சம், உடையார் என்னும் பலர்பாற்குறிப்பு வினையாலணையும்பெயர் கொண்டது. சலம் பொய்யாகிய ஒழுக்கத்தை யுணர்த்தலால் பண்பாகுபெயர், ஏயும் செய்யுமென்வினைமுற்று. ஆர்க்கும் செய்யுமென்பெயரெச்சம், இது கயிறு என்னும் கருவிப்பெயர் கொண்டது. அன்றி அன்மை என்னும் பண்படியாகப்பிறந்த எதிர்மறைக்குறிப்பு வினையெச்சம், இரண்டு தம்மையும் என்பதில் தம் சாரியை.

**24.** (இ-ள்.) கன்றி-அறிவுடையோர் கோபிக்கும்படி, முதுகு - பெருங்குற்றங்களை, கழிய - மிகுதியாக, பல்நாள் செய்யினும்-பலநாள் செய்தவரினும், ஒன்றும் - ஒருகுற்றமும், சிறியார்கண்-கீழ்மக்களிடத்து, என்றும் - எவ்வளவு சிறிதாயினும், தோன்று-தோன்றமாட்டா, உயர்ந்தார் - உயர்மக்களிடத்தில், [illegible]ளும், குற்றம் - குற்றம், ஒன்றுபயிடினும் - ஒன்றே ஆகினும், குன்

யின்மேல் - மலையின்மேல், இட்ட - ஏற்றிவைத்த, விளக்கு - விளக்குப்போல் யாவர்க்கும் தோன்றும்,—எ-று.

கருத்து :—கீழ்மக்கள் குற்றஞ்செய்வாராயின் அது அவர்க்கு இயற்கையெனக்கொண்டு யாவரும் பேசார்; மேன்மக்கள் ஒரு குற்றஞ்செய்வாராயின் அது மலையின்மேலிட்ட தீபம்போல எல்லோர்க்கும் விளங்கித் தூற்றப்படும் என்பது.

கன்றி கன்ற என்னும் செயவெனெச்சத்திரிபு. முதிர்ந்த இறந்தகாலப் பலவின்பாற்சொலை வினையாலணையும் பெயர். கழிய கழி என்னும் உரிச்சொலடியாகப்பிறந்த செயவெனெச்சம். உம்மைகள் மூன்றில் முன்னது உயர்வு சிறப்பு, மற்றைய இரண்டும் இழிவு சிறப்பு ஆயின் என்னும் செயின் என்னும் வாய்பாட்டு வினையெச்சம் ஆன் என மருவி வந்தது.

25. (இ-ள்.) தெரியாதவர்தம் - நன்மைதீமை பகுத்துணர்வு இல்லாதவராது, திறன் இல்-வகைப்படுதல் இல்லாத, சொல்-சொற்களை, கேட்டால்-கேட்டால், பரியாதார்-அச்சொற்களில் அன்பில்லாராகி, இருக்க - சும்மா இருக்கக்கடவர், பிரிவு இல்லா - விட்டு நீங்குதல் இல்லாத, வம்பு - பயனில்லாச்சொற்கள், அலர் - பரவுகின்ற, வாயை - வாயை, அவிப்பான் - அடக்கும்படி, புகுவாரோ-எத்தனிப்பவரோ, அம்பலம் - பொதுவிடமாகிய சபைக்கு, தாழ்கூட்டுவார் - தாழ்ப்பாள் போடுவோரை ஒப்பாவார்,—எ-று.

கருத்து :—பகுத்துணர்வில்லார் பேசும்வாயை அடக்கமுயலுதல் பொதுவிடமாகிய சபையைத் தாழ்ப்பாளிடுவதை ஒக்கும்.

பரியாதார் - எதிர்மறைப் பலர்பால் வினைமுற்று வினையெச்சமாகவந்தது. இருக்க வியங்கோள் வினைமுற்று. அவிப்பான்-எதிர்கால்வினையெச்சம். விகுதி பான். போல் அசை.

26. (இ-ள்.) தீம்தேன்-மதுரமாகியதேன் அடையைய, முசு-முசு என்னும் குரங்கு, குத்தி - (கொம்பினால்) குத்தி, நக்கு - நக்குகின்ற, மலைநாட-மலைநாட்டரசனே, தம்மை-தங்களை, பசுக்குத்தின்-பசுவானது தன்கொம்பினால் குத்தினால், குத்துவார் இல் - அதன்மேற்பாய்ந்து குத்துவார் இல்லை, (அதுபோல) ஆய்ந்த அறிவினர் அல்லாதார் - ஆராய்ந்தறிந்த அறிவுடையவர் அல்லாதவர்கள், பல உரைக்கு - தம்மை நிந்தித்துக்கூறும் பல இழிசொற்களுக்கு, கற்றறிந்தார் - கற்றறிந்தவர், காய்ந்து - தாமும் கோபித்து, எதிர்செறுப்பவோ - மாறுசொல்வார்களோ சொல்லார்,—எ-று.

கருத்து :—பிசப்பாயசத்தால் அதன்மேல் பாய்வார் இல்லை அது போல் மூடர் நிந்தித்தால் கற்றறிந்தோர் அதற்கு மாறாக நிந்தியார்.

பல்லுளை பண்புத்தொகை. முசக்குத்தி, யசக்குத்தின் என்பவை எழுவாய்த்தொடர்கள். முசு பசு என்பன எழுவாய்த் தொடராயினும் குறிலிணை மொழியாதலால் பொதுவிதியின்படி வல்லினம் மிகுந்தது. எதிர் பண்பாகுபெயர்.

**27.** (இ-ள்.) காழ் ஆரம்மார்ப - முத்துவடம் அணிந்த மார்பையுடையானே, கசடு அற - குற்றமற, கை - தம்முடைய ஒழுக்கத்தை, காவா - காத்துக்கொள்ளுந்திறம் இல்லாத, கீழ் ஆயோர் - கீழ்மக்களானவர், செய்தபிழைப்பினை - செய்தகுற்றத்தை, மேலாயோர் - மேன்மக்களானவர், உள்ளததுக்கொண்டு - தம்மனத்தில் பொருளாகக்கொண்டு, நேர்ந்து - எதிர்த்து, ஊக்கல்-(துன்பஞ்செய்ய) முயலுதல, குறுநரிக்கு - குள்ளநரியின்மேல், கல்லநாராயம் - கூர்மையுள்ள நாராசத்தை, கொளல்-எடுத்து எய்யமுயல்வதனோடு ஒக்கும்.—எ-று.

கருத்து :—கீழ்மக்கள் தம்மிடத்தில் பிழைசெய்வாராயின் மேலோர் அதைப் பொருளாகக்கருதி அதற்கு மாறுசெய்ய முயலுதல் குள்ளநரியின்மேல் நாராசத்தை எய்ய முயல்வதனோடு ஒக்கும்.

கசடு அற எழுவாய்த்தொடராதலால் டகரமெய்யிரட்டாமல் குற்றியலுகரம் கெட்டுவந்தது. காவா ஈறுகெட்ட எதிர்மறைப பெயரெச்சம். ஊக்கல்+குறு எழுவாய்த்தொடராதலால் மெய் - 26-ஆம் சூத்திரத்தில் வலிவரினியல்பும் என்பதினால் இயல்பாய்வந்தது. குறுநரி பணபுததொகை. கல்ல குறிப்புப்பெயரெச்சம. நாராயங்கொளல நன்-மெய்-சூ-16-இல் வன்மைக்கினமாத்திரியவுமாகும் என்பதனால திரிந்துவந்தது. ஊக்கல் தொழிற்பெயர்.

**28.** (இ-ள்.) அடங்கி - தான் அடங்கி ஒழுகி, அகப்பட்டு - தம்மிடத்துள்ள, ஐந்தினை - ஐம்பொறிகளை, காத்து-புறத்துச்செல்லவிடாமல் காத்து, தொடங்கிய - தாம்செய்யத்தொடங்கிய ஒழுக்கங்களை, மூன்றினால் - மனமொழிமெய்களால், மாண்டு - மாட்சிமைப்பட்டு, ஈண்டு-இவ்வுலகத்தில், உடம்பு ஒழிய-உடம்புகிடக்க, செல்லும்வாய்க்கு - இனிச்செல்லும் மறுமையுலகததுக்கு, ஏமம்-உறுதியாகிய காவலை, இறுகாலை - இளமையில், செய்தாரே - செய்துகொண்டவர்களே, கொல்லிமேல் - கொல்லியென்னும் மலையின்மேல், கோட்டு - கொற்கோட்டையை, வைத்தார் - கட்டிவைத்த பெருஞ்செல்வத்தினரை ஒப்பாவார்.—எ-று.

கருத்து :—ஐம்பொறிகளையும் அடக்கிக்கொண்டு மனமொழி மெய்களாகிய திரிகரணங்களும் சுத்தமாய் மறுமைக்குத் துணையாகிய காவலை இறப்பதற்குமுன்னமே செய்துகொண்டவர் கொல்லி மலையின்மேல் கற்கோட்டையைக் கட்டிவைத்தவர்போல மரணகாலத்தில் சலனமில்லாதவராவார்.

கோட்டு என்பது வழக்கத்தில் ஐகாரச்சாரியைபெற்று கோட்டை என வழங்கும். ஐந்து, மூன்று என்பன தொகைக்குறிப்புப் பெயர்கள். மாண்டு மாண் என்னும் பண்படியாகப்பிறந்த இறந்தகாலவினையெச்சம். கொல்லி மலையானத்தைச்சேர்ந்த ஓர்மலை. தொடங்கிய இறந்தகாலப் பலவின்படர்க்கை வினையாலணையும் பெயர்.

**29.** (இ-ள்.) புறம்செய்ய - மதில் அரண்முதலிய காவலைச் செய்வதனால், செல்வம் - செல்வப்பொருள், பெருகும் - அழியாது நிற்கும், (அதுபோல) அறம்செய்ய - அறத்தைவிடாது செய்வதினால், அல்லவை-பாவங்கள், நீங்கிவிடும் - தேய்ந்துபோம், (ஆகையால்) அறம் செய்பவர்க்கு-அறத்தைச்செய்கின்றவர்களுக்கு, மறம் உழிநோக்கி - பாவம்சேருமிடத்தைப்பார்த்து, திறம்தெரிந்து-அதன் வகையை நன்றாய் ஆராய்ந்து, செய்தக்கால் - அறத்தையேசெயதால், செல்வுழி - செல்லும் மறுமை உலகத்தில், நன்று ஆம்-நல்ல இன்பம் உள்ளதாகும்,—எ-று.

கருத்து :—மதில் அரண்முதலிய செய்து பாதுகாத்த திரவியம் பகைவரால் அழியாததுபோல அறத்தை விடாதுசெய்வதனால் பாவம் தேய அறம்வளர்ந்து மறுமையில் இன்பம் அடைவார்.

இங்குபெருகுதல் என்றது அழியாது நிற்றல். செல்வுழி-வினைத்தொகை. இதில் வகரம் உடம்படுமெய் அல்லாத மெய். நன்று பண்புப்பெயர். புறம் புறத்திலுள்ள மதில்முதலிய பொருள்களுக்காதலால் இடவாகுபெயர். செய்ய இரண்டும் காரணப்பொருட்டாகிய இறந்தகால வினையெச்சம். அறம்என்ற குறிப்பால் அல்லவை பாவத்துக்காயிற்று.

**30.** (இ-ள்.) முன்பெரிய நல்வினை - முன்பிறப்பிலே மிகுந்த புண்ணியத்தை, முட்டு இன்றி - இடை அறாமல், செய்யாதார் - செய்துகொள்ளாதவர், பின் - பின்பிறப்பில், பெரிய செல்வம்பெறலாமோ - மிகுந்த செல்வத்தைப் பெறுதலுமுண்டோ, [illegible] [illegible] இல்லை-[illegible] பலை [illegible] கொண்டு, பொருள்செய்ய - [illegible]

என்னின், என்னும்-அம்முயற்சியாது பயன்படும், முதல் இலார்க்கு-முதற்பொருள் இல்லாதவர்க்கு, ஊதியம் இல்-இலாபம் இல்லை.

கருத்து :—முதல் இல்லாதவர்க்கு இலாபம் பெறுதல் இல்லாததுபோல முற்பிறப்பில் புண்ணியஞ்செய்யாதவர்களுக்கு இம்மையில் பிறர்செல்வத்தைக்கண்டு பொறாமைகொண்டு பொருளைத்தேடமுயற்சிசெய்தாலும் பொருள் உண்டாகாதென்பது

முட்டு முதனிலைத்தொழிற்பெயர். பெரிய குறிப்புப்பெயரெச்சம். வைப்பு சேர்த்துவைக்கப்பட்ட பொருளுக்காதலால் தொழிலாகுபெயர். இகலி இறந்தகாலவினையெச்சம். இகல் பகுதி, இ வினையெச்சவிகுதி, அதுவே இறந்தகாலங்காட்டியது. முதல், ஊதியம் பண்பாகுபெயர்கள். ஓகாரம் எதிர்மறை.

**31.** (இ-ள்.) அறை - கற்பாறையில், பொங்கி - மிகுந்து பெருகி, பாய் அருவி - பாய்கின்ற அருவியானது, அணி-அழகுசெய்யும், மலைநாட - மலைநாட்டரசனே, அம்கண் - அழகிய இடமகன்ற, விசும்பின் - ஆகாயத்தில், அகல்நிலா - பரவுமியல்புள்ள சந்திரிகையை, பாரிக்கும் - பரப்புகின்ற, திங்களும்-சந்திரனும், தீங்கு உறுதல்-(இராகுவினால் ஒளி மழுங்கலாகிய) தீமையை அடைதலை, காண்டும் - கண்டோம், (ஆதலால்) உறற்பால - வந்தடைதலாகிய பான்மையுடைய தீயவை, யார்க்கும் - பிறர்க்கு உபகாரஞ் செய்பவர்க்கும், உறும் - வந்தடையும்.—எ-று.

கருத்து:—உலகத்துக்கு ஒளிதரும் சந்திரனும் இராகுவினால் பிடிக்கப்பட்டு ஒளி மழுங்குதலால் பிறர்க்கு உபகாரஞ்செய்யும் நல்லோரும் ஊழினால் தீமைகளை அடைவார்.

திங்களுக்கு அகனிலாப்பாரிக்குமென விசேடணங்கொடுத்தமையால், யார்க்குமென்பது உபகாரஞ்செய்பவரையும் அடக்கி நின்றது. முன்னுள்ள உம்மை உயர்வுசிறப்பு. பின்னுள்ள உம்மையும் அப்பொருளது, முற்றும்மையுமாம். காண்டும் தன்மைப்பன்மை இறந்தகால வினைமுற்று, காண் பகுதி, டும் தன்மைப்பன்மை இறந்தகால வினைமுற்று விகுதி. உறல் என்னும் தொழிற் பெயரோடு பால என்னும் பண்படியாகப்பிறந்த பலவின்பாற்கைப் பெயரின் முதனிலை இருபெயரொட்டுப் பண்புத்தொகை நிலையாகப்புணர்ந்தது. இராகு கேதுக்களின் சரித்திரம் :—திருப்பாற்கடலைக்கடைந்து தேவர்களுக்கு இறைவன் அமுதம் பகிர்ந்தளிக்கையில் தேவருருக்கொண்டு அமுதுண்ணவந்த அசுரனைச் சந்திரசூரிய ரிருவருங் காட்டவும், அவ்விறைவன் அமுதம்பகிர்ந்த அகப்பையால் அவ்வசு

ரன் தலையைவாங்கலும், அத்தலை இராகுவும், உடல் கேதுவுமாகிச் சந்திரசூரியரை மறைத்தல் என்பது.

**32.** (இ-ள்.) உணற்கு இனிய - குடிப்பதற்கு இனிமையுடையுள்ள, இன்னீர் - நன்னீர், பிறிது ஊழி-வேறிடத்தில், இல என்னும்- இல்லையென்று கருதுகின்ற, கிணறு அகத்து - கிணற்றினுள்ளிடத்துள்ள, தேரைபோல் - தவளையைப்போல, ஆகார் - ஆகாத ஒருவர், கணக்கினை - நூல்களை, முற்ற-முழுமையும், பகலும் - தினமும, முனியாது - வெறுப்பிலலாமல், இனிது ஓதி - இனிமையாகப் படித்து, கற்றலின் - அறிதலினும், கேட்டலே - (கற்றறிந்தார் விரித்துப்பேசும் நூற்பொருள்களை) கேட்டுணர்தலே, நன்று - நன்மையைத்தருவது.—எ-று.

கருத்து.—தான்வசிக்கும் கிணற்றில் அன்றிவேறிடத்தில் குடிப்பதற்குரிய நன்னீர் கிடையாதென்று நினைக்கின்ற தவளையைப்போல் நூல்களைக் கற்றே கல்வியறிவைப் பெறவேண்டுமென்று கருதாமல் கற்றோர் விரித்துச்சொல்லும் * நூற்பொருளைக் கேட்பாராயின் அது தாம் கற்றறிதலினும் மிகுந்த நன்மையைத் தருமென்பது.

ஓதல் சிறிதும், கேட்டல் பெரிதுமாதல் வேண்டுமென்பார் பகலு முனியாதோதியெனவும், கேட்கப்படும் நூற்பொருள்கள் கற்றறிந்தாரெடுத்துப்பேச ஒருவர்கேட்பாராகுல் அது தாமகற்ற கல்வியறிவை யுறுதிப்படுத்து மாதலாலும், கல்லாத ஒன்றை உண்டாக்கலாலும் கேட்டலே நன்றெனவுங்கூறினா. பிறிது இடைச்சொலடியாகப்பிறந்த ஒன்றன்பாற்கைப் பெயர்ச்சொல்; பிற பகுதி, இ சாரியை, து ஒன்றன்பாற்கை விகுதி, பகுதியீற்று அகரக்கேடு கடைக்குறை. என்னும் இடைச்சொலடியாகப் பிறந்த நிகழ்காலப் பெயரெச்சம்; இது தேரை என்னும் செய்வதைக்கொண்டது, உணற்கு எனத்தொழிற்பெயரேற்று நின்ற நான்கனுருபு [illegible] பொருளது.

**33.** (இ-ள்.) உலப்பு இல் - முடிவில்லாத, உலகத்து [illegible]த்தில், உறுதியே நோக்கி - (மக்கள்) அடைவதற்குரியபயனை [illegible]யத்து, நல் அறம் - குற்றமற்ற அறத்தை, கொள்ளார் - கொள்ளா தவரை, கொளுத்தி - அறிவுறுத்தி, குலத்து - [illegible]ய ஒழுக்கத்தில், அடக்குதல் - அடங்கி ஒழுகச்செய்தல், [illegible] கைகால்களை [illegible], அழுது உண்ணும் - அழுது (பாலை) உண்ணு தலில்லாத, குழவியை - குழந்தையை, தாயார் - தாய்மார், அலைத்

தி - வருத்தப்படுத்தி, பால்பெய்துவிடல் - பாலூட்டி விடுதலை ஒக்கும்.—எ-று.

கருத்து:—கைகால்களை உதறி அழுதுபாலுண்ணாத குழந்தைகளைத்தாய்மார் வருத்தப்படுத்திப் பால் ஊட்டுவதுபோல மக்கள் அடைதற்குரிய உறுதிப்பயனை ஆராய்ந்தறிந்து அறத்தின் வழியில் நடவாதவர்களுக்கு அறிவுவிளங்கச்சொல்லி அவர்களுடைய தீயவொழுக்கத்தைததிருத்தி அடங்கி நடக்கச்செய்யவேண்டும் என்பது.

அறிவுறுத்தியபின்பே தீயவொழுக்க மின்னதெனவுணர்ந்து அதனைவிட்டு அடங்குவராதலால் குலத்தடக்கிக் கொளுத்தலென்பதைப்பின் முன்னாக நிறுத்தி, கொளுத்திக்குலத்தடக்கல் என விகுதி பிரித்துக்கூட்டி உரைக்க. மலைதல்-போர் செய்தல்; அது இங்குக் கைகாலுதறலுக்காயிற்று. மலைந்து மலைத்தென வலித்தலாயிற்று. அழுதென்னும வினையெச்சம ஈறுதொகுத்தலாய்நின்ற உண்ணா என்னும் எதிர்மறைப் பெயரெச்சதநின் முதனிலையோடு முடிந்தது. நோக்கியென்னும் வினையெசசம், கொள்ளாரென்னும் எதிர்மறை வினையாலணையும் பெயரின் முதனிலையோடு முடிந்தது. ஏ பிரிநிலை. உறுதி தொழிலடியாகப் பிறநதபெயர்; உறு பகுதி, து சாரியை, இ செயப்படுபொருள்விகுதி, உகரக்கேடுசந்தி. குழவி பண்படியாகப்பிறந்தபெயர்; குழ பகுதி, வ் சந்தி, இ ஒன்றன்படர்க்கைவிகுதி. குழவுபகுதி எனக்கொண்டு உகரக்கேடு சந்தி எனினும் ஒக்கும். கொளுத்தல் பிறவினைத்தொழிற்பெயர்; அலைத்து பிறவினையாகிய இறந்தகாலவினையெச்சம்; தனவினையாயின் அலைந்து என நிற்கும்.

34. (இ-ள்) ஒருவரை-பிறர் ஒருவர்மேல், தீது உரை-பழி கூறுதலை, தெற்றக்கன்டக்கால் - சந்தேகமறக்கேட்டால், அவரை-(பழிகூறிய) அவரை, இற்றே-நம்மையு மிவ்வாறே பழிகூறுவர் என்றுகருதி, தெளியற்க-நட்பினராக நம்பற்க, தேயரோ, தின்னினும்-தின்பவர் தேவரே ஆனாலும், வேம்பு - வேப்பங்கனி, கைக்குமே-கைக்காமலிராது, (அதுபோல்) மற்றவர்-அப்பழிகூறுவோர், யாவரே ஆயினும் - தம்மை நட்புக்கொண்டவர் எவராயிருப்பினும், (மேலோராயினும்) நன்கொழுகார் - நட்பின்முறையில் நடவார்.

கருத்து:—வேப்பங்கனியைத் தேவர் தின்றாலும் அதன் இயற்கையாகிய கசப்பு நீங்காததுபோலத் தீயோர் நல்லோர் இனத்தாலும் அத்தீயோர் நட்புசாரட்டோர் ஆகையால் பிறர்மேற் பழிகூறும்தீயோர் நட்பை விட்டொழிக என்பது.

தெற்று தன்வினை பிறவினைகளுக்குப் பொதுவாகிய செயவெனெச்சம், கண்டக்கால் என்னும் எதிர்காலவினையெச்சங்கொண்டது. தெற்று இக்குத் தன்வினை. இற்று இடைச்சொலடியாகப் பிறந்த ஒன்றன்பாற்குறிப்பு வினைமுற்று. காண்டல் இங்குக் கேட்டலின்மேலது. ஏகாரம் மூன்றில் நடுவில் உள்ளது எதிர்மறை, மற்றவை உயர்வு சிறப்பு. இஃவை புதியனபுகுதல். உம்மை விகற்பப்பொருளது. கைக்கும் செய்யுமென் வினைமுற்று; பகுதி கை. வேம்பு முதலாகுபெயர்.

35. (இ-ள்.) மான் அமர் - மான் விரும்புகின்ற, கண்ணாய்-கண்களையுடையவளே, தாம்-ஒருவர் தாம், அகத்தால் நட்டு-மனத்தோடு பொருந்த நட்புக்கொண்டு, தமர் என்று - நட்பினர் என்று, ஒழுகியக்கால் - நடந்தால், (சிநேகிக்கப்பட்டவர்) அகத்து நாண்-மனத்தின்கண் கூசுதல், தாம் இன்றி-தாம் இல்லாதவராய், நன்கு-நட்புக்குரிய முறைமைப்படி, ஒழுகாராயின் - நடவாவிட்டால், என் - அந்நட்பினால் என்னபயன், மறந்தும் - (அந்நட்புக்கொண்டவர்) மறந்தும், பரியலர்-இரங்குகின்றவர் ஆவார், (ஆகையால் உண்மையாளன்கொண்ட அந்நட்பு) கானகத்து - காட்டில், உக்க-எறிந்த, நிலா-நிலாவை ஒக்கும்.—எ-று.

கருத்து:—மனம்பொருந்தச் சிநேகிக்கும் உண்மையாளராகிய நட்பினர் தம் சிநேகனுகிய மற்றவன் நட்புரிமையில்லாத தீயோனாயினும் அவனுடைய தீயொழுக்கத்தை மறந்து அவனுக்காக இரங்குவார். அவர்செய்யும் நட்புகாட்டில் எறித்த நிலவை ஒக்கும்.

நட்டு இறந்தகால வினையெச்சம், பகுதி நள். ஒழுகியக்கால் எதிர்காலவினையெச்சம். நாண் நாணம் எனவும் வரும். அகம் இடவாகுபெயர். தீயநட்பினருடைய ஒழுக்கத்தை மறத்தல் அருமை நோக்கி மறந்தும் என உம்மை கொடுத்தனர். உம்மை எதிரது தழீஇய எச்சவும்மை. பரியலர் தொழிலடியாகப்பிறந்த பலர்பாற் படர்க்கைப்பெயர். பரியல் பகுதி, அர் பலர்பாற் பெயர்விகுதி. பரியல்-பரி பகுதி, ய் சந்தி, அல் தொழிற்பெயர்விகுதி. கானகம் கான்+அகம் ஒற்றுமைப்பொருள்தாகிய ஆறும்வேற்றுமைத்தொகை, அல்லது இருபெயரொட்டுப் பண்புத்தொகை. நிலா நிலவு என்னாம். கன்-உயிர்-கூ-22.

36. (இ-ள்.) பெரிய - (தம்மிடத்து அன்பு) மிகுந்து நட்டார்க்கும் - நட்புக்கொண்டவரிடத்தும், பகைவரிடத்தும் - (அத்த

னாமல், சென்று - போய், நீர்த்தார்போல - (இருவரின் ஒருவரி டத்து அன்பு) நீங்கினோர்போல, சொல்லி - (அவ்வொருவருடைய செய்தியை மற்றவரிடத்து) சொல்லி, ஒருவன்-அவ்விருவரில், ஒரு வரோடு - ஒருவரிடத்து, ஒன்றி - (மனம்) பொருந்தி, ஒருப்படா தாரே - ஒருமைப்பாடில்லாதவரோ, இருதலைக்கொள்ளி - இருபக் கத்திலும் தீயுள்ள கொள்ளியாவார், என்பார்-என்று (அறிவுடையோ ரால்) சொல்லப்படுவோர்.—எ-று.

கருத்து:—தம் நட்பினருடைய செய்தியை அந்நட்பினர்க்குப் பகைவரிடத்தும், பகைவருடைய செய்தியை நட்பினரிடத்துஞ் சொல்லி, அவருள்பகையைப் பெருகச்செய்து இருதிறத்தாரையுங் கெடுத்து ஒருவரிடத்தும் ஒருமைப்பாடில்லாதவர் இருதலைக்கொள் ளிபோல்வார் என்பது.

திரிவின்றிச் செல்லுதலாவது நட்பினரிடத்துச்செல்வதுபோ லவே அவருடைய பகைவரிடத்தும், பலமுறைசெல்லுதல். தமது நட்பினருடைய செய்தியைப் பகைவரிடத்தும், பகைவருடைய செய்தியை நட்பினரிடத்துஞ்சொல்லி அவருள்பகையைப் பெருகச் செய்து இருதிறத்தாரையுங் கெடுத்தலால் அவரை இருதலைக்கொள் ளி என வுருவகப்படுத்தினர். குவ்வுருபிரண்டும், ஒடுருபும ஏழாவத னிடப்பொருளன. ஏ பிரிநிலை. கொள்ளி தீயாற் கொள்ளப்பட்ட தென்னும் பொருளில் கொள் பகுதி, ள் சந்தி, இ செயப்படுபொரு ள் விகுதி; தியைக் கொள்ளுதலுடையதென்னும் பொருளில் இ வினைமுதற்பொருள் விகுதி.

37. (இ-ள்.) பொறிவண்டு - புள்ளிகளையுடைய வண்டுகள், பூமேல் - மலர்களில், இசைமுரலும்-இசையைப்பாடுகின்ற, ஊர- மருதநிலத்தலைவனே, பெரியார்க்கு-பெருமைக்குண முடையார்க்கு, செய்யும் - செய்தற்குரிய, சிறப்பினை - சிறந்த உபசாரத்தை, சிறி யார்க்கு-சிறுமைக்குண முடையார்க்கு, பேணி - விருப்பங்கொண்டு, செய்துவிடுதல் - (ஒருவர்) செய்துவிடுதலாகிய, அது - அச்செயல், கலிசு - (குதிரையின்மே லிடுதற்குரிய) கல்லணையை, நாய்மேல் - நா யின்மேல், இடும் ஆறு அன்றே - இடும்விதமேபோலும்.—எ-று.

கருத்து:—குதிரையின்மேலிடுதற்குரிய கல்லணையைப் பெறு தற்குத் தகுதியில்லாத நாயினிடத்து வைத்திருப்பதால் அதன் மேலிட்டால் அக்கல்லணையின் பெருமை கெடுதலே அன்றி அந் நாய்க்கு ஒருபயனுமின்றி இடுபவனுக்குப்பழிப்பு முண்டாதல் போலப் பெரியார்க்குச் செய்தற்குரிய உபசாரத்தைச் சிறியார்க்கு

தகுதியில்லாத சிறியாரிடத்து வைத்தவிருப்பத்தால அவர்க்குச்செய்தால் அவ்வுபசாரத்தின் பெருமை கெடுதலே அன்றி அவ்வுபசாரத்தால் அச்சிறியார்க்கு ஒருபயனுமின்றி, செய்தானுக்குப் பழிப்புமுண்டாமென்பது.

சிறப்பு தொழிலாகுபெயர்; சிற பகுதி, ப் சந்தி, பு தொழிற்பெயர் விகுதி. பூ தொழிலடியாகப் பிறந்தபெயர்; பூ பகுதி, இ வினைமுதற்பொருண்மை விகுதி புணர்ந்து கெட்டது. ஓ எதிர்மறை. அன்றே என இரண்டெதிர்மறை புணர்த்தல் தேற்றப்பொருள் படுதலுக்கென்க. பெரியார் பண்படியாகப்பிறந்தபெயர்; பெருமை பகுதி, ஆர் பலர்பாற்படர்க்கை விகுதி, மை யீறுகெட்டதும், உகரம் இகரமானதும், யகரந்தோன்றியதும் சந்தி. சிறியாரென்பதும் இது.

**38.** (இ-ள்.) நிறையான் - (பிறரிடத்து மனஞ்செல்லாமல்) நிறுத்துமியல்பினால், மிகுகலாத - மேம்படுதலில்லாத, நேரிழையாரை - மாதர்களை, சிறையான் - (மதில்முதலிய) காவலினால், அகப்படுத்தல் - (நாயகர்) உட்படுத்துதலகள், ஆகா-முடியா, அறைகுவயான்சொல்லுவேன், நாய்வால் - நாயின்வால், வலிதினின்-வன்மையாகிய கயிற்றினால், வருந்த -(ஒருவர்தம்மை) வருந்தும்படி, யாப்பினும் - (நேருற) கட்டினும், என்றும் - எக்காலத்திலும், திருந்துதல் ஓ - வளைவுநீங்குதலோ, இல் - இல்லை.—எ-று.

கருத்து:—நாயின்வாலை வளைவுநீங்கும்படி கயிற்றினால் கட்டினாலும் அவ்வால்வளைவு நீங்காததுபோல பிறபுருஷர்மேல் மோகங்கொள்ளுமியல்புடைய மாதர்களைக் காவல்செய்து தடுக்கமுடியாதென்பது.

என்றுமென்றது கட்டிய பிற்காலத்தை. சிறை-மதில் மதில், வாயில்காவல் முதலியவற்றால் அகப்படுத்தற்றொழில் பலவாயின. நிறை தொழிற்பெயர்; நிறு பகுதி, ஐ தொழிற்பெயர்விகுதி, உகரக்கெடுசந்தி. பொருள் நாயகனிடத்தன்றிப் பிறரிடத்து மனஞ்செல்லவொட்டாமல் நிறுத்தல். இதன் பகுதியாகிய நிறு பிறவினை, தன்வினை நில். மிகுகலாத எதிர்மறைப் பெயரெச்சம்; மிகு பகுதி, கு சாரியை, அல் எதிர்மறைவிகுதி, உகரக்கேடு சந்தி, அனைத்துமொருபகுதி, ஆ சாரியை, த் எழுத்துப்பேறு, அ பெயரெச்சவிகுதி. அறைகு தன்மையொருமை எதிர்காலவினைமுற்று; அறை பகுதி, கு தன்மையொருமை எதிர்கால வினைமுற்று விகுதி. இவ்விகுதி கு என நீட்டல் பெற்றது. வலிது பண்படியாகப்பிறந்தபெயர்;

வலி பகுதி, து ஒன்றன்படர்க்கை விகுதி; வல பகுதி, இ சாரியை எனினும்பொருந்தும். இது யாத்தலுக்குக் கருவியாகிய கயிற்றை உணர்த்திற்று. வலியினின் என்னும் ஐந்தனுருபு கருவிப்பொருளது. இன் உருபிற்கு இன்சாரியைவருதல் சிறுபான்மையது. ஈற்றிலுள்ள ஓ உயர்வு சிறப்பு.

**39.** (இ-ள்.) பூத்தாலும் - மலர்ந்தாலும், காயாமரம் உள - காய்க்காத (பாதிரிமுதலிய) மரங்கள் உண்டு, (அதுபோல) மூத்தாலும் - வயதுமுதிர்ந்தாலும், நன்கு அறியார்தாமும் - நல்ல அறங்களை அறியாதமக்களும், நனி உளர் - மிகுதியும் உளர், பாத்தி - பாத்தி கட்டி, விரைத்தாலும் - விதைத்தாலும், நாறுத - முளைக்காத, வித்து உள - வித்துகள் உண்டு, (அதுபோல) பேதைக்கு - மூடனுக்கு, உரைத்தாலும் - பலமுறை அறங்களைச்சொல்லினும், உணர்வு தோன்றாது - அறிவு உதிக்காது —எ-று.

கருத்து:—பூத்தாலும் காய்க்காத மரங்கள்போல வயது சென்றாலும அறங்களை அறிந்து செய்யாத மனிதர்கள் உளர். பாத்திகட்டி விதைத்தாலும முளைக்காத விதைபோல மூடனுக்குப் பலமுறை அறங்களை யெடுத்துச் சொன்னாலும அறிவுவிளங்காது என்பது.

பூத்தால, மூததால், விரைத்தால், உரைத்தால் என்பன எதிர் காலவினையெச்சங்கள், இவற்றிற்குப்பகுதி முறையே பூ, மூ, விரை, உரை. இவைகளையடுத்த உம்மைகள் இறந்தது தழீஇய எச்சவும் மைகள். உள உண்மையென்னும் பண்படியாகப்பிறந்த பலவின் பாற்படர்க்கைக் குறிப்பு வினைமுற்று. இவ்வினைமுற்று செவ் விகுதி பெற்று இணைபால் இடங்களுக்குப் பொதுவாகிய வினைமுற்றாகவரு தலுமுண்டு. நாறுத எதிர்மறைப்பெயரெச்சம். பகுதி நாறு. பேதை பண்பாகுபெயர். சொல்லால் அஃறிணை பொருளால் உயர் திணை என்னலுமாம்.

**40.** (இ-ள்.) தம்குற்றம் - தம்முடைய குற்றத்தை, நீக்கலர் ஆகி - நீக்கக்கருதாதவர்களாகி, பிறர்குற்றம் - பிறரிடத்தில் உள்ளகுற்றத்தை, தீர்த்தற்கு - நீக்குதற்கு, எங்கேனும் இடைபுகுதல் - எவரிடத்தாயினும் குற்றந்தெளியப் புகுதல், வியன் உலகில் - பெரிய உலகத்தில், வெள்ளாடு - வெள்ளாடு, எங்கும் - எந்தப்புலங்களில் போயும், தன்வளி - தன் வாதநோய், தீராது - தீரப்பெறாமல், அயல்வளி - மற்றொரு ஆட்டிடமுண்டாயவாதநோயை, தீர்த்துவிடல் - தீர்த்துவிடுதற்கு முயலுவதோடொக்கும் —எ-று.

கருத்து:—ஒருவர் தன் குற்றத்தைநீக்க முயலாமல் பிறர்குற்றத்தை நீக்க முயலுதல் புலவ்களிற் சென்று பல தலைமகளை மேய்த்தும் தன் வாதநோய் நீங்காத வெள்ளாடு மற்றோர் ஆட்டின் வாத நோயை நீக்க முயலுதலோடொக்கும் என்பது.

தம்குற்றம் தொழிற் பண்புத்தற்கிழமைப் பொருளதாகிய ஆறும்வேற்றுமைத் தொகையென்றுவது, ஏழாம்வேற்றுமை உருபும் பயனுமுடன்றொக்க தொகையென்றுவது கொள்க. நீக்கிலர் எதிர்மறைப் பலர்பால் வினையாலணையும்பெயர். எதிர்மறை விகுதி இல் பிறர்குற்றம் "பொதுப்பெயர் உயர்திணைப்பெயர்க ளீற்றுமெய்வலி வரினியல்பாம்" என்றதின்படி ஒருமொழிக் ககரம் இயல்பாய் வந்தது. வியன் உரிச்சொல், வெள்ளாடு மங்கலம், காராடு அமங்கலம் வளி-வாதம், இது வாதநோய்க்குக் காரணவாகுபெயர். அயல் பண்பாகுபெயர். தீர்த்துவிடல் என்பதினீற்றில் ஒக்கும் என்பது இசையெச்சம்.

**41.** (இ-ள்.) கிளர்மணி - ஒளிசெய்கின்ற மணிகள், நீடுவதுஇன்ற, கல்வெற்ப - கல்லாகிய மலையையுடையவனே, நமரென்று நமக்குரியாரென்று, நாடி - கருதி, நன்குபுறந் தந்தாரை - மிகுதியும் காப்பாற்றினோர்க்கு, கேடு - கெடுதியை, பிறரோடு - மற்றவரோடு, (பகைவரோடு) சூழ்தல் - ஆராய்ந்துசெய்தல், நினைப்பு இன்றி - (ஒருவர் தாம் விழுவோமென்னும்) நினைப்பு இல்லாமல் தாம் இருந்த - தாம் ஏறி உட்கார்ந்திருந்த, சினை - மரக்கிளையை குறைத்துவிடல் - வெட்டிவிடுதல் போலும்,—று.

கருத்து:—உபகாரஞ்செய்த ஒருவருக்கு அபகாரஞ்செய்தல், ஒருவர் தாம் விழுவோமென்னும் நினைப்பின்றித் தாம் ஏறிக்குந்தியிருந்த மரக்கிளையை வெட்டுதலை யொக்கும் என்பது.

நமர் - கிளைப்பெயர், நாம் பகுதி, அர் பலர்பால்விகுதி, பகுதி ஆ அவ்வானது குறுக்கல் விகாரம். பகுதி படர்க்கையில் தன்மை வந்த வழுவமைதி. புறந்தந்தார் - இறந்தகால வினையாலணையும் பெயர், ஒருசொல்லின் தன்மையாகிய புறந்தா பகுதி; புறந்தருதல்-முன்னின்றுகொடுத்தல் (உபகரித்தல்) கேடு முதனிலைதிரிந்ததொழிற்பெயர். கல்வெற்பு இருபெயரொட்டுப் பண்புத்தொகை. நீடுசினை வினைத்தொகை. நன்கு உரிச்சொல்.